## ஸ்வெட்டர் புதிதா?

# இல்லை — லக்ஸினால் சலவை செய்தது!

குளிர் காலத்துக்கான கம்பளித் துணிகள் — ஸ்வெட்டர்கள், கம்பளிச் சட்டைகள், ஸாக்ஸ், குழந்தைகளுக்கான அரிய ஆடைகள் — எல்லாமே மிக மென்மையானவை, குளிருக்கு அடக்கமானவை, அடிக்கடி அணியப்பட வேண்டியவை. தூய, மென்மையான லக்ஸ் தூள்களால் அவற்றை அடிக்கடி சலவை செய்யுங்கள். கம்பளி ஆடைகளின் வர்ணம், வடிவம், மென்மை யாவும் பாதிக்கப்படாத வண்ணம் எல்லா அழுக்குகளையும் அகற்றுவது லக்ஸ். உங்கள் கம்பளித் துணிகளின் ஆயுளை நீடிக்கச் செய்வதற்கு நீங்கள் அவற்றிற்கு அளிக்க வேண்டிய விசேஷப் பராமரிப்பு — லக்ஸ் பராமரிப்பே.




**அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத் தோற்றம்<br>அளித்துக் காப்பது லக்ஸ்**

LX. 140-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தயாரிப்பு

# கல்கி

## பொருளடக்கம்

**அக்டோபர் 18, 1959**



"கல்கி" யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 19 | இதழ் 12

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விகாரி௵ ஐப்பசி 1௳

# பிரிட்டிஷ் தேர்தல்கள்

பிரிட்டிஷ் தொழிற்கட்சியினர் பத்து ஆண்டுகளுக்கு முன் பதவிக்கு வந்தனர். அவர்கள் பதவியிலிருந்தபோது இந்தியா சுதந்திரம் பெற்றது. அதனால் பிரிட்டிஷ் தொழிற்கட்சியினிடம் இந்திய மக்களுக்கு அனுதாபம் உண்டு.

ஆனால் அவர்கள் உள்நாட்டுக்கொள்கை விஷயத்தில் சோஷலிஸக் கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பவர்கள். அவர்கள் பதவிக் காலத்தில் பிரிட்டிஷ் எக்கு தொழிற்கூடங்களைத் தேசிய மயமாக்கினர். நிலக்கரி எடுக்கும் தொழிலைத் தேசிய மயமாக்கினர். இதுபோல் இன்னும் பல சோஷலிஸ நடவடிக்கைகளை மேற்கொண்டனர். மக்களுக்கு நன்மை விளையும் என்றுதான் மேற்கொண்டனர். பிரிட்டிஷ் தொழிற் கட்சிக்குச் சோஷலிஸ்ட் கட்சி என்று பெயர் வழங்கி வந்தது. இப்பவும் அப்படியே வழங்கி வருகிறது.

அடுத்த தேர்தலில் சோஷலிஸ்ட் கட்சி தோல்வியுற்றது. பிரிட்டிஷ் மக்கள் கன்ஸர்வேடிவ் கட்சியைத் தேர்ந்தெடுத்தனர். கன்ஸர்வேடிவ் கட்சியினர் தொழிற் கட்சியினர் செய்த காரியங்களை யெல்லாம் மாற்றினர். சர்க்கார் உடைமையாக இருந்தவற்றைத் தனியார் துறைக்கு மாற்றினர். இப்படி அவர்கள் தனியார் துறைக்குப் பேராதரவு கொடுத்தனர். நாட்டில் தொழில்கள் பெருகின. நாட்டுச் செல்வம் பெருகியது. சுபிட்சம் வளர்ந்தது. சோஷலிஸமில்லாமலே மக்கள் சந்தோஷமாகவும் சுபிட்சமாகவும் வாழ்ந்தனர்!

கன்ஸர்வேடிவ் கட்சி தவறு செய்யாமலில்லை. அனுவசியமாக சூயஸ் கால்வாய் சம்பந்தமாக எகிப்துடன் சண்டைக்குப் போய் வேண்டிய அளவு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் கெட்ட பெயர் சம்பாதித்துக் கொண்டது. பிரிட்டிஷ் மக்கள் அவமானமடைந்தனர். கன்ஸர்வேடிவ் கட்சியின் மீது அவர்கள் அடைந்த கோபம் இவ்வளவு அவ்வளவல்ல! இருப்பினும் அவற்றை யெல்லாம் மறந்துபோய், இந்தத் தேர்தலில் பிரிட்டிஷ் மக்கள் கன்ஸர்வேடிவ் கட்சியையே தேர்ந்தெடுத்தனர்.

உள் நாட்டில் மக்களுக்குச் சுபிட்சத்தை கன்ஸர்வேடிவ் கட்சிக் கொள்கைகளே உண்டாக்கித் தருகின்றன என்ற திட நம்பிக்கை மக்களுக்கு ஏற்பட்டுள்ளதே இதற்குக் காரணம்.

கன்ஸர்வேடிவ் கட்சியின் ஆட்சியில், பணக்காரர்கள் அதிக பணக்காரர்கள் ஆகியிருக்கின்றனர் என்றெல்லாம் தொழிற் கட்சியினர் பிரசாரம் செய்தனர். சோஷலிஸப் பிரசார தந்திரத்துக்குப் பிரிட்டிஷ் பொதுமக்களும், தொழிலாளர்களும் ஏமாறத் தயாராயில்லை என்பதை மிக அழுத்தம் திருத்தமாகக் காண்பித்து விட்டனர். முன் எப்பொழுதும்விட மிக அதிகமாக கன்ஸர்வேடிவ் கட்சி அபேட்சகர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கின்றனர். நிச்சயமாகத் தொழிற் கட்சி அபேட்சகர் வெற்றியடையக் கூடும் என்றிருந்த தொகுதிகளில் கூட, கன்ஸர்வேடிவ் கட்சியினரைப் பிரிட்டிஷ் தொழிலாளர்கள் தேர்ந்தெடுத்திருக்கின்றனர். இதிலிருந்து உலக மக்களின் சிந்தனையில் புதிய திருப்பம் ஏற்பட்டிருக்கிறது என்பதை உணரலாம்.

ராஜாஜி நம் நாட்டுக்கு ஒரு கன்ஸர்வேடிவ் கட்சி வேண்டும் என்று சொன்னபோது நம் பிரதம மந்திரி நேரு தமக்குக் 'கன்ஸர்வேடிவ்' என்ற பதமே பிடிக்கவில்லை என்று சொன்னார்.

பிரிட்டிஷ் பண்பாட்டையும் வாழ்க்கை முறையையும் பாதுகாக்கும் கொள்கையுடையோர் 'கன்ஸர்வேடிவ்' கட்சியினர்.

ஆனால் எதிர்க்கட்சிப் பிரசாரத்தினால் கன்ஸர்வேடிவ் கட்சியினர் புதிய சமுதாய மாறுபாடுகளை ஏற்க முன் வராததால் 'குறுகிய மனப்பான்மையினர்' என்ற பொருள் ஏற்படலாயிற்று. கன்ஸர்வேடிவ் கட்சி என்பதற்குக் குறுகிய மனப்பான்மையினர் என்ற கேலியும் பரிகாசமும் கொண்ட பொருள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஏற்பட்டது.

அந்தப் பொருள் இருபதாவது நூற்றாண்டு ஆரம்பத்திலும் தொடர்ந்து இருந்து வந்தது. அந்தக் காலத்தில் பிரிட்டனில் படித்த நேருஜிக்கு அந்தப் பொருள்தான் மனத்தில் நின்றது. அதனால், ராஜாஜி நம் நாட்டுக்கு கன்ஸர்வேடிவ் கட்சி வேண்டும் என்று சொன்னதும், அந்த வார்த்தையின் உண்மைப் பொருளை உணராமல், தாம் ஆதிநாட்களில் பெற்ற அருவருப்பை மட்டும் காண்பித்துக் கொண்டார்.

'கன்ஸர்வ்' என்பதற்கு ஒரு பொருள் அழிந்து போகாமல் பாதுகாத்தல் என்று அர்த்தம். இந்த அர்த்தத்தை பிரிட்டிஷ் மக்கள் நன்கு புரிந்து கொண்டிருக்கின்றனர்.

கன்ஸர்வேடிவ் கொள்கைகளில்தான் நிலையான சுபிட்சம் இருக்கிறது என்பதைப் பிரிட்டிஷ் பொது மக்கள் கண்டார்கள். அதனால் கன்ஸர்வேடிவ் கட்சியைத் தொடர்ந்து தேர்ந்தெடுத்து வந்திருக்கின்றனர்.

கன்ஸர்வேடிவ் கட்சியைப்போல் நம் நாட்டுப் பண்பாட்டைக் காக்க ஒரு கட்சி வேண்டும் என்று சொன்னால் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள் என்று நேருஜி பழிக்கிறார். ஆனால் உண்மையில் யார் பழம் பசலியைச் சேர்ந்தவர்கள் என்பதை பிரிட்டிஷ் தேர்தல்கள் முடிவு கூறிவிட்டன.

"வகுப்புப் பூசல் என்பது வழக்கொழிந்து போய் விட்டது. இதுவே இந்தத் தேர்தலில் பெற்ற பாடம்" என்று பிரிட்டிஷ் பிரதமர் மாக்மில்லன் பத்திரிகை நிருபர்களிடம் சொன்னார்.

ஆனால் தம்மை மிக முற்போக்காளர்களாகக் கருதிக் கொள்ளும் நேருஜியும் ஸ்ரீமதி இந்திரா காந்தியும் 'வர்க்கப் போராட்டமும் வகுப்புத் துவேஷமும் நீக்க முடியாத தலைவிதியாகும்' என்று கூசாமல் பேசுகின்றனர். இதைக் காந்திஜியை நாட்டின் பிதா என்று போற்றும் மக்களிடையே கூறுவதைப் பேதைமை என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது?

# சுதந்திரக் கட்சி

இதை விஜயதசமி யன்று எழுதுகிறேன். தண்டையார்பேட்டையிலும் பெத்துநாயக்கன் பேட்டையிலும் மாபெரும் கூட்டங்கள் நடைபெற்றன. திரளாக மக்கள் கூடித் தொண்டர்களுக்கு உற்சாகம் அளித்தார்கள். வெற்றிகரமாக எங்கும் வேலை நடைபெற்று வருகிறது.

கட்சியில் அங்கத்தினர்கள் திரள் திரளாகச் சேர வேண்டும். பொய்யும், மோசமும் வேண்டாம் என்று உறுதி கொண்டவர்கள் சேரவேண்டும். பதவியும் லாபமும் அரசியல் மூலம் சம்பாதிக்கலாம் என்ற எண்ணம் இல்லாதவர்கள் சேரவேண்டும். நாட்டு நிர்வாகம் நன்றாக நடக்க வேண்டும். மக்களின் குறைகளை அவ்வப்போது எடுத்து விளக்கி அந்தக் குறைகள் நீங்கச் செய்ய வேண்டும். நிர்வாகத்தில் தலையிட்டுத் தங்களுக்கு வேண்டியவர்களுக்குப் பரிந்து பேசிச் சூழ்ச்சி செய்யும் வழக்கத்தைச் சட்டசபை அங்கத்தினர்கள் அனுசரிக்கலாகாது என்ற உறுதி கொண்டவர்கள் நம் கட்சியில் சேரவேண்டும். தேர்தல்களில் லஞ்சம் கொடுப்பதும் வாங்குவதும் மகா பாவம் என்று உணர்ந்து அந்தகைய வியாபாரங்கள் நமக்கு வேண்டாம் என்று தங்கள் உள்ளத்தில் அந்தராத்மா அறிய சபதம் செய்து சுதந்திரக் கட்சியில் சேரவேண்டும்.

நான் சொல்வதெல்லாம் அவரவர் தத்தம் உள்ளத்தில் பதிவுசெய்து கொள்ளவும், தங்கள் தங்கள் சீலத்தைக் காத்துக் கொள்ளவும் பயன்பட வேண்டும். பிறருடைய குற்றத்தை ஆராய்வதில் அதைப் பயன்படுத்தலாகாது.

செல்வம் இருப்பினும் படாடோபமற்ற எளிய வாழ்க்கை நடத்தவேண்டும். தனக்கும் தன் சுற்றத்துக்கும் வேண்டியது போக எஞ்சிய செல்வம் சமூக சுகத்துக்குப் பயன்படத்தான் ஆண்டவனிடம் பெற்றது என்று காந்தியடிகள் உபதேசித்த உணர்ச்சியை வளர்க்க வேண்டும். சீலமும் சுதந்திரமும் ஓங்குக.

சக்ரவர்த்தி ராஜகோபாலாசாரி

சோஷலிஸம் வேண்டாம்
"இருபதாம் நூற்றாண்டின் போக்கு நாம் நினைத்தது போல் இல்லை போலிருக்கிறதே!"


இந்தியாவில்
நமது லட்சியம் சோஷலிஸ சமுதாயத்தை ஏற்படுத்துவதுதான்!


அமெரிக்காவில்
"சோஷலிஸம் என்றால் என்ன?"
காங்கிரஸ் சோஷலிஸத்துக்கு அர்த்தமே வேறு! நீங்கள் அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள்! கடன் கொடுங்கள்!

# என்ன சேதி?

## மந்திரியின் குழப்பம்

மந்திரி திரு சி. சுப்பிரமண்யம் அவர்களின் தர்மசங்கடத்தைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது.

ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்களும், கிருபளானி அவர்களும் காங்கிரஸில் சோஷலிஸம் இல்லையே என்று வெளியேறினர்களாம்! ராஜாஜியோ காங்கிரஸ் சோஷலிஸக் கொள்கையையும், கம்யூனிஸக் கொள்கையையும் கடைப்பிடித்து வருகிறது என்று சொல்லி வருகிறரே என்று அங்கலாய்க்கிறர்.

ஆனல் ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்களோ, சுதந்திரக் கட்சியை வரவேற்றர்.

இதை நினைத்துப் பார்த்தாராளுல் திரு சுப்பிரமண்யம் அவர்களின் குழப்பம் இன்னும் அதிகமாகி யிருக்கும். தலை இன்னும் வேகமாகக் 'கிறு கிறு' என்று சுற்றியிருக்கும்!

ஜெயப்பிரகாஷ் நாராயண் காங்கிரஸ் கட்சியை விட்டு விலகியதற்கும் ராஜாஜி சுதந்திரக் கட்சியை ஆரம்பித்ததற்கும் முக்கிய காரணம் காங்கிரஸ் உண்மையில், கபட நாடகமாடி வருவதுதான்!

சோஷலிஸபாணி என்று சொல்லிக் கொண்டு, காங்கிரஸ் தன் கட்சிக்கு வேண்டியவர்களுக்கெல்லாம் உதவி செய்வது மற்றவர்களைக் கொடுமைப் படுத்துவது என்ற கொள்கையை அனுஷ்டித்து வருகிறது. இதனல் காங்கிரஸில் சுயநலமிகளும், நயவஞ்சகர்களும் ஏராளமாகி விட்டனர். இந்தக் கொடுமையைக் காணச் சகியாமல்தான் ஜெயப்பிரகாஷ், கிருபளானி போன்றவர்கள் வருந்துகின்றனர்.

இப்போது நாகபுரி தீர்மானம் என்னும் பாம்பைக் கொண்டு வந்து விவசாய மக்களைக் கொடுமைப் படுத்துவதற்கு உடந்தையாக இருக்க முடியாது என்றுதான் பேராசிரியர் என். ஜி. ரங்கா காங்கிரஸைவிட்டு விலகினர். இதே காரணத்தினல்தான் ராஜாஜி சுதந்திரக் கட்சியை ஆரம்பித்தார்!

காங்கிரஸில் ஊழல் மலிந்து விட்டது என்பதைத் திரு சி. சுப்பிரமண்யம் அவர்களும் ஒப்புக் கொள்வார். பின் ஏன் அதை இன்னும் கட்டிக்கொண்டு அழ வேண்டும்?

## நேருஜியும் சோஷலிஸமும்

பிரதம மந்திரி நேரு அவர்கள் உண்மை விளம்பி. 'எனக்கும், ராஜாஜிக்கும் இருபது முப்பது ஆண்டுகளாகவே, கருத்து வேற்றுமையிருந்து வந்திருக்கிறது' என்ற உண்மையை ஒப்புக் கொண்டிருக்கிறர். அதுமட்டுமல்ல, முப்பது ஆண்டுகளாகவே, சோஷலிஸக் கொள்கையில் நம்பிக்கை வைத்து வந்திருப்பதாகவும் சொன்னர்.

மகாத்மாஜி, பட்டேல், ராஜன் பாபு உட்பட்ட அத்தனை காங்கிரஸ் தலைவர்களும் நேருஜியின் சோஷலிஸக் கொள்கையை ஒப்புக் கொள்ளவில்லை என்பதைக் காங்கிரஸ் சரித்திரத்தை அறிந்தவர்கள் நன்கு அறிவார்கள். ஆகையால் இந்த இருபது முப்பது வருஷங்கள் அது நடை முறைக்கு வரவில்லை.

நேருஜியின் மொழிகளிலிருந்தே நேருஜியின் சோஷலிஸக் கொள்கையை ராஜாஜி என்றுமே ஒப்புக் கொண்டதுகிடையாது என்பது புரியும்!

சென்ற ஆண்டு தமது பிறந்த தினத்தின் போது தமக்கு வந்த பல கடிதங்களைத் தொகுத்து ஒரு புஸ்தகமாக வெளியிட்டார். அந்தப் புஸ்தகத்தில் நேருஜி அந்த நாட்களில் சோஷலிஸக் கொள்கையைப் பிரசாரம்செய்து பேசிய பேச்சுக்கு ஆட்சேபனை தெரிவித்துக் காங்கிரஸ் செயற் குழு அங்கத்தினர்களாக இருந்த ராஜாஜி, பட்டேல், ராஜன்பாபு, கிருபளானி முதலிய ஏழு பேரும் செயற் குழுவிலிருந்து ராஜினமாச் செய்தார்கள் என்பது புரியும். ஆனல் மகாத்மா காந்தியடிகள் சோஷலிஸம் நடைமுறைக்கு வரவில்லையே என்று கூறிச் செயற்குழு அங்கத்தினர்களைத் தங்கள் ராஜினமாவை வாபஸ் பெறச் செய்தார்.

இதிலிருந்தே நேருஜியின் சோஷலிஸக் கொள்கைக்கு என்றுமே காங்கிரஸில் தீவிர எதிர்ப்பிருந்து வந்தது என்பது புலனகும். காங்கிரஸ் சோஷலிஸக் கொள்கையை ஆதி நாளிலிருந்தே ஆதரித்து வந்தது என்று சொல்வதெல்லாம் அர்த்தமற்ற பேச்சு!

காங்கிரஸில் பட்டேலின் மறைவுக்குப் பிறகு நேருஜியே ஏகபோக தலைவரான பின்னர் தான் காங்கிரஸில் சோஷலிஸக் கொள்கையே புகுந்தது. ஆவடி காங்கிரஸில் 'சோஷலிஸ பாணி சமுதாயம்' என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது! அந்தப் பாணி எந்த லட்சணத்திலிருக்கும் என்று முழு உருவம் எடுத்த பிறகுதான் மக்களுக்கே அதன் விபரீதம் விளங்கலாயிற்று. இப்பொழுதும் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் பயந்து பயந்து சோஷலிஸம் புகுத்தப்படுகிறது!

## காங்கிரஸின் தோற்றம்

சுதந்திரக் கட்சியில் ரிடையர்டு உத்தியோகஸ்தர்களும், முதியவர்களுமே இருக்கிறர்கள் என்று சொல்லி வருகிறர்கள் அல்லவா? இதற்குச் சென்ற ஞாயிற்றுக் கிழமை, அம்பத்தூரில் நடைபெற்ற சுதந்திரக் கட்சிக் கூட்டத்துக்குத் தலைமை வகித்த டாக்டர் வெங்கடேச ஐயர், காங்கிரஸ் கட்சிகூட, ஹ்யூம், வெடர் பர்ன் முதலிய ரிடையர்டு ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்களால்தான் அந்த நாட்களில் ஆரம்பிக்கப்பட்டது என்று சுடச் சுடப் பதில் அளித்தார்.

## ஒரு நஷ்டம்

கோவை சுதந்திரக் கட்சியின் தலைவர் திரு வி. ஸி. சுப்பையா கவுண்டர் அவர்கள் மாரடைப்பினல் திடீரென்று காலமானர் என்ற செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டோம். சுதந்திரக் கட்சி தோன்றும்போதே பலத்த பல எதிர்ப்புகளைத் தாங்கவேண்டி யிருப்பது போல் சற்றும் எதிர்பாராத கஷ்ட நஷ்டங்களையும் எதிர்பார்க்க வேண்டும் என்பது தான் இறைவன் திருவுள்ளம் போலும்.

வெள்ளிங்கிரிக் குடும்பம் கோவையில் மிகப் பிரசித்தமான குடும்பம். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் நாட்டு நலனுக்குரிய பணிகளில் என்றுமே முன்னணியிலிருந்து வந்திருக்கின்றனர். திரு வி. வி. சுப்பையா கவுண்டரின் தமையனரான திரு வி. வி. பழனிசாமி கவுண்டர் காங்கிரஸில் நீண்டகாலம் பணி ஆற்றியவர். சென்னை மந்திரி சபையிலும் மந்திரி பதவி வகித்து வந்தார். ஆனால் சுப்பையா கவுண்டர் அவர்களோ, அரசியலில் ஈடுபடாமல் விவசாயத்தையே முக்கிய பணியாகக் கொண்டு கவனித்து வந்தார். சமீபத்தில் காங்கிரஸ் விவசாயத் துறையில் புகுந்து கூட்டிச்சுவராக்கத் தொடங்கியவுடன் இனியும் சும்மா இருந்து பயனில்லை என்று கருதினர். நாகபுரி தீர்மானம் நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கும் என்று சுதந்திரக் கட்சி உருவாவதற்கு முன்பே பிரதமர் நேருஜி உதகமண்டலத்திலிருந்தபோது மகஜர் சமர்ப்பித்தார். நாட்டு விவசாயிகளின் நலன்களைப் பாதுகாக்க ராஜாஜி சுதந்திரக் கட்சி தொடங்கியவுடன் திரு வி. வி. சுப்பையா கவுண்டர் உற்சாகமாகச் சுதந்திரக் கட்சியில் பணி செய்ய முன் வந்தார்.



திரு வி. வி. சுப்பையா கவுண்டர்

பம்பாய் மகாநாட்டுக்குத் தமிழ் நாட்டுப் பிரதிநிதிகளில் ஒருவராக வந்திருந்தார். சமீபத்தில் ராஜாஜி கோவைக்குச் சென்றபோது, திரு வி. வி. சுப்பையா கவுண்டர் அவர்கள் முன்னணியில் நின்று சுதந்திரக் கட்சியைக் கோவையில் நிறுவுவதற்கான பணிகளில் உற்சாகமாக இருந்தார். கோவை சுதந்திரக் கட்சி அன்பர்களுக்கு திரு வி. வி. சுப்பையா கவுண்டரின் மறைவு ஒரு பெரும் பக்கபலத்தை இழந்தாற் போலிருக்கும்.

ஆயினும் கோவையில் சுதந்திரக் கட்சி ஆதரவாளர்களுக்குக் குறைவில்லை! அவர்கள் எல்லோரும் சேர்ந்து கோவையில் சுதந்திரக் கட்சியைப் பலப்படுத்துவதே திரு வி. வி. சுப்பையா கவுண்டர் அவர்களுக்கு நன்றி செலுத்தியதாகும்.

## புதிய கமிஷனர்

சென்னை நகர சபையின் புதிய கமிஷனராகப் பதவி ஏற்றிருக்கும் திரு ஆர். பாலசுப்ரமணியம் அவர்களை வரவேற்கிறோம். இந்தியாவின் மூன்றாவது பெரிய நகரமாக விளங்குவது சென்னை. ஜனத் தொகையும் பதினாறு லட்சத்திற்கு அதிகமாகப் பெருகி வருகிறது. நகரின் விஸ்தீரணமும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டு வருகிறது. இதற்கு ஏற்றவாறு நகரத்தின் அத்தியாவசியத் தேவைகளாகிய குடி தண்ணீர்வசதி, சாலைகள், சுகாதார வசதிகள் ஆகியவை பெருகவில்லை. அவசியத் தேவைகள் பூர்த்தியாகாமல் நகர விஸ்தீரணமும், ஜனத் தொகையும் பெருகிக் கொண்டு வருவதுதான் நகர சபை முன்புள்ள பெரிய பிரச்னையாகும். இதைத் தீர்த்து வைப்பதில் புதிய கமிஷனர் வெற்றிபெற வேண்டும். ஜில்லா கலெக்டராகப் பதவி வகித்து நேர்மையும், கண்டிப்பும் வாய்ந்த அதிகாரி என்று பெயர் பெற்றவர் திரு பாலசுப்ரமணியம். அந்தச் சிறப்புப் பெயருடன், சென்னையில் புதியதோர் வெற்றிபெற்று நற்பெயரையும் அவர் அடைவார் என நம்புகிறோம்.



திரு ஆர். பாலசுப்ரமணியம்

சென்னை நகரசபை அங்கத்தினர்களுக்கும் கமிஷனருக்கும் சுமுகமான நல்லுறவு ஏற்பட்டு, சென்னை நகரம் மேன்மேலும் முன்னேற வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம்.

## இசைப் போட்டிகள்

வழக்கம்போல் இவ்வாண்டிலும் 33-வது ஆண்டு மகாநாட்டை அனுசரித்து 1959, டிசம்பர் 23 முதல் 1960, ஜனவரி 3 வரையில் சென்னை சங்கீத வித்வத் சபை ஆதரவில் வாய்ப்பாட்டு, வாத்திய இசை இரண்டிலும் எல்லா அம்சங்களிலும் போட்டிகள் நடத்தப்படும். தமிழ் கீர்த்தனைகளிலும் தனியாக ஒரு போட்டி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. காலஞ்சென்ற "கல்கி" திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் ஞாபகார்த்தமாக திரு டி. சதாசிவம் அளித்துள்ள தம்பூரா, இப்போட்டியில் முதலிடம் பெறுபவர்க்குப் பரிசாக அளிக்கப்படும். மேலே குறித்த எந்தப் போட்டியிலாவது ராக ஆலாபனம் செய்வதில் சிறந்தவர் என்று கருதப்படுபவருக்கு "ராஜரத்னம் ஞாபகார்த்தப் பதக்கம்" பரிசாக வழங்கப்படும். போட்டிகளில் கலந்து கொள்ள விரும்புகிறவர்கள் சங்கீத வித்வத் சபைக் காரியாலயம், 115-இ. மௌப்ரீஸ் சாலை, ராயப்பேட்டை, சென்னை—14 என்ற விலாசத்துக்கு எழுதி விண்ணப்பத் தாள்களைப் பெற்றுக்கொண்டு, இதர விவரங்களையும் அறிந்து கொள்ளலாம்.

# ஆகாசவெடி!

"நேரில் பார்க்கும்போது அவலட்சணமாக இருப்பவர்கள் போட்டோவில் அழகாயிருப்ப துண்டு!"
—திருபர் மகாநாட்டில் மந்திரி பக்தவத்ஸலம்

சில மந்திரிகள் மக்களை நேரில் சந்திக்க மறுப்பதன் இரகசியம் இப்போது புரிகிறது!

❋

"இந்தியா சீனு எல்லை உள்ளவரை ஏதாவது தொல்லை இருந்து கொண்டுதான் இருக்கும்."
—லோக சபைத் தலைவர்

அந்தத் தொல்லைக்காவது ஒரு எல்லை இருக்கலாமா, வேண்டாமா?

❋

"இருதயம் நின்றுவிடும் நோய்க்குப் பெரிதும் வெள்ளைச் சர்க்கரையே காரணம் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்."
—மந்திரி மாணிக்கவேலர்

"கிடையாது! கடையில் சர்க்கரை கிடைக்கிறது என்ற செய்தி வந்தால்தான் இதயம் நின்றுவிடும்" என்கிறார் சர்க்கரைக்காக அலைந்து திரியும் ஒருவர்.

❋

"சென்னை நகரசபை, மிருகக்காட்சி சாலையில் வளர்க்க, கரடிகள் கொடுத்து உதவும்படி ரஷ்யாவைக் கேட்டிருக்கிறது."
—செய்தி

கரடியாகக் கத்தும் வரை ரஷ்யா மட்டும் இழுத்தடிக்கக் கூடாது!

❋

"நான் படிக்கும்போது சித்திரப் பாடத்தில் உபாத்தியாயர் 'சைபர்' மார்க்குதான் அளித்தார்."
—குழந்தைகள் விழா ஒன்றில் நேரு

வட்டமாகச் சித்திரம் எழுதிப் பழகத்தான் 'சைபர்' அளித்திருக்க வேண்டும்!

"புத்தபிட்சுக்களுக்கு பஸ்களில் இடம்தரக் கொழும்பில் பஸ் டிரைவர்கள் மறுக்கிறார்களாம்."
—செய்தி

பஸ்ஸுக்காகத் தவம் செய்வது பிட்சுக்களுக்குத்தான் முடியும் என்கிறார் சென்னை பஸ் பிரயாணி ஒருவர்.

❋

"ஓடும் ரயில் வண்டியில் சென்ற ஆண்டு அறுபத்து மூன்று குழந்தைகள் பிறந்திருக்கின்றன!"
—இந்திய ரயில்வே துறை

"சற்றுக் கூட உட்காராமல் காலை நீட்டிக்கொண்டு படுத்திருக்கிறீர்களே!" என்று இந்தப் புதுப் பிரயாணிகளோடு மட்டும் யாரும் சண்டை போட்டிருக்க முடியாது.

❋

"பிரிட்டிஷ் தேர்தலில், டட்லி தொகுதி வாக்காளர் மூவர் ஒட்டகத்தின்மீது சென்று 'வோட்டு' செய்தனர்."
— செய்தி

ஒட்டகத்தில் செல்லும்போது தங்களைவிட உயர்ந்த வோட்டர்கள் இருக்க முடியாது என்று இவர்கள் நினைத்திருக்க வேண்டும்.

❋

"தோசை சரியாக வார்க்கவில்லை என்று மனைவியைத் தாக்கிவிட்டு ஓடிய கணவன் பிடிபட்டான்."
—குமரிச் செய்தி

அவனைப் பிடித்தது, தண்டிப்பதற்காக இராது, தோசையைத் தின்ன வைப்பதற்காகவும் இருக்கலாம்.

❋

"சென்னையில் சில இடங்களில், காப்பிப் பொடி வாங்கக் கடும் வெயிலில் நிற்கவேண்டியிருக்கிறது."
—நகரச் செய்தி

மக்களை இப்படியும் வெயிலில் வறுத்தெடுப்பதற்குப் பதிலாகக் காப்பிக்கொட்டையையாவது வறுக்கிறதுதானே?

# ஒய்யாரமாக

நடந்து செல்லுங்கள்



பேபனி
4.75



மொக்காஸின்
3.25 - 3.95



ஏஞ்டேப்
10.50



ஜானி
5.50 - 9.50

விசேஷ காலங்களுக்காகப் பத்திரப் படுத்திய ஆடைகளை எடுத்து அணிவதற்கும், பாட்டாவினும் புதுப் புது ரகங்களில் பட்டுப்போல மிருதுவாக தயாரிக்கப்பட்டதும் பல்வேறு சந்தர்ப்பங்களுக்கு ஏற்றதாகவும் அமைந்துள்ள பாதரக்ஷைகளை அணிந்து ஒய்யார நடை நடந்து, கேளிக்கைகளில் ஈடுபட்டு, உல்லாச பிரயாணங் களுக்கு ஏற்ற காலம் இதுவே.



அனுராதா
8.95

**Bata**

பாட்டா ஷு கம்பெனி பிரைவேட் லிமிடெட்

# புதிய பிரதமரின் வாக்குறுதி

கொழும்பு, அக்டோபர் 8உ

புதிய பிரதம மந்திரி திரு விஜயானந்த தஹநாயகா இவ்வாரம் பத்திரிகை நிருபர்களை அழைத்து ஒரு மகாநாடு நடத்தினார். அவ்வமயம் நாட்டை எதிர்நோக்கியுள்ள பல பிரச்னைகளையும் அவற்றைச் சமாளிக்கத் தாம் எடுக்க உத்தேசித்திருக்கும் நடவடிக்கைகளையும் அவர் விளக்கிச் சொன்னார். இம் மாநாட்டில் சிறுபான்மை மக்களுக்கும் முக்கியமாகத் தமிழ் மக்களுக்கும் அவர் சில வாக்குறுதிகளை அளித்தார். இந்த வாக்குறுதிகளை அவர் நிறைவேற்றி வைப்பாரா? அல்லது இலங்கை அரசாங்கத்தின் நிறைவேற்றப்படாத பல வாக்குறுதிகளின் பட்டியலில் இவையும் சேர்க்கப்படுமா என்பது வேறு விஷயம். ஆனால் இந்த மகாநாட்டில் தமிழ் மக்களுக்குச் சென்ற சில ஆண்டுகளுக்கிடையில் அநீதி இழைக்கப்பட்டு வந்துள்ளதென்பதைப் பிரதம மந்திரி பதவியை வகிக்கும் ஒருவர் பகிரங்கமாக ஒப்புக்கொள்வது இதுவே முதன் முறையாகும். திரு தஹநாயகா சொன்னார்: "சிறுபான்மை மக்களும் முக்கியமாகத் தமிழ் பேசும் மக்களும் சென்ற சில ஆண்டுகளுக்கிடையில் நொந்துபோயிருக்கிறார்கள். அவர்களுக்கு ஏதாவது விவலங்கங்களோ அல்லது குறைகளோ இருப்பின் அவற்றை அகற்றுவதற்கு இயன்றதையெல்லாம் செய்வேன் என்பதை உறுதியாகச் சொல்லுகிறேன். தமிழ் மக்களின் மனப்புண்களை ஆற்ற என்னால் முடிந்ததையெல்லாம் செய்வதாக வாக்குறுதி யளிக்கிறேன். இந்நாட்டில் தமிழர்களும் சிங்களவர்களும் சேர்ந்து வாழ்ந்தே ஆகவேண்டும். வகுப்பு நல்லுறவைப் புனருத்தாரணம் செய்வதும் நாட்டில் அமைதியையும் கட்டுப்பாட்டையும் ஒற்றுமையையும் வளர்ப்பதும் எனது முதல் வேலையாக இருக்கும்." இவ்வாறு புதிய பிரதமர் திரு தஹநாயகா சொல்லியிருக்கிறார்.

## காரியத்தில் காட்ட வேண்டும்

தமிழரசுக் கட்சித் தந்தையான திரு எஸ். ஜே. வி. செல்வநாயகம் புதிய பிரதம மந்திரியின் வாக்குறுதிகளைப் பற்றி அபிப்பிராயம் சொல்லியபொழுது தமிழ் மக்கள் இதுவரையில் எவ்வளவோ வாக்குறுதிகளைக் கேட்டுக் கேட்டு ஏமாந்து போயிருக்கிறார்களென்றும் அவற்றைக் கேட்டு மறுபடியும் ஏமாறும் காலம் மலையேறி விட்டதென்றும் புதிய பிரதம மந்திரி உண்மையாகவே தமிழ் மக்களுக்கு இழைத்துள்ள அநியாயங்களைப் போக்கி நியாயம் செய்ய உத்தேசித்திருந்தால் அதைச் செய்கையில் செய்து காட்ட வேண்டுமென்றும் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்.

திரு செல்வநாயகம் இப்படிச் சொல்லிய அதே சமயத்தில் பிரதமர் கல்வி இலாகாவுக்கு ஒரு உத்தரவு பிறப்பித்திருப்பது விசேஷமாகக் கவனிக்கத் தகுந்தது. திரு தஹநாயகா கல்வி மந்திரியென்ற முறையில் பிறப்பித்த சில உத்தரவுகள் தொழில் நுட்பக் கல்லூரியில் தமிழ் மாணவர்கள் சேர்ந்து படிக்கக் கஷ்டங்களை உண்டு பண்ணுவதாகவுள்ளது. இதைப் பற்றித் தமிழரசுக் கட்சித் தலைவர்கள் கல்வி மந்திரியிடம் பலத்த புகார்களைச் செய்து கொண்டிருந்தார்கள். இப்பொழுது பிரதம மந்திரியாயி ருக்கும் திரு தஹநாயகா கல்வி இலாகாவுக்கு நேற்று அனுப்பியிருக்கும் ஒரு உத்தரவில், "நான் கல்வி மந்திரியாகக் கடமையாற்றிய சமயம் பிறப்பித்த உத்தரவுகளில் எதையேனும் தமிழ் மக்களுக்குக் கஷ்டம் விளைவிப்பவைகளாக இருப்பின் அவற்றை உடனே மாற்றி விடுங்கள். தொழில் கல்லூரியில் மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளும் விஷயத்தில் வகுப்பு வேற்றுமைக்கும் பாரபட்சத்துக்கும் இடமில்லாதபடி செய்யுங்கள்" என்று தெரிவித்திருக்கிறார். அதாவது திரு தஹநாயகா கல்வி மந்திரியென்ற முறையில் தமிழர்களுக்குப் பாதகமாகப் பிறப்பித்த உத்தரவுகளையெல்லாம் ரத்துச் செய்துவிடுமாறு பிரதம மந்திரியென்ற முறையில் இப்பொழுது உத்தரவு போட்டிருக்கிறார். அவர் இன்னமும் கல்வி மந்திரி பதவியை வகித்து வருகிறாரென்பது குறிப்பிடத் தகுந்தது. தமிழர்களுக்கு நியாயம் செய்யப்போவதாக அறிவித்ததையொட்டி மேற்படி உத்தரவை அவர் பிறப்பித்திருப்பது வரவேற்கத் தகுந்தது.

## பல்கலைக் கழகம்

தமிழ்ப் பல்கலைக் கழகத்தினர் புதிய பிரதம மந்திரி திரு தஹநாயகாவைப் பேட்டி கண்டு தமிழ் மக்களுக்கு ஒரு தனிப் பல்கலைக் கழகத்தை நிறுவிக் கொடுக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்த உத்தேசித்திருக்கிறார்கள். அவரது பேட்டியை நாடி அவருக்கு இவ்வாரம் ஒரு கடிதம் அனுப்பியிருக்கின்றனர். சமீபத்தில்தான் இரண்டு சிங்கள பௌத்த பல்கலைக் கழகங்களை அரசாங்கம் நிறுவிக் கொடுத்தது. அதேபோல் ஒரு தமிழ்ப் பல்கலைக் கழகத்தையும் நிறுவிக் கொடுக்குமாறு பிரதம மந்திரியிடம் கேட்பதென்று தமிழ்ப் பல்கலைக் கழகத்தினர் முடிவு செய்திருக்கிறார்கள். இதற்காக அவர்கள் பெருமளவில் ஏற்கனவே நிதி திரட்டி வருவதுடன் தமிழ்ப் பல்கலைக் கழகத்தைக் கட்டியெழுப்பத் திருகோண மலையில் அவர்கள் நிலமும் வாங்கியிருப்பது குறிப்பிடத் தக்கது.

## மூன்று உப தேர்தல்கள்

வவுனியாத் தொகுதியின் அங்கத்தினரான திரு சி. சுந்தரலிங்கம் இவ்வாரம் தமது பார்லிமெண்ட் ஸ்தானத்தை ராஜினாமாச் செய்து விட்டார். சில மாதங்களுக்கு முன்னால் வவுனியா பட்டின சபைக்குத் தேர்தல் நடந்தபொழுது அங்குள்ள மூன்று வார்டுகளில் அவர் போட்டியிட்டார். தமக்குத் தோல்வி ஏற்பட்டால் அரசியலிலிருந்து தாம் ஓய்வு பெற்றுவிடப் போவதாக அவர் அறிவித்திருந்தார். அந்தத் தேர்தல் அவருக்கும் தமிழ் அரசுக் கட்சிக்குமுள்ள பலப் பரிசோதனைபோல் நடந்தது. தேர்தலில்

தமிழரசுக் கட்சியினரும் அவர்களது ஆதரவாளர்களும் கம்யூனிஸ்டுகளுமே வெற்றி பெற்றனர். திரு சுந்தரலிங்கம் மூன்று வார்டுகளிலும் தோல்வி யடைந்தார். மக்கள் தமிழரசுக் கட்சியையும் கம்யூனிஸ்டுகளையும் பின்பற்றட்டும், அரசியலிலிருந்து நான் ஓய்வு பெற்று விடுகிறேன் என்று சொல்லி பார்லிமெண்ட் ஸ்தானத்தைத் துறந்துவிடப் போவதாக அறிவித்தார். அந்த அறிவிப்பைத் தழுவி இவ்வாறாம் அவர் ராஜினாமாச் செய்திருக்கிறார். இதனால் வவுனியா தொகுதி ஸ்தானமும், திரு வன்னியசிங்கத்தின் அகால மரணத்தினால் கோப்பாய் தொகுதி ஸ்தானமும், பிரதமர் பண்டாரநாயகா கொலை செய்யப்பட்டதால் அத்தனகலை ஸ்தானமும் காலியாகி யிருக்கின்றன. இம் மூன்று ஸ்தானங்களுக்கும் விரைவில் உப தேர்தல்கள் நடைபெற விருக்கின்றன. தமிழ்ப் பகுதிகளில் நடக்கும் இரு உப தேர்தல்கள் தமிழரசுக் கட்சிக்கும் அத்தனகலைத் தொகுதியில் நடக்கும் தேர்தல் அரசாங்கக் கட்சிக்கும் என்வளவு தூரம் மக்களிடம் ஆதரவு இருக்கிறதென்பதை வெளிப்படுத்துவதாக இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. —ரஜனி

சுதந்திரக் கட்சி - கொள்கை விளக்கம் :

# தனித் தொழிலாளியே சுதந்திரத்தைக் காப்பான்

"தனித் தொழிலாளன்" என்பது நம் நாட்டின் அடிப்படையான ஒரு வாழ்க்கை வழியைக் குறிக்கிறது. பத்தாயிரம் 'ஸ்பிண்டில்' உள்ள பெரிய நெசவு ஆலையில் வேலை செய்பவன் தொழிலாளி. தன் வீட்டில் தறி வைத்துத் தானே நூல் வாங்கி நெய்பவன் தனித் தொழிலாளி. அவன் ஒருவர் கீழ் வேலை பார்ப்பவன் அல்லன். தனக்குத்தானே முதலாளி. அது போலவே பெரிய கடையில் வேலை செய்பவன் தொழிலாளி. தானாக ஒரு சிறு கடை வைத்து வாழ்க்கை நடத்துபவன் தனித் தொழிலாளி. கொத்து வேலைக்காரன், ஆசாரி, தட்டான், கருமான் இவர்கள் எல்லோரும் தனித் தொழிலாளிகள். எல்லோரையும்விடப் பெருவாரியான தனித் தொழிலாளி தன் நிலத்தைத் தானே சாகுபடி செய்யும் விவசாயி.

தனித் தொழிலுக்கு என்ன பெருமை? முதலாவது அவனுடைய முயற்சி ஏற ஏற வருமானமும் ஏறும். ஆகவே தனித் தொழிலாளி "தினத்துக்கு ஆறு மணி நேரம்தான் வேலை செய்வேன்" என்று சண்டை போடமாட்டான். மேலும் அவனுடைய மனைவி மக்கள் எல்லோரும் வேலையில் உதவி புரிவார்கள். ஒவ்வொருவருக்கும் வேண்டியவாறு சாமான்களைச் செய்வான். ஒரு பெரிய கம்பெனியில் வாங்கும் செருப்புக்குத் தகுந்தவாறு நாம் காலைச் சரிப்படுத்திக் கொள்ள வேண்டி வருகிறது. ஆண்டுக்கு நாலு ஜோடி வாங்குவதும் சகஜமாகி விட்டது. நாட்டுப்புறத்து வேலையாள் நமது கால் அளவை எடுத்துக் கொண்டு போய்த் தைக்கும் செருப்பு வெகு நாட்கள் உதவும்.

சில்லறைக் கடைக்காரன் தன் வீட்டுக்கு முன் பாகத்திலேயே கடையை வைத்திருப்பான். அவனுக்கு நாற்காலி, மேஜை, ஜாபிதா, ரசீது புத்தகம் ஒன்றும் வேண்டாம். குறைந்த விலைக்குப் பொருளை வாங்கிக் குறைந்த லாபத்துக்கு விற்பனை செய்கிறான். சில்லறை வியாபாரிகளால் ஏழைகளுக்கு எவ்வளவோ நன்மை.

தனித் தொழிலாளி தனி கௌரவம் படைத்தவன். மற்றவர் நிந்திப்பதைப் பொறுக்க மாட்டான், அவமானத்தை அனுமதிக்க மாட்டான். உரிமைக்கு வேண்டிச் சண்டை செய்வான். ஜனநாயக ஆட்சிக்கு இவர்கள்தான் ஆதாரம். பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற வெளிநாடுகளில் தனிமைத் தொழிலாளிகள்தான் சுதந்திரப் போர் செய்து கொடிய அரசர்களை அகற்றினர். இவர்களுள் தனிச் சாகுபடி செய்யும் சிறிய குடியானவன் மிகவும் முக்கியமானவன்.

மற்றவரிடம் கைகட்டி நின்று பெரிய ஆலையில் சிறிய வேலை செய்தும், கூட்டுப் பண்ணையில் கூலிக்குப் போர் அடித்தும் வயிற்றை வளர்க்கும் தொழிலாளியைவிட, தனக்குத்தானே முதலாளியாயிருக்கும் விவசாயியையும், சிறுதொழில் செய்து வாழ்க்கை நடத்துபவரையும் காப்பாற்றினால்தான் ஜனநாயகமும் சுதந்திரமும் நிலைக்கும். இல்லையேல் ஓட்டுரிமை மட்டும்தான் ஏழைக்குச் சொத்து.

சிறிய தனித் தொழிலாளியைப் பெரிய ஆலைகளும் வியாபாரிகளும் கூட்டுறவும் விழுங்காவண்ணம் காப்பது சுதந்திரக் கட்சியின் கொள்கையாகும்.

# சங்கடம் தீர்ந்தது

ஸ்ரீமான் சங்கடஹரனுக்கு ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டது. காரணம் வரப்போகும் தீபாவளியைப் பற்றிய கவலை. அவருடைய தலையில் இருந்த ஓரிரு கரிய கூந்தல் குறுத்துகளையும் வெள்ளியாக்கிவிட்டது. அவருடைய பழைய மாப்பிள்ளை இரண்டு பேரும், புது மாப்பிள்ளையும், பெண்களும், குழந்தை குட்டிகளுடன் இந்தத் தீபாவளிக்கு அங்கேயே வந்துவிடுவதாக நோட்டீஸ் கொடுத்திருந்தார்கள். போதாதற்குப் பட்டணத்தில் கலாசாலையில் படிக்கும் பிள்ளை வேறு வருவான். இவர்களுக்கு எல்லாம் தீபாவளிக்குப் புது ஜவுளி எடுத்தாக வேண்டும். அதில் ஒவ்வொருவரும் ஒரு தனி மோஸ்தர் ஆசாமி. இவர்களை திருப்தி செய்வது எப்படி என்பதே சங்கடஹரனுக்குத் திகிலாக இருந்தது.



இந்த மாதிரி சங்கட நிலைமையில்தான் ஸ்ரீ சங்கட ஹரனுடைய ஆப்த நண்பர் ஆபத்சகாயம் வழக்கம்போல் வந்துசேர்ந்தார். "என்ன ஹரன்! நெற்றிச் சுருக்கம் இன்னும் நாலு மடிப்பு அதிகமாகி இருக்கிறதே! கவலைக்குறி கண்ணில் ததும்புகிறதே! என்ன நடந்து விட்டது?" என்றார். ஸ்ரீ சங்கட ஹரன் தமது தீபாவளி சங்கடத்தைச் சொல்லி பெருமூச்சு விட்டார்.

"அட! பைத்தியக்கார மனுஷா! இதற்காகவா இப்படிக் கவலைப் படுகிறீர்! ரொம்ப எளிதான உபாயம் சொல்கிறேன் கேட்பீரா?" என்றார் ஆபத்து சகாயம்.

"சொல்லு! நீதான் சமய சஞ்சீவியாக யோசனை சொல்வாயே" என்றார் சங்கட ஹரன்.

"பேசாமல் முதல் தரமான சுத்தக் கதரிலேயே உங்கள் குடும்பத்துக்கு, இந்த தீபாவளிக்கு வாங்கிப் போடுங்கள்!" என்றார் ஆபத்து சகாயம்.

"கதரா! இந்த பலசரக்கு குடும்பத்துக்குக் கதர் வாங்கிக் கட்டுமா? மூலைக்கு ஒன்றாக நிற்கிற பிரகிருதிகள் ஒவ்வொருவருக்கும் ஒரு அலாதி தினுசு வேண்டும். மற்ற எல்லோரும் ஒப்புக் கொண்டாலும் என் வீட்டுக்காரி இருக்காளே தனக்கும் தன் பெண்களுக்கும் காஞ்சீபுரம் பட்டுப் புடவையைத் தவிர வேறு எதையும் கையால் தொடமாட்டாளே!" என்று தயங்கினார் சங்கட ஹரன்.

"உங்களைப் போல தயங்குகிறவர்களுக்காகத்தான் இப்போது ரூபாய்க்கு ஐந்தணா தள்ளிக் கொடுக்கிறார்களே, தீபாவளிக்காக விசேஷமாக இரண்டணா 'ரிபேட்' சேர்த்து! உங்கள் மாப்பிள்ளைகளுக்கு நல்ல ஜரிகைக் கதர் அல்லது கதர்ப் பட்டு வேஷ்டி, அங்கவஸ்திரம் வாங்கலாம். குழந்தைகளுக்கு நல்ல புதிது புதிதான வர்ணங்களில் அச்சுப் போட்ட வகைகள் கதரில் கிடைக்கின்றன. வேண்டுமானால் 'ரெடிமேட்' ஆகவே வாங்கலாம். உங்கள் மனைவி, பெண்களுக்கு முதல் தரமான கும்பகோணம், காஞ்சீபுரம், ஆரணி, தேனூர் பட்டு ஜரிகைப் புடவைகள் கதரில் கிடைக்கிறது. எந்த மோஸ்தர் வேண்டுமானாலும்!" என்று ஆபத்சகாயம் விவரித்ததும் சங்கட ஹரனுக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது.

"நிஜமாகவா? கதரில் இதெல்லாம் கிடைக்கிறதா? எங்கே?" என்று கேட்டதும், ஆபத்சகாயம், "சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையம் தான் இப்போது எங்கும் வைத்திருக்கிறார்களே! நம் ஊரில்கூட இருக்கிறதே" என்றார்.

"அடடா! இத்தனை நாள் தெரியாமல் போய்விட்டதே! சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையத்துக்கு அழைத்துப் போகிறாயா?" என்று சங்கட ஹரன் கேட்டுக் கொண்டார். ஆபத்சகாயம் நல்ல காரியம் செய்வதில் தயங்குபவரில்லை. ஆகவே அன்று சாயங்காலமே தம் நண்பரையும், அவரது மனைவியையும் **சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையத்துக்கு** அழைத்துப் போனார்.

அங்கு கண்ணைக் கவரும் கதர் ரகங்களைக் கண்டு சங்கட ஹரன் தம்பதிகள் அதிசயித்தது மட்டுமில்லை தங்கள் குடும்பத்துக்கு வேண்டிய தீபாவளி ஜவுளிகளையும் அதிக செலவில்லாமலே எடுத்து விட்டார்கள். அது மட்டுமல்ல அவர்கள் மாப்பிள்ளைகள், பெண்கள், பிள்ளை, குழந்தைகள் யாவரும் திருப்தியோடு மகிழ்ச்சியும் அடைந்தார்கள்.

நீங்களும் ஹரன் குடும்பத்தாரைப் போல் தீபாவளிக்குக் கதர் வாங்கி மகிழ்ச்சி அடையுங்கள்.

---

உங்கள் சேவைக்காக காத்திருக்கும் **சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையங்கள்**:

சென்னை நகரில்: 86, பிராட்வே, 60, வாலாஜா ரோடு, 22, தியாகராய ரோடு, 82, ராயப்பேட்டை ஹைரோடு, 3, பைக்கிராப்ட்ஸ் ரோடு, 6, தாணா தெரு.

மற்றும் கீழ்க்கண்ட ஊர்களில்: காஞ்சீபுரம், வேலூர் திருவண்ணாமலை, கடலூர், சிதம்பரம், விழுப்புரம், கும்பகோணம், நாகப்பட்டினம், மாயவரம், திருச்சிராப்பள்ளி, கரூர், சேலம், கிருஷ்ணகிரி, கோயமுத்தூர், திருப்பூர், பொள்ளாச்சி, ஈரோடு, கோபிசெட்டிபாளையம், உதகமண்டலம், காரைக்குடி, விருதுநகர், மதுரை, டி. கல்லுப்பட்டி, கோடைக்கானல், திருநெல்வேலி, தூத்துக்குடி, நாகர்கோயில்.

**சென்னை அரசாங்க காதி இலாகா**



# ஒன்று



# இரண்டு

# மூன்று . . .



என்று நீங்கள் அறுபதுவரை எண்ணி முதல்
நிமிடம் முடிவதற்குள், 5000 நபர்கள்
சிஸர்ஸ் சிகரெட்டை பற்ற வைத்திருப்பார்கள்.



பத்து நிமிட நேரத்திற்குள் 50000 நபர்கள் சிஸர்ஸ்
சிகரெட் புகை பிடித்துக்கொண்டிருப்பார்கள்.

ஏன் சிஸர்ஸ் சிகரெட் இவ்வளவு காலமாக
இந்திய மக்களின் பாராட்டுதலை
பெற்றிருக்கிறது? ஏனென்றால் நிச்சயமாக
இந்த சிகரெட்டுகள் நல்லவை.






வில்ஸ்

# சிஸர்ஸ்

இதுதான் மதிப்பிற்குரிய சிகரெட்

10 சிகரெட்டுகள் 30 ந.பை.

தி இம்பீரியல் டுபாக்கோ கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்டால் வெளியிடப்பட்டது.

# வட்ட மேஜை

## நிலைமை மாறுமா?

நமது ராஜ்யத்தில் ஏழை மக்கள் உணவுப் பொருள்களை வாங்கிச் சாப்பிடும் காலம் இனி வராது என்று நினைக்கும் அளவுக்கு விலை வாசிகள் ஏறிவிட்டன. மல்லி முதல் சீனி வரை, அளவுக்கு மீறிய விலையில் விற்கின்றனர். சீனி வாங்க 'கியூ'வில் நின்று நெருங்கும்போது 'ஸ்டாக்' இல்லை என்று சொல்லி விடுகிறார்கள்.

சீர்காழி
5—10—59
கே. வி. ரங்கநாதன்

✲

## என்ன பயன்?

'தொழிற் பயிற்சி பெற்றவர்கள் போதிய அளவு இல்லாத காரணத்தால் தொழில் வளர்ச்சி தடைப்படுகிறது; பயிற்சி பெற்றவர்கள் ஏராளமாகத் தேவை' என்று அடிக்கடி நமது அரசினர் கூறி வருகின்றனர். ஆனால் பயிற்சி பெற்றவர்கள் படும் அவதி சொல்லும் தரமன்று.

நான் மூன்று வருட ஜெனரல் மெக்கானிக் படித்து, புனாவிலுள்ள நமது பாரத சர்க்காரின் தொழிற் பிரிவைச் சேர்ந்த பயிற்சிக் கூடத்தில் இன்ஸ்ட்ரக்டர் பயிற்சி பெற்றுத் தேறி இருக்கிறேன். மாதங்கள் ஐந்து முழுமையாகச் சென்று விட்டன. வேலை வாங்கித் தரும் ஸ்தாபனமான எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சில் என் பெயரைப் பதிவு செய்து கொண்டேன்; பதில் இல்லை. பாரதத்தின் மாபெரும் தொழிற்சாலைகளுக்கு மனுச் செய்தும் பலன் இல்லை.

மீசனூர்
4—10—59
டி. சீனிவாசன்

✲

## குறை நீங்க வழி!

இன்று நாட்டிலே காங்கிரஸ் ஆட்சியில் நடுத்தர மக்களும் ஏழைகளும் படும் தொல்லைகளுக்கு எல்லையே யில்லை.

மத்திய உணவு மந்திரி திரு பட்டீல் அவர்கள் "ஆரம்பத்திலிருந்தே நாட்டில் உணவுப் பொருள்கள் பற்றாக்குறையே யில்லை. அரிசியும் சர்க்கரையும் உற்பத்தியளவில் பெருகியுள்ளன. ஜனப்பெருக்கம் உணவுப் பெருக்கத்தைவிடக் குறைந்துதான் உள்ளது. ஆகவே சர்க்காரைக் குறை கூறுவது நல்லதல்ல" என்கிறார். ஆனால் இன்றும் நெல்லூர் அரிசி படி 1—1—0 ஆகவும் 1—5—0 ஆகவும் விற்கக் காண்கிறோம். பதுக்கலும் அதிகமாக உள்ளது. சர்க்கரை கள்ளமார்க்கெட்டில் ரூ. 2—8—0க்குக் கூட கிடைக்கவில்லை.

இத்தகைய நிலையில் மந்திரியின் பேச்சு இதயத்தில் நெருப்பைக் கொட்டுவதுபோல் இருக்கிறது. இந்நேரத்தில் நம் அரும் பெரும் தலைவர் ராஜாஜி அவர்கள் ஆட்சிபீடத்தில் இருந்திருந்தால் இத்தகைய கொடிய விலைவாசி ஏற்றமும் பற்றாக்குறையும், பதுக்கலும் ஏற்பட்டிருக்குமா? நிச்சயமாக இராது. எனவே தலைவரின் நல்லாசியால் துவக்கப்பட்ட "சுதந்திரக் கட்சி"யில் நாட்டு மக்கள் பெரும் பங்கு கொண்டால் நமது குறைகளும் கஷ்டங்களும் நீங்கும். சுதந்திரக் கட்சிக்குப் பூரண ஆதரவு தமிழ் நாட்டிலும் இந்தியாவின் பல பாகங்களிலும் பொங்கி வழிவதைக் கண்டு, ஆறுதலடைந்து, எதிர்காலத்திலாவது சுபிட்சமடைவோம் என்ற நம்பிக்கையில் தான் நாம் சாந்தமடைய வேண்டும்.

சென்னை
3—10—59
சகுந்தலா வி. ராகவன்

✲

## அநீத விலை!

நியாய விலைக் கடைகள் மூலம் அரிசி விநியோகம் சம்பந்தமாக அரசாங்கம் வெளியிட்டிருக்கின்ற அறிக்கை பொதுமக்களை ஏமாளிகள் என்று எண்ணுவதாகும்.

மூட்டை ஒன்றுக்கு ஆகும் செலவு ரூ. 1—87 என்று கணக்கு காண்பித்திருக்கிறார்கள். எடுபிடிச் செலவுகள் மட்டும் சொல்லப் பட்டிருக்கின்றன. முக்கியமான செலவு, மூட்டைகளுக்கான ரயில்வே கட்டணம்தான். இது தென்கோடியிலிருந்து வடகோடிக்கு வந்தாலும் சரி, ரூபாய் மூன்றுக்கு மேல் நிச்சயம் ஆக முடியாது.

விற்பனை விலையோ பட்டணம் படி ஒன்றுக்கு ரூ. 0—56, அதாவது 2 மணங்கு கொண்ட மூட்டை (சுமார் 48 பட்டணம் படி கொண்டது) விற்கப்படும் விலை ரூ. 42—24. ஆக, அரசாங்கத்தின் கணக்குப்படிக்கே, கொள் முதல் கிரயம் ரூ. 34 ம் செலவு வகை 1—87ம் சேர்ந்து ரூ. 35—87 போக, கிடைக்கும் ரூபாய் 6—37 ல் ரயில்வே சார்ஜ் ஆவதைத் தவிர பாக்கித் தொகைகள் என்ன ஆகின்றன?

கும்பகோணம்
6—10—59
ச. பாலசுப்பிரமணியம்



திருச்சி ஜில்லா மயில்ரங்கம் மிராசுதார் ஸ்ரீஎம். வி. முத்துசுவாமி அய்யர் குமாரர் திரு விச்வநாதனுக்கும் ஹைதராபாத் போலீஸ் ஆபீஸ் சீனியர் சூபரின்டெண்ட் ஸ்ரீ சீனிவாசய்யர் புதல்வி சௌ. லலிதாவுக்கும் திருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணாஸாமி பாகவதரின் இல்லத்தில் விவாகம் விமரிசையாக நடந்தது.

## வட ஆர்க்காடு மாவட்டச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றகதை

மேலை வானினின்றும் எழுந்து பகலை விழுங்க வரும் இரவின் செந்நிற வாயினுள் கதிரவன் மறைந்து கொண்டிருந்தான். நிலப் பரப்பில் இருள் கவிய இன்னும் நேரம் இருந்தது. மஞ்சள் பூசி நீராடி வரும் சுமங்கலிப் பெண்ணின் முகத்தைப்போல் வானத்தின் மேற்கு பக்கத்தில் அந்திச் சூரியனின் பொன்னொளி மின்னித் தகதகத்துக் கொண்டிருந்தது. பகல் நேரத்து வெம்மை உமிழும் வெய்யிலில் வரப் பயந்த நகரத்து மக்களில் பெரும்பான்மையினர் இதமான அந்த நேரத்தில் சற்றே நிம்மதியுடன் வரப் போகத் தொடங்கினர்.

காட்பாடியிலிருந்து வேலூர் வந்தடையும் பெருஞ்சாலையில் தன் சைக்கிள் ரிக்ஷாவைச் சவாரியின்றி ஓட்டிவந்த வேலன், தோட்டப்பாளையம் 'நேஷனல் தியேட்ட'ரின் அருகில் வந்ததும், சற்று இளைப்பாற எண்ணியவனாகப் பாதையின் ஓரத்தில் ரிக்ஷாவை நிறுத்தி விட்டு, அங்கிருந்த ஒரு மரத்தடிக்கு வந்து, முகத்தில் படிந்திருந்த தூசித் துகளையும், வியர்வை முத்துக்களையும் தலையில் கட்டியிருந்த முண்டாசுத் துணியை எடுத்துத் துடைத்து விட்டுக்கொண்டு 'உஸ்' என்ற ஒரு நெடு மூச்சையும் விட்டான். அதில் நாளெல்லாம் மாடு போல் அவன் உழைத்ததன் உஷ்ணமும் கலந்து வெளி வந்தது.

அந்த மரத்தடியிலேயே அவித்ததும், நெருப்பிலிட்டுச் சுட்டதுமான மக்காச் சோளக் கதிர்களைக் குவை குவையாக வைத்து விற்பனை செய்து கொண்டிருந்த செல்லம்மாள், அவன் வந்து நின்றதைக் கவனித்ததாகவோ, கவனித்திருந்தாலும் பொருட்படுத்தியதாகவோ தெரியவில்லை.

சற்று நேரத்துக்குப் பின் வேண்டா வெறுப்பாக அவனைப் பார்ப்பவளைப் போல் நிமிர்ந்து பார்த்து விட்டு, "இன்னு, வந்த மனுசன் 'சோளக் காட்டுப் பொம்மை' யாட்டமா நின்னுகினே இக்கிறியே? குந்தேன். சோளந் துன்றியா? புகச்கண்ணமங்கலத்து கதிரு;



லதா...

A♥

# வாழ்வளித்தவள்

'அன்பன்'

இந்தா. துன்னு பாரேன்!'' என்று படபட வென்று தனது விற்பனைப் பொருளின் உயர்வையும், சுவையை யும் சொல்லி முடித்து. அவன் வாயைத் திறக்கும் பொழுதே 'மளா' ரென்று புளிய மரத்தின் அடிப்பாகத் தோடு முதுகைச் சாய்த்தவாறு மண் ணில் அமர்ந்து விட்ட வேலனின் மடியில் சூடு ஆறாத இரண்டு கதிர் களைத் தூக்கிப் போட்டாள்.

'சோளக் காட்டுப் பொம்மை' என்று ஒரு பெண் தன்னை நையாண்டி செய்வதைக்கூடப் பொருட் படுத்தா மல், உணர்ச்சியற்றவனாக, அவன் வீசிய கதிர்களில் ஒன்றையெடுத்து, இரு கைகளின் மத்தியில் வைத்து அதன் மேல் பிடித்திருந்த சாம்பல் உதிர உருட்டித் தேய்த்து வாயருகில் கொண்டு சென்றான்.



'' ஆமாம்! இன்னிப் பொயிதெல் லாம் ஓயெச்சியே, மடியிலே எம்மாந் துட்டு கொண்ணுந்திருக்கே?'' என்று அவன், எவ்வித அக்கறையும் இல் லாமல் கேட்டான்.

அவள் பதில்சொல்லவில்லை. வாயரு கில் கொண்டு சென்ற கதிரைக் கூடக் கடிக்காமல் அவனது வியர்வை சொட் டும் முகத்தைப் பார்த்தான். அவனது பார்வையோ, மௌனச் சிரிப்போ

அவனுக்கு எவ்வித உணர்வையும் ஏற்படுத்த வில்லை போலும்! அவன் எதிரே இருந்த கணப் புச் சட்டித் தணலில் சோளக் கதிரைத் திருப் பித் திருப்பிக் காய்ச்சிக் கொண்டிருந்தான்.

பாகாயத்திலிருந்து காட்பாடிக்குச் செல் லும் இரண்டாம் நம்பர் 'டவுன் பஸ்' ஒன்று வந்து அந்த மரத்தடி 'ஸ்டாப்'பில் நின்றது. அதிலிருந்து இறங்க வேண்டிய இரண்டொரு வர் இறங்கியும், அதில் ஏறக் காத்திருந்த சிலர் ஏறியுமான பிறகு பஸ் கிளம்பிப் போய் விட்டது. இறங்கியவர்களையும் ஏறியவர் களையும் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த வேலனின் வாய் மக்காச் சோளத்து மணிகளை மெல்லத் தொடங்க, அவனது சிந்தனை கடந்து போன சில சம்பவங்களை அசை போடத் தொடங்கியது.

• • •

திருவலம் கிராமம் அப்படியொன்றும் பெரிதல்ல. என்றோ செழுமை கொண்டு புனலாறுக நிறைந்தோடி, இன்று வற்றி வறண்டு கிடக்கும் மணலாற்றின் மீது கட்டப் பட்டுள்ள பிரும்மாண்டமான பாலம் ஒன்று தான் அதன் புகழுக்குரிய சின்னம். அழகு மிகும் அந்தப் பாலத்தை எத்தனையோ சினிமாக்காரர்கள் தங்கள் படத்தில் காட்சி எடுத்துச் சேர்த்திருக்கிறார்கள்...

பெரும்பாலும் விவசாயிகளாக இருந்த அந்தக் கிராமத்தில்தான், கணவனை இழந்த முத்தம்மாள், அரிஜனச் சேரியில், தன் இரு புதல்வர்களான அன்னமுத்துவையும், வேலனையும் விழிகளைப் போலப் பாதுகாத்து வாழ்ந்து வந்தாள். அவர்களுக்கு ஒரு தலைவலி என்றால் முத்தம்மாளுக்கு நெஞ்செல்லாம் வலிக்கும்; துடியாகத் துடிப்பாள். அவ்வளவு பாசம்! அந்தத் தந்தையற்ற குழந்தைகளின் மீது அவளுக்கு அவ்வளவு பற்று! தன் மூச்சு அடங்குமுன் அவர்கள் இருவருக்கும் எப்படி யாவது கல்யாணத்தைச் செய்து வைத்துவிட வேண்டுமென்பதுதான் அவள் உள்ளத்தில் அடியில் ஊறியெழுந்து நெஞ்சை நிறைத் திருந்த ஒரே ஆசை. அதற்காகவே இரவு பகலென்றில்லாமல், அவள் ஓயாமல் ஒழி யாமல் உழைத்து, வீட்டின் அத்தியாவசியச் செலவு போக எஞ்சியதையும், தன் செல்வங் களின் மிதமான உழைப்பின் முழுத் தொகையையும் வெகு அக்கறையோடு சேர்த்து வந்தாள்.

அவர்களும் வளர்ந்துகொண்டு வந்தார்கள். மூத்தவனுக்குச் சுமார் இருபத்தைந்து வயது இருக்கும்; இளையவன் வேலனுக்கு இருபத் தொன்றிருக்கும். இருவரின் வளர்ச்சியும் குறையற்று, கவர்ச்சியாகவே இருந்தது.

உழைத்துச் சேமித்த பணத்தை அடுக்களைப் பானையிலிருந்து ஒரு நாள் எடுத்து எண்ணிப் பார்த்த முத்தம்மாளின் மனம் நிம்மதி பெற்றுப் பூரித்தது. 'மூத்தவன் அன்ன முத்துவுக்கு இந்த வைகாசியில் எப்படியும் திருமணத்தை முடித்து விடலாம்' என்ற நம்பிக்கையும் வேர் விட்டது. பெண்ணுக் கென்றும் அவள் எங்கும் அலைய வேண்டிய அவசியம் இருக்கவில்லை. பன்னிரண்டாவது கல்லிலேயே—ஆற்காட்டிலேயே — முத்தம் மாளின் ஒன்றுவிட்ட அண்ணனின் பெண்

இளியம்மாள் அன்னமுத்துவுக்காக வளர்ந்து கொண்டிருந்தாள்.

முத்தம்மாள் தான் நினைத்தபடியே வைகாசி மாதத்தில் தனது மைந்தன் அன்ன முத்துவுக்கும் இளியம்மாளுக்கும் கலியாணம் செய்து வைத்துக் கண்குளிரப் பார்த்தாள். இளியம்மாளின் கழுத்தில் அன்னமுத்து தாலி கட்டிய சமயம் முத்தம்மாளின் கண்களி லிருந்து இரண்டோர் நீர்முத்துக்கள் விழுந்து சிதறின. ஆனந்தக் கண்ணீர்தான்! அவளது நாசியினின்றும் நிம்மதியான நெடுமூச் சொன்றும் அவிழ்ந்தது. 'கடமையில் பாதியை நிறைவேற்றிவிட்டோ'மென்ற திருப்தி அதில் இருந்தது. அதோடு, 'அடுத்தவன் வேல னுக்கும் இப்படி ஒரு நன்னாள் என்று வரும்?' என்ற ஏக்கமும் அதிலேயே இழையோடியது.

இளியம்மாள் வீட்டுக்கு வந்த வேளையோ, அல்லது வேலனின் துரதிர்ஷ்டமோ, அன்ன முத்துவுக்கு விவாகம் செய்து வைத்த பின்னர் அதிக நாட்கள் முத்தம்மாள் உயிரோடு இருக்கவில்லை!

புதுத் தம்பதிகளை 'ஆடி'க்கு அழைத்திருந் தார்கள். வேலன் வீட்டில்தான் இருந்தான். மாலை அநேகமாக மணி ஐந்திருக்கும். வெளி யில் ஆடி மாதத்திய மழைக் காற்றின் வேகத் தோடு 'சோ'வென்று கொட்டிக்கொண் டிருந்தது. எங்கோ சென்றிருந்த முத்தம்மாள் சொட்டச் சொட்ட நனைந்துகொண்டு வந்து வீட்டினுள் நுழைந்தாள். அவள் வந்த கோலத்தைப் பார்த்த வேலனுக்குப் 'பகி' ரென்றாகி விட்டது. "இன்னுமே, எங்கேனு நின்னு மயெ விட்டதுக்கப்புறம் வரக்கூடாது? இப்படி நனைஞ்சினு வந்திருக்கியே!" எனக் கடிந்துகொண்டு கொடியில் கிடந்த பழம் புடவை யொன்றை எடுத்து அவளிடம் கொடுத்து, "இந்தா! தலையெல்லாம் தோட் டினு மாத்திக்கோ!" என்றான். அவன் கொடுத்த சேலையைக் கட்டிக்கொண்ட அவள் சற்றைக்கெல்லாம் ஒரு மூலையில் பாயை விரித்து முடங்கி விட்டாள். உழைப்பின் அலுப்பும் நனைந்ததால் ஏற்பட்ட குளிரும் அவளைப் படுக்க வைத்திருக்கலாமென்று எண்ணிய வேலன், அவளை அதிகமாகத் தொந்தரவு செய்யாமல் விட்டு விட்டான்.

மறு நாள் விடிந்து வெகு நேரமாகியும் முத்தம்மாள் எழுந்திராமல் கிடப்பதைக் கண்ணுற்ற அவன், நெஞ்சு படபடக்க அவள் அருகில் போய். "அம்மா!" என்று அழைத் தான். சரியான பதில் இல்லை; ஏதோ முனகல் சத்தந்தான் வெளிப்பட்டது. மெல்லப் புரட் டினான். அவள் புரண்டு படுத்தாள். ஆனால் அவனையோ, அவன் சொல்வதையோ புரிந்து கொள்ளும் நிலையில் அவள் இருக்கவில்லை. அவள் சம்பந்தா சம்பந்தமின்றி ஏதேதோ பிதற்றிக் கொண்டிருந்தாள் - சுய நினைவற் றுப் போய்! துடிதுடித்துப்போன வேலன் எங்கெல்லாமோ ஓடினான். எந்தெந்த வைத்தி யரையோ அழைத்து வந்தான். என்னென்ன மருந்தெல்லாமோ கொடுத்தான். எதுவும் பயன் தரவில்லை. மூன்றாவது நாளே அந்த அன்புருவம் - தன் இளைய மகனின் இன் மணத்தைப் பார்க்கத் துடித்த பாசச் சுடர் போய்விட்டது; மறலியோடு போய்விட்டது!

வேலன் அழுதான். தன்னை ஈன்றெடுத்த சிற்றெறும்பு கடிக்காமல் பாதுகாத்து அன்பை ஊட்டி ஆளாக்கிய அன்பின் ஜோதிக்காகத் தேம்பித் தேம்பி, விசித்து, விசித்து அழுதான். எத்தனை நாட்களுக்குத்தான் அழுதுகொண்டே வாழ முடியும்? அன்னையின் பிரிவை ஒருவாறு மறந்து அண்ணன் அன்னமுத்துவிடம் அன்பைச் சொரிந்து வாழலானான். அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள்! அன்னமுத்துவும் தன் தாயின் பண்பையும் அன்பையும் மனத்தில் கொண்டு தம்பியிடம் பரிவு காட்டினான். ஆனால் அவனது மனைவி வெள்ளையம்மாள்?.... அவளுக்குக் கணவன் தானே பெரிது? எனவே அன்னமுத்துவைச் சர்வ ஜாக்கிரதையுடன் பாதுகாத்து வந்தாள். வேலனைப் பற்றிக் கவலைப்பட அவளுக்கு என்ன?

வேலன் எத்தனை நாட்களுக்குத்தான் அண்ணியின் குத்தல் பேச்சையும், நொடிப்பையும், சொடுக்கையும் பொறுத்துக்கொண்டிருப்பான்? அவன் ஆண்பிள்ளையாயிற்றே! அவனுக்கும் தன்மானம், ரோசமில்லாமலா போய்விடும்? எப்படியும் அந்தக் 'தளை'யிலிருந்து விடுபட எண்ணினான். ஆனால் இருபது ஆண்டுகளுக்கும் மேலாகச் சேர்ந்து வாழ்ந்த அண்ணனின் 'பாசம்' அவனை எளிதில் அகலவொட்டாமல் தடுத்துக்கொண்டே வந்தது. அண்ணியின் போக்கைப் பற்றி அண்ணனிடம் சொல்லலாமென்றாலும் அது எத்தகைய விளைவைத் தருமோ என அஞ்சினான். இறுதியில் தான், வேறு வழியின்றி யாருக்கும் தெரியாமல் வீட்டை விட்டு வெளியேறத் தீர்மானித்தான்...

வேலூருக்குத் திருவலத்திலிருந்து வரும் 'கடைசி பஸ்' ஒன்று வேலனை, இரண்டொரு சட்டை வேஷ்டிகளோடும், கையில் சில்லறையாக ஏறக்குறைய பத்து ரூபாய்களோடும் கொண்டு வந்து இறக்கிவிட்டது.

வந்த அன்று இரவு ஏதோ ஒரு கடையின் திண்ணையில் படுத்துப் பொழுதைக் கழித்தான். பொழுது புலர்ந்ததும் ஒரு 'சாயாக் கடை'யினுள் நுழைந்து 'நாஸ்தா'வை முடித்துக் கொண்டு 'எப்படியும் ஏதேனுமொரு வேலை தேடிக் கொள்ள வேண்டும்' என்கிற உறுதியோடு புறப்பட்டான். கையில் இருந்த பணம் தீரும்வரையும், தீர்ந்த பின்னரும் அலைந்தான். பலன்தான் இல்லை!

அவன் முழுப் பட்டினியாகக் கழிக்கத் தொடங்கிய இரண்டாவது நாள், மேற்கொண்டும் பசியின் கொடுமையைத் தாளமாட்டாதவனாக, சோர்வு மேலிடக் கோட்டைக்கு அருகிலிருந்த 'பஸ் ஸ்டாண்'டில் வந்து, அவலச் சுமையால் அழுந்தப் பெற்ற மனத்தோடு சற்று நேரம் வரை நின்றிருந்தான். திருவண்ணாமலையிலிருந்து வந்த நீண்டதொரு பஸ், நிலையத்தில் நின்றது. அதிலிருந்து பல பிரயாணிகள் பெட்டி, படுக்கை, பை, கூஜா போன்ற தங்கள் சாமான்களோடு இறங்குவதைக் கொஞ்ச தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த வேலன், ஒரு பெரியவர், மிகுந்த சிரமத்துடன் பஸ்ஸிலிருந்து ஒரு பெரிய பையை இறக்கி இரு கைகளிலும் தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு நடப்பதைக் கவனித்தான். ஓடிச்சென்று அவரிடம் பையைத் தான் எடுத்து வருவதாகக் கேட்டான். அவ்வளவுதான்; முதியவர் பதில் சொல்வதற்கு முன்பே அங்கு வந்து சூழ்ந்து கொண்ட நான்கைந்து பஸ் ஸ்டாண்டு கூலிகள் ''இந்த பஸ் ஸ்டாண்டு கூலி எங்களுடையதாச்சே, நீ எப்படி நுழைய வரலாம்?'' என்று அவர்களுக்கே உரிய பாஷையில் வேலனைத் திட்டிக் கோபித்துக் கொண்டார்கள். அவர்களில் ஒருவன் பெரியவரின் பையைப் பலவந்தமாக வாங்கித் தலையில் வைத்துக் கொண்டு கிளம்பவே, அந்தச் சிறு கூட்டம் கலைந்தது. உள்ளச் சோர்வும் உடல் சோர்வும், வயிற்றைப் புரட்டிக் கொண்டிருந்த பசியும் அவனை நடக்க விடவில்லை; அவன் தள்ளாடித் தள்ளாடி நகர்ந்து கொண்டிருந்தான்.

தோட்டப்பாளையம் வரை நடந்து வந்த வேலன் கண்கள் செருக, கால்கள் பின்ன, மேலும் நடக்கும் திராணியற்றவனாக ஓரத்து மர நிழலுக்குச் சென்று அமர்ந்தான்.

வேலன் சுயஉணர்வு பெற்றுக் கண்களைத் திறந்து பார்க்கையில் 'அவள்' ''என்னமா இருக்குது? இந்தா, சூடா இத்தைக் குடி, சரியாப்பூடும்'' என்று மிகுந்த கனிவோடு கையில் ஆவி பறக்க இருந்த தேனீர் டம்ளரைக் கொடுத்தாள்.

அதை வாங்கி, சூட்டையும் பொருட்படுத்தாமல் 'மடக் மடக்'கென்று பருகியவன், ''என்ன உடம்புக்கு?'' என்று கேட்ட அவளிடம் தன் வரலாற்றையே சுருக்கமாகச் சொல்லி முடித்தான். அவன் சொன்னவற்றை அனுதாபத்தோடு கேட்டுக்கொண்டிருந்தவள் எழுந்து சென்று ஏதேதோ தின்பண்டங்களை வாங்கி வந்து அவன் கையில் கொடுத்தாள்.

அவள் அன்புடன் கொடுத்தவற்றை உண்டு, உண்ட மயக்கம் தீரச் சற்றுக் களைப்பாறிய பிறகு சிறுகச் சிறுகப் பேச்சுக் கொடுத்ததில் அவளைப் பற்றி அவன் தெரிந்து கொண்ட விவரம் இதுதான்:

செல்லம்மாளின் தந்தை பட்டாளத்திலிருக்கும்பொழுது அவளது தாய் வியாதியினால் மறு உலகு எய்தவே, பன்னிரண்டு வயதான பெண் செல்லம்மாளையும், பதினாறு வயதான முரட்டுக்குணம் கொண்ட ராமசாமியையும் அனாதைகளாக விட்டு விட்டுப் போய் விட்டாள். தாய் சென்ற பின், ராமசாமி சிரமப்பட்டுக் கூலி வேலை செய்து ஆறு ஆண்டுகளாகத் தன் ஒரே உடன் பிறப்பான தங்கை செல்லம்மாளைக் காப்பாற்றி வந்தான்.

ஒரு நாள், வாய்ச் சண்டை காரணமாக ஒருவனை இருப்புக் கழியொன்றில் ஆத்திரங்கொண்டு தாக்கியதன் விளைவாக உயிரிழக்க, ஏழாண்டு சிறைவாசத்துக்குச் சென்றுவிட்டான் ராமசாமி. தனக்கு இருந்த ஒரே பற்றுக்கோடும் விலகிச் சென்ற பின் ஒண்டிக் கட்டையாகிவிட்ட செல்லம்மாள் தைரியம் இழக்காமல், இப்படிச் சிறு வியாபாரம்செய்து மானத்தோடு காலத்தைக் கழித்து வருகிறாள்.

வேலனிடம் தனது வாழ்க்கை பற்றிய விவரங்களைக் கூறிய அவள் அவனது நிலைக்கு இரங்கி, வேலை கிடைக்கும்வரை தான் உணவளிப்பதாகச் சொல்ல வேறு வழியின்றி அவனும் ஒப்புக் கொண்டான்.

# ஆலைத் துணிவாங்க நீங்கள் செலவிடும் ஒவ்வொரு ரூபாயிலும்

***40 ந.பை பருத்திக்கும், 25 ந.பை உழைப்பாளிக்கும், 21 ந.பை வரிகள், தீர்வைகளாக உங்களுக்கும் செல்லுகிறது.***

ஆலைத் தொழில், பிரதி வருடமும் உற்பத்தி செய்யும் நூலும், துணியும் ரூ. 475 கோடிக்கு மேல் மதிப்பிடப்படுகிறது. கணிசமான தொகை தான்! இதில் தனக்கென ஒரு சிறு பகுதியை மட்டும் எடுத்துக்கொண்டு, பெரும்பாலான பகுதியைப் பரவலாக இத்தொழில் விநியோகித்து விடுகிறது. ஆலைக்குத் தந்துதவும் பருத்திக்காக விவசாயி சுமார் ரூ. 190 கோடி பெறுகிறான். தொழிலாளர்களின் பங்கோ 120 கோடியாகும். மற்றும் மத்திய, ராஜ்ய அரசாங்கங்களுக்கு வரிகள் தீர்வைகள் மூலமாக இத்தொழில் ரூ 100 கோடிக்கு மேலாக செலுத்துவதன் மூலம் நாட்டுக்கும் பெரும் நன்மையைச் செய்கிறது. மிகுதியுள்ள பணம் ஆலைக்கு வேண்டிய எரிபொருள், சாமான்கள், இதர செலவுகள், லாபம் ஆகியவற்றுக்காகச் செல்கிறது. எனவே, தேசியப் பொருளாதார அமைப்பை நிலைத்து நீடிக்கச் செய்வதோடு, விதவிதமாக விரிவடையச் செய்வதிலும் ஆலைத்தொழில் கணிசமான பங்கெடுத்துக் கொள்கிறது என்பதை நீங்கள் உணர்வீர்கள்.

## வாங்குவீர் ஆலைத்துணி, அதன்மூலம் ஆற்றுவீர் தேசப்பணி!

தி இன்டியன் காட்டன் மில்ஸ் ஃபெடரேஷன், பம்பாய்-1





"அந்தா தெரியுதே குப்பம். அங்கேதான் வூடு!" என்று இருந்த இடத்திலிருந்தே எதிரில் தெரிந்த சில குடிசைகளைக் காட்டினாள். அன்று மாலை அவனைத் தன்னோடு குடிலுக்கும் அழைத்துச் சென்றாள்.

வாரம் ஒன்று கழிந்த பின்னர் அவளாகவே முயன்று அவனுக்கு ஒரு சைக்கிள் ரிக்ஷாவை வாங்கித் தந்து "நித்தம் காலையிலே வண்டியை முதலியார் ஊட்டண்டேயிருந்து எடுத்துக்கோ; முதலியாரண்டே முழுசா ஒரு ரூபாயும் குடுத்திடு. உன்னாலே எம்மாஞ் சம்பாரிக்க முடியுமோ, அம்மா ஓயெச்சாப் போதும்!" என்று நல்லுரை பகர்ந்து அவனுக்குத் தொழில் செய்து வைத்தாள். வேலன் உழைத்துப் பழகிய கட்டையாயிற்றே! தினசரி இரண்டு மூன்று ரூபாய் சம்பாதித்துக் கொண்டு வந்தான்.

மாலையில் பணத்தை இடுப்புத் துணியில் முடிந்து கொண்டு வந்து அவளிடம் எண்ணித் தருவான். கூடவே அன்றைய அனுபவங்களையும், கேள்விப்பட்ட, பார்த்த நிகழ்ச்சிகளையும் சுவாரஸ்யமாகச் சொல்லுவான். அவள் புளகாங்கித மடைவாள். உடல் வலி தீர அவனுக்கு வெந்நீர் போட்டுத் தருவாள். குளித்து வந்தால் தாயின் பரிவுடன் உணவு பரிமாறுவாள். அவளின் அன்புமயமான பணிவிடைகளிலே திளைப்பதில் அவனுக்குக் கொள்ளை இன்பம்!

வேலன் மூன்று நான்கு மாதங்கள் வரை இப்படி நல்லவனாகவே வாழ்ந்து வந்ததைக் கண்டு சகிக்காத காலம் அவனது குணத்திலே தனது மெல்லிய கொக்கிக் கரமிட்டுச் சுண்டி இழுத்து, போக்கிலே பெரியதொரு மாற்றத்தை ஏற்படுத்தி விட்டது.

அவன் தன்னையொத்த சில 'ரிக்ஷாவாலா'க்களுடன் சேர்ந்து கொண்டு 'கள்ளச் சாராயம்' குடிக்கவும், சீட்டாடவும் தலைப்பட்டான். அவனது இந்தச் செய்கை சட்டத்தின் கூர்ந்த பார்வைக்கும் எப்படியோ தப்பிய தென்றாலும், செல்லம்மாளின் கண்காணிப்புக்குத் தப்ப முடியவில்லை. இதையறிந்த அவள் மிகவும் வருந்தினாள். தன்னால் முடிந்த மட்டும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். அவளது வேதனைதான் எஞ்சியதே அல்லாமல் அவன் திருந்தக் காணோம்.

நாள் செல்லச் செல்ல, தனக்குப் போதிய வருவாய் இல்லாத நாட்களில் வேலன், குடிக்கவும், சூதாடவும் அவளிடமே பணம் கேட்டு வாங்கலானான். நல்ல குணமுடையவனாக இருந்த காலத்தில் உழைத்துச் சம்பாதித்து அவளிடம் கொடுத்திருந்த தொகைக்கும் இரண்டு மூன்று மடங்கு அதிகமாகவே அவளிடமிருந்து கறந்து விட்டான்! ஒரு சில சமயங்களில் வழியில்லாமல் அவள் மறுத்து விட்டால், அப்பப்பா! அவனுக்கு வருகிற கோபத்தைப் பார்க்க வேண்டுமே. என்ன உருட்டல்; என்ன மிரட்டல்! பிறகு அவன் கோபத்தைக் கண்டு நடுங்கிப் போய் 'ஏதேனும்' கொடுத்து அனுப்பி விடுவாள். இந்தப் பண நச்சரிப்புக்குப் பயந்துகொண்டே அவனிடம் அவள் அதிகமாகப் பேச்சு வைத்துக் கொள்வதில்லை. ஆனால் உள்ளத்தினுள்ளே அவனிடம் கொண்டிருந்த அன்பு சற்றும் ஒளி குன்றாமல் சுடர்விட்டுக் கொண்டேதான் இருந்தது.

அவனும்தான், அவளைத் திருப்திப்படுத்த வேண்டுமென்பதற்காகவே தன்போக்கிலிருந்து திருந்தி நல்வழிப்பட எவ்வளவோ முயன்றான். முடியவில்லையே! 'சகவாச தோஷம்' போதும்!

* * *

"ஐயே, கொடுத்த சோளத்தைக் கூடத் துன்னாம அப்படியே 'சோளக்காட்டுப் பொம்மை'யாட்டமா உக்காந்திருக்கியே! ஏந்து போகலே?"

அவளது குரல் கேட்டுச் சுயவுணர்வு பெற்ற வேலன் கையிலிருந்த மக்காச் சோளத்தை இரண்டு வாய் கடித்துவிட்டு மீதியைத் தூக்கி அவள் பக்கமாக வீசியவாறு எழுந்து சென்று தன் வாகனத்தின் மீது ஏறி அமர்ந்தான்.

இன்னிக்கினு கொஞ்சம் சீக்கிரமா வந்துடு; பன்னெண்டு மணி வரைக்கும் சுத்தினு திரியாதே" என்று அவள் சொன்னதை அலட்சியமாகக் காதில் வாங்கிக் கொண்டு போய் விட்டான்.

அன்று ஏறக்குறைய எட்டு மணிக்கெல்லாம் குடிசைக்கு வந்தவன், வந்ததும் வாராததுமாக அவளைச் சோறு போடச் சொன்னான். 'பசியாயிருக்கும்' என்று எண்ணி அவசரம் அவசரமாக ஒரு தட்டில் சோற்றைப் போட்டு; குழம்பை ஊற்றி அதன் ஓரத்தில் மிளகாய்த் துவையலையும் வைத்துக் கொடுத்தாள்.

வெளியூர் செல்கின்ற சிறுவர் அவசரத்தில் வாரிக் கொட்டிக்கொள்வது போல் மளமளவென்று குனிந்த தலை நிமிராமல் அள்ளி அள்ளிப் போட்டுக் கொண்டு கைகழுவி எழுந்தான். எழுந்த வேகத்தோடேயே தன் சுரக் கையை அவள் முன் நீட்டி, "இந்தாம்மே

ஒரு மூணு ரூவா இருந்தால் கொடு. ஒருத்தன் கிட்டே கைமாத்து வாங்கிருந்தேன். அவன் 'பேஜார்' பண்றான்...'' என்றான்.

அவளுக்குப் பற்றிக்கொண்டு வந்தது. அவள் முகத்தில் பேயறைந்தாற் போன்றதொரு மாற்றம். ''இன்னா ரோதனை நித்தம் இதே வேலையால்ல பூடுச்சு! இங்கே ரூவாயுமில்லே துட்டுமில்லே'' என முனகினாள்.

உண்மையிலேயே அன்று அவளிடம் பைசா இருக்கவில்லைதான். ஆனால் அது அவனுக்கு எப்படித் தெரியும்?

''இன்னாமே, தபாய்க்கிறே! இன்னிக்கி வித்த துட்டெல்லாம் எங்கே பூடுச்சாம்?''

''ஆமா, நான் 'ஷாப்பு' வேபாரம்தானே செய்யறேன்? அஞ்சும் பத்தும் குவிய? இன்னிக்கெல்லாம் முக்கால்ரூபாய்க்குத்தான் வித்தது. அதுவும் இல்லாமே இருந்தா, இங்கே அடுப்பு எரிஞ்சே இருக்காதே! இந்த லட்சணத்துலே வித்த துட்டு வேணுமாமில்லே, வித்த துட்டு! நீ ஒரு ஆம்படையான், நானெல்லாம் ஒயெக்கிறியே, வெக்கமில்லே என்னாண்டெ வந்து துட்டு கேக்க?''

''பெட்டியிலே வச்சிருக்கியே 'டப்பா' அதிலே இருக்கிற துட்டெல்லாம் மாயமாவா பூடுச்சு? அதிலேயிருந்து தாயேன்...''

அவன் இதைச் சொல்லக் கேட்டதும், செல்லம்மாள் மயானத்தில் அரிச்சந்திரன் தாலியைக் கழற்றிக் கொடுக்கக் கேட்டபோது சந்திரமதி அதிர்ச்சியடைந்தாற் போல் துணுக்குற்றாள்.

''ஐயய்யோ, நான் தர மாட்டேன்; என் உசிரு போனாலும் நான் தரவேமாட்டேன்...''

''நான் கடைசித் தடவையாக் கேக்கறேன். எடுத்துத் தந்துடு!''

''நீ எந்தத் தடவையாக் கேட்டாலும் சரி, நான் தரமாட்டேன். வோணும்னா என்னெக் கொன்னுட்டு எடுத்துக்க!'' சாவி வைத்திருந்த இடுப்பை இரு கைகளாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டாள்.

வெறி கொண்டவனைப் போல் தன்னைச் சுற்றிலும் துழாவிய அவன் கண்களில் ஒடுக்கு விழுந்த ஒரு அலுமினிய டம்ளர்தான் தட்டுப் பட்டது. அடுத்த வினாடியே அவன் கையிலிருந்து அவளது முகத்துக்கு நேரே பறந்துவந்த அதன் கூரிய விளிம்புக்கு இலக்கான அவளின் கன்னத்திலிருந்து ரத்தம் கசிந்தது.

''அம்மா!'' என்று அலறி அடிபட்ட கன்னத்தை ஒரு கையால் அழுத்திப் பிடித்தவள் பாயப்போகும் வேங்கையைப் போல் விரிந்த கண்களிலே கோபம் பீறிட அவனைப் பார்த்தவாறு நின்றிருந்த வேலனின்முன், தன் இடுப்பில் செருகியிருந்த சுருக்குப் பையைத் தூக்கி யெறிந்தாள், செல்லம்மாள் தன்னளவில் எதையோ தீர்மானித்தவளாக.

எதையும் பொருட்படுத்தாமல், பையிலிருந்து துணிகளை எடுத்தெறிந்து ஆராய்ந்து கொண்டிருந்த வேலனின் கையில் ஒரு காகிதப் பொட்டலம் தட்டுப்படவே, அதனை வெளியில் எடுத்தான்.

சணல் நூலால் கட்டப்பட்டிருந்த அந்தப் பழைய செய்தித் தாள் பொட்டலத்தில், தங்கத் தகடுபோன்ற பட்டுநூல் கரைபோட்ட ஒரு வெளிர்நீலப் புடவை, மஞ்சள் நிறத்தில் சிவப்பு ரோஜா பொறித்த ஜாக்கெட் துண்டு, ஜரிகை இழைபோட்ட வேட்டி, ஒரு நல்ல சட்டைத்துணி—இவை புத்தம் புதியனவாய் இருக்கக் கண்ட அவன் சிந்தனை சற்று நேரத்துக்குத் தடைப்பட்டுத் தடுமாறியது. மனத்தில் இனமறியாத ஒரு சிறு குழப்பம். பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு பெட்டியிலிருந்த சில பழந்துணிகளை, மேலும் புரட்டியும் அகழ்ந்தும் பார்த்தான். அவன் தேடிய பொருள் கிடைத்தது!

ஆவலால் விழிகள் மின்னி விரிய அந்தத் தகர டப்பாவைத் திறந்தான். அதன் முக்கால் பாகம்வரை கால், அரை, முழு ரூபாய் நாணயங்கள் இருந்தன! அவை அவனைப் பார்த்துச் சிரிப்பது போன்றதோர் பிரமை தட்டியது. அத்தனையும் அவளது உழைப்பினும் சிக்கனத்திலும் சேர்ந்தவை; அதன் மேலால் வைக்கப்பட்டிருந்த ஒரு சிறு காகிதப் பொட்டலத்தைக் கையில் எடுத்துப் பிரித்தான் வேலன். மெருகு குலையாத புத்தொளி கொண்டு மின்னியது, பொன்னால் செய்யப்பட்ட ஒரு தாலி!

அதைப் பார்த்தவன் அயர்ந்து போனான். அவன் உடல் எங்கும், உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை 'ஜில்' லென்று சூடு பாய்ந்து பரவியது. நெற்றிப்பொட்டு 'விண்'ணென்று தெறித்தது. இதய கோளத்தைக் கைவிட்டுப் பிசைவது போன்றதொரு வேதனை. அவனது பார்வையைப் பொங்கி வந்த கண்ணீர் மறைத்தது. வேலன் பாரமேறிய நெஞ்சோடு, சில வினாடிகள் வரை செயலற்றவனாகக் கையிலிருந்த தாலியையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, மெள்ளத் திரும்பி, அவள் நின்றிருந்த இடத்தைப் பார்த்தான். அவள்...?

கையிலிருந்ததை அப்படியே வைத்துவிட்டு வெளியில் வந்து, இருளை ஊடுருவும் பார்வையால் சுற்றிலும் ஒரு நோட்டம் விட்டு, ''செல்லம்..!'' எனப் பலங்கொண்ட மட்டும் குரலெடுத்துக் கூவினான். இரவின் அமைதியைப் பிளந்துகொண்டு புறப்பட்ட குரல் மட்டும் நெடுந்தூரம் சென்று எதிரொலித்தது. வெறி கொண்டவனாக, பித்துப் பிடித்தவனாக அவளைத் தேடி ஓடி அலைந்தான்.

மறு நாள், கேணியொன்றிலிருந்து கண்டெடுக்கப்பட்ட செல்லம்மாளின் பிணத்தைப் போலீஸ் விசாரணை நடத்தி, அறுவைப் பரிசீலனை செய்து, தற்கொலையெனப் பதிவுசெய்து கொண்டு கொடுத்த பின் அதை எடுத்துச் சென்று பாலாற்றின் கரையருகே இருந்த மயானப் புதைகுழியில் போட்டார்கள். தான் அனாதையாக நடைப்பிணம் போல் திரிந்து அலைந்தபோது அன்புகொண்டு ஆதரித்து வாழ்வளித்த அந்த அன்பு முகத்தை இறுதியாக ஒருமுறை தரிசிக்கக் குனிந்தான் வேலன். அவனது கையிலிருந்து ஒரு பிடி மண்ணும் கண்களிலிருந்து சில துளி கண்ணீரும் அந்தப் பிணத்தின் மீது உதிர்ந்தன.

வேலன் நிமிர்ந்தபோது வறண்டு கிடந்த அவன் இதயத்தைப் போலவே எதிரேயிருந்த பாலாறு நீர் இன்றி வெறும் மணல் வெளியாக விரிந்து சென்றிருப்பதைத்தான் அவனால் காண முடிந்தது.

## இருமலின் மூலகாரணத்தை அகற்றுங்கள்






## ஸிரோலின் சாப்பிடுங்கள்

குடும்பத்தினர்
யாவருக்கும்
ஏற்ற
ஔஷதம்

ஸிரோலின் இருமலை நிறுத்து வதோடு இருமலுக்குக் காரண மான தீங்கிழைக்கும் கிருமி களைக் கொல்லவும் செய்கிறது.

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

# வேங்கையின் மைந்தன்



### முப்பத்தோராம் அத்தியாயம்

## இரு மன வீரன்

பெரும் பிடுகு முத்தரையரின் வரவைக் கண்டு திகிலடைந்த வீரமல்லன், அதிலிருந்து மீள்வதற்கு முன்னரே, முத்தரையரின் வலது கரம் தன் தோளை வளைத்துக்கொண்டிருப்பதை உணர்ந்தான். கீழே நழுவி விழுந்து விட்ட துணி மூட்டையைக் குனிந்து எடுத்துக்கொண்டு அவரைப் பார்த்து ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

"நீங்கள் வீட்டிலில்லை. அதனால்..."

"அதனாலென்ன? திலகவதியைக் கண்டு பயந்தோடி வருகிறாயா?" அவனை அணைத்தபடியே கூடத்துக்குள் அழைத்துச் சென்றார் முத்தரையர். "வீரனாகிய நீ ஒரு பெண்ணைக் கண்டவுடன் கோழையாகிவிடலாமா?"

"அப்பா! கையில் வாளெடுத்தால் தான் இவர் வீரர். துணி மூட்டையைத் தோளில் தூக்கினாரோ இவரைப் பார்க்கவே பரிதாபமாக இருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே அறைக்குள்ளிருந்து கூடத்துக்கு வந்தாள் திலகவதி. "நீங்கள் வீட்டிலில்லை என்று தெரிந்தவுடன் அவிழ்த்த மூட்டையை அவசரம் அவசரமாகக் கட்டிக்கொண்டு திரும்பி விட்டார் அப்பா!"

திலகவதி சிறு குழந்தையல்ல, வயது வந்த குழந்தை என்பதைக் கண்டு கொண்டான் வீரமல்லன். சிறு குழந்தைகள் பெற்றோரிடம் ஏமாறுவார்கள்; வயது வந்த குழந்தைகள் பெற்றோரை ஏமாற்றித் தாங்கள் யாரைக் காதலிக்கிறார்களோ அவர்களிடம் ஏமாறுவார்கள்!

தமது மகளின் பேச்சைக் கேட்டுக் கலகலவென்று சிரித்தார் முத்தரையர். "வீரமல்லா! உன்னைச் சொல்லிக் குற்றமில்லை. உன்னுடைய தொழில் உன்னை இப்படி மாற்றி வருகிறது. பேசாமல் நான் சொல்வதைக் கேள்! இந்தத் துணி மூட்டைக்குரிய பொன்னை இப்பொழுதே உன்னிடம் தருகிறேன். கொண்டுபோய் மெய்யப்பரிடம் வீசி எறிந்துவிட்டு இங்கே வந்து விடு"

புரிந்து கொள்ளாதவனைப்போல் அவரைப் பார்த்து விழித்தான் வீரமல்லன். அவனுடைய வெகுளித்தனமான பார்வை அவருக்குப் பிடித்திருந்தது.



"இன்னும் உனக்கு விளங்கவில்லையா?" என்று கேட்டார் முத்தரையர்.

"வீசி எறிந்துவிட்டு என்ன செய்யச் சொல்கிறீர்கள்?"

"வா, தனிமையில் பேசுவோம்" என்று அவனைத் தோட்டத்து மரநிழலுக்கு அழைத்துக்கொண்டு போனார். இருவரும் மரத்தடி மேடையில் உட்கார்ந்தார்கள். வீரமல்லனின் கண்களைத் தமது கோழி முட்டை விழிகளால் உற்றுப் பார்த்துக்கொண்டே, "உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது! உனக்கு உதவி செய்ய வேண்டுமென்று நினைக்கிறேன்" என்றார் முத்தரையர்.

வீரமல்லனின் அடிவயிற்றை என்னவோ செய்தது. எதிலிருந்து அவன் தப்பிக்கொள்ள வேண்டுமென்று நினைத்தானோ, அது வேறு உருவத்தில் அவனை வளைத்துக் கொள்ளப் பார்த்தது. அவ




ருடைய பகையையும் அவன்விரும்பவில்லை; உறவையும் எதிர் பார்க்கவில்லை.

"எந்த வாளால் நீ என் சொந்த வாளைத் தட்டி விட்டாயோ, அதையே உனக்கு வெகுமதியாகத் தருகிறேன். மெய்யப்பர் உனக்கு எவ்வளவு பொன் கொடுக்கிறாரோ, அதே போல் இரு மடங்கு நான் தருகிறேன்."

மறு மொழி கூறாமல் தலையைத் தொங்க விட்டுக்கொண்டு யோசனை செய்தான் வீரமல்லன்.

"என்ன யோசிக்கிறாய்?"

"மெய்யப்பரிடம் ஊழியம் செய்வதாக நான் வாக்களித்திருக்கிறேன். உற்ற சமயத்தில் அவர் எனக்குக் கைகொடுத்து உதவி யிருக்கிறார்."

"நானும் உனக்கு உன் உயிரையே கொடுத்திருக்கிறேன். முதல் நாள் உன் முதுகில் வைத்த வாளை உள்ளே செலுத்தி யிருந்தால் நீ என்ன ஆகியிருப்பாய்? இப்போது நினைத்தால் கூட நான் உன்னை எதுவும் செய்ய முடியும்."

"அது வேறு விஷயம்; நீங்கள் என்னைப் பயமுறுத்துவதனால் பலனில்லை."

அவனுடைய முதுகில் தட்டிக் கொடுத்தார் முத்தரையர். உண்மை யான முத்தரையனைப்போல் நீ பேசுகிறாய். உன்னுடைய வாள் வீச்சுத் திறமையால் மட்டும் நான் உன்னிடம் பற்றுதல் வைக்கவில்லை. நீயும் என்னைப் போல் ஒரு முத்தரையன். அதிலும் வெறுப்புக் கொண்டு சோழர்கள் படையிலிருந்து வெளியில் வந்தவன்."

"அதற்காக?"

"என்னைச் சேர்ந்தவன் மூட்டை சுமந்து நாடோடியாய்த் திரிவது எனக்குப் பிடிக்கவில்லை."

"எனக்குப் பிடித்திருக்கிறது!"

"பொய் சொல்லாதே. சுத்த வீரன் பேசுகிற பேச்சில்லை இது. இதோபார், உன்னைத் துரும்புக்குச் சமமாக மதித்த சோழர்களுக்கு எதிராக நீ போய்த் தூணைப்போல் நிற்கும் காலம் வரப் போகிறது. அப்போது நீ அவர்களை உன் விருப்பப்படி யெல்லாம் பழி வாங்கிக் கொள்ளலாம்."

வீரமல்லன் திடுக்குற்றான். "சோழர்களுக்கெதிராகவே என்னை வாள் எடுக்கச் சொல்கிறீர்களா ?"

"அவசியம் நேர்ந்தால் அது உன் அதிர்ஷ்டம்தானே ? உன்னை மதிக்காதவர்களை மிதித்தெறியும் வாய்ப்புக் கிடைத்தால் நீ அதை விட்டுவிடுவாயா? ஈழத்துக்கு ஏன் அவர்கள் உன்னை அனுப்பவில்லை ? உன்னுடைய வீரத்தில், வாள் வீசும் திறமையில் அவர்கள் என்ன குறை கண்டுவிட்டார்கள் ?"

வீரமல்லனின் நெற்றி சுருங்கியது.

"நீ ஒரு முத்தரையன். அவர்களுடைய பழங்காலப் பகைவன். அதை நம்மவர்கள் மறந்தாலும் அவர்கள் மறந்து விடுவார்களா ?"

"எனக்கென்னவோ சோழர்களுக்கெதிராக வாள் எடுக்கப் பிடிக்கவில்லை" என்றான் வீரமல்லன்.

"இப்போது ஒன்றும் அவசியமில்லை ; யோசித்து மெதுவாக மறுமொழி சொல், போதும் !"

"யோசிப்பதற்கு ஒன்றுமில்லை."

வீரமல்லன் இப்படிப் பிடிவாதமாக மறுத்துப் பேசவே, அவன் மீது பெரும்பிடுகு முத்தரையருக்கு நம்பிக்கை வளர்ந்து கொண்டே போயிற்று. அவனிடம் தமக்குச் சுந்தரபாண்டியரிடமுள்ள செல்வாக்கையும், அதனால் அவனுக்குக் கிடைக்கப் போகும் நன்மைகளையும் விவரித்தார். வருங்கால வாய்ப்புக்கள், பதவி உயர்வுகள், வீரத்துக்கான வெகுமதிகள் இவற்றையெல்லாம் விளக்கினார்.

அவன் மனம் ஆற்றில் ஒரு காலும் சேற்றில் ஒரு காலுமாகக் குழம்பத் தொடங்கியது. அதை அவன் கண்களின் வாயிலாக அளவெடுத்த முத்தரையர் தமக்குள் நகைத்துக் கொண்டார்.

"நீ இன்றைக்கு என்னுடைய விருந்தினன். வா ! என்னோடு ஒன்றாக உணவு கொள்" என்று அவனை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். "பகல் முழுவதும் என்னோடு இருந்து விட்டு மாலையில் அங்காடிக்குத் திரும்பலாமல்லவா ?"

வீரமல்லனால் அவரது உபசரிப்பை மறுக்க முடியவில்லை. அவர் தன்னை முற்றிலும் நம்பிவிட்டார் என்று தெரிந்த பிறகு, அவரிடமிருந்து மேலும் சில செய்திகள் கிடைக்குமென்று எதிர்பார்த்தான் அவன்.

செய்திகளுக்குப் பதிலாக அங்கே அறுசுவை உணவு இலகவதியால் கிடைத்தது. இலகவதியே தன் கரத்தால் அவனுக்குப் பரிமாறினாள். தந்தையும் மகளும் சேர்ந்து கொண்டு வற்புறுத்திச் செய்த விருந்தோம்பல் அவனைத் திணற வைத்து விட்டது.

அவன் கொண்டு வந்திருந்த கச்சைகள் அனைத்துமே தனக்குப் பிடித்திருப்பதாகத் இலகவதி கூறினாள். அவற்றுக்குரிய பொற் காசுகளை முத்தரையரிடமிருந்து வாங்கிப் பத்திரமாக முடிந்து கொண்டான் வீரமல்லன்.

உண்ட களைப்பு உற்சாகப் பேச்சில் கழிந்தவுடன், "என்னோடு புறப்பட்டு வருகிறாயா, ஓரிடத்துக்குப் போய் விட்டு வருவோம் !" என்று கூறிக்கொண்டே கட்டிலை விட்டு இறங்கினார் முத்தரையர்.

"எங்கே போக வேண்டும் ?"

"என் பின்னால் வா, சொல்கிறேன்."

குதிரைகள் இரண்டு, பெரும் பிடுகு முத்தரையரின் மாளிகையிலிருந்து கிளம்பின. முத்தரையருக்குப் பின்னால் வீரமல்லன் சென்றான். நேரே அவர்கள் சுந்தர பாண்டியரின் அரண்மனை வாயிலுக்குச் சென்று தங்கள் குதிரைகளை நிறுத்தி இறங்கினார்கள்.

குதிரைச் சேவகர்கள் ஓடோடியும் வந்து குதிரைகளைப் பிடித்துக் கொண்டு அவர்கள் இறங்குவதற்கு உதவி செய்தார்கள். வழியில் நின்ற வீரர்கள் அனைவருமே தலை வணங்கி வணக்கம் செலுத்த, முத்தரையர் நிமிர்ந்த நடைபோட்டு உள்ளே சென்றார். அவருடன் சென்ற வீரமல்லனுக்கும் அவருக்குக் கிடைத்த மரியாதையில் பங்கு உண்டென்று தெரிந்தது.

வெளி வாயிலைக் கடந்து அவர்கள் உள் மண்டபத்துக்குள் நுழையு முன்னரே சுந்தர பாண்டியருக்குச் செய்தி எட்டியிருக்க வேண்டும். தாமாக முன்வந்து முத்தரையரின் கரங்களைப் பற்றிக் கொண்டார். அவருக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த வீரமல்லனைக் கண்டவுடன், பாண்டியரின் சிவந்த கண்கள் முத்தரையரிடம் சந்தேகத்துடன் வினா எழுப்பின.

'ஐயமுற வேண்டாம். நம்மைச் சேர்ந்தவன்தான்' என்று தமது விழிகளாலேயே விடையளித்தார் பெரும் பிடுகு முத்தரையர். இதற்குள் வீரமல்லன் அளவுக்கு அதிகமான பணிவுடன் பாண்டிய மன்னருக்குத் தன் வணக்கத்தைச் செலுத்திக் கொண்டான்.

"நேற்று முன்தினம் என்னிடம் கூறியிருந்தீர்களே....?" என்று சுந்தர பாண்டியர் ரகசியமாக முத்தரையரிடம் கேட்டதை அவர் இடைமறித்து, "ஆமாம், ஆமாம் ; அதே இளைஞன்தான்" என்று பதில் அளித்தார்.

சுந்தர பாண்டியரின் செவ்விழிகள் ஒருமுறை வீரமல்லனின் உச்சியிலிருந்து கணுக்கால் வரை ஊடுருவித் திரும்பின. செருக்கும் மிடுக்கும் குடி கொண்டிருந்த

## தீபாவளி விற்பனை

உங்கள் ஜவுளி
தேவைகளுக்கு

# ராதா ஸில்க்
## எம்போரியம்

14. ஸன்னதி தெரு - மயிலாப்பூர் - மதராஸ்-4

போன்: 71188

---

# CARAVAN
INDIA'S NATIONAL MONTHLY

**IN OCTOBER ISSUE**

**JUHI MURDERS**
The real murderer was not produced before a law court. Why? TAPAN GHOSH retells a harrowing tale.

**DELHI UNIVERSITY**
Story of slackness, sinking standards, and showmanship.

Buy your copy today

DELHI PRESS · NEW DELHI

---






அவரது ஆஸ்த்மா உபாதைகளை குணப்படுத்த எப்ரிலைம் மிகச் சிறந்தது. ஒரு பாட்டில் மருந்தை உபயோகித்தால் அதன் பூரண பலன்களைக் காண்பார்.

நீண்டகாலப்பட்டதும், மிக்க உபாதை தரக் கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய ரோகங்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து

**யூனியன் டிரக் கம்பெனி, லிட்.**
மதராஸ் ஆபீஸ்: 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1

அவர் முகத்திலிருந்து வீரமல்லனால் எதையும் ஊகித்தறிய முடியவில்லை.

"சோழர்கள் படையிலிருந்து நீயாக விலகிக் கொண்டாயா? அல்லது அவர்களாகவே....?"

"நானாக விலகிக் கொண்டேன்."

"அப்படியென்றால் அங்கிருந்து ஓடி வந்து விட்டாயென்று சொல்!" கணீரென்று வெண்கலக் குரலில் கேட்டார் சுந்தர பாண்டியர்.

'ஆமாம்' என்று பரிதாபமாகத் தலையாட்டினான் வீரமல்லன்.

அவனை ஓர் இருக்கையில் அமரச் சொல்லிவிட்டு, இருவரும் சிறிது நேரம் தனித்திருந்து பேசி விட்டுத் திரும்பினார்கள். சுந்தர பாண்டியரின் முகத்திலிருந்த கடுகடுப்பு இப்போது ஓரளவு குறைந்திருந்தது.

"உன்னுடைய உணர்ச்சியை முத்தரையர் மதிக்கிறார்; உன் வாள் பயிற்சியைப் பாராட்டுகிறார். வீரர்களிடம் எப்போதுமே பாண்டிய நாட்டுக்குத் தனிப் பரிவு உண்டு. முத்தரையர் கூறுவதை நானும் ஏற்றுக் கொள்ளுகிறேன்."

வீரமல்லனுக்குப் பாண்டியர் என்ன பேசுகிறார் என்று விளங்கவில்லை.

"ஓரிரண்டு வாரங்கள் செல்லட்டும்; பொறுத்திரு. உன் திறமைக்கேற்ற வாய்ப்பு இங்கே கிடைக்கும்" என்றார் சுந்தர பாண்டியர்.

'எந்த வாய்ப்பையும் தேடி நான் தங்களிடம் வரவில்லையே?' என்று சொல்லவேண்டும் போல் தோன்றியது வீரமல்லனுக்கு. மெதுவாக முத்தரையரைத் திரும்பிப் பார்த்தான். அவர் அவனை மௌனமாக இருக்கும்படி சைகை செய்தார்.

மூவரும் பின்னர் மேல் மாடத்துக்குச் சென்றார்கள். மாடத்தின் பின் பகுதிக்கு அப்பால் வைகை நதி சோம்பலுடன் தவழ்ந்து செல்வது தெரிந்தது. கூட்டங் கூட்டமாக வானத்தில் செங்கால் நாரைகள் பறந்து சென்றன.

"உனக்கு நன்றாக வளை எறி வீசத் தெரியுமென்று முத்தரையர் சொல்கிறாரே, இந்த நாரைகளில் ஒன்றை வீசி வீழ்த்துவாயா?" என்றார் பாண்டியர்.

முத்தரையர் விரைந்து சென்று ஒரு வளை எறியைக் கொண்டுவந்து வீரமல்லனிடம் நீட்டினார். வளை எறியைக் கையில் பிடித்தவுடன் வீரமல்லன் வேறு மனிதனாகி விட்டான்.

"முதல் நாரையா? இடையில் உள்ளவற்றில் ஒன்றா? கடைசியில் பறப்பதா?"

சுந்தர பாண்டியர் திடுக்கிட்டு அவன் பக்கம் திரும்பினார். வீரமல்லன் தன் விழிகளை இடுக்கி வானத்தைப் பார்த்துக் கொண்டே, "சொல்லுங்கள், அரசே!" என்று துடித்தான்.

"முதல் நாரை!" என்றார் பாண்டியர். பத்துப் பதினைந்து பறவைகளில் ஏதாவது ஒன்றை வீழ்த்துவதென்றாலே எவ்வளவு கடினம் என்பதை அவர் அறிந்தவர்.

வீரமல்லன் சுழற்றிவிட்ட சின்னஞ்சிறு வளை எறி விர்ரென்று மேலே வட்டமிட்டுச் சென்றது. அது புறப்பட்டது ஒரு திசை; திரும்பியது மற்றொருதிசை; மூன்றாவது திசையில் பறந்து கொண்டிருந்த முதல் நாரை தலை குப்புறக் கீழே விழுந்து கொண்டிருந்தது.

சுந்தர பாண்டியர் தமது செருக்கையும் மறந்து, "முத்தரையரே! இளைஞன் வல்லவன்தான்" என்று வாய் விட்டுக் கூறினார். "வல்லவன்தான்; நல்லவன் தானா என்பதை மெல்ல மெல்லத்தான்



பார்க்க வேண்டும்" என்று அவர் காதோடு சொல்லி வைத்தார்.

பெரும்பிடுகு முத்தரையரும் வீரமல்லனும் சுந்தர பாண்டியரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டார்கள். சுந்தர பாண்டியர் முத்தரையரைத் தனியே அழைத்து, "இந்த இளைஞனின் கூற்று மெய்தானா என்பதை நம் ஒற்றர்கள் மூலம் அறிந்துகொள்ள முயல்கிறேன்; மெய்யாக இருந்தால் இவன் நம்மிடம் பணியாற்றுவதில் தடையில்லை" என்றார். "இவனும் உங்கள் குலத்தைச் சேர்ந்தவன் என்பதால் நீங்கள் இவனை எளிதில் நம்பிவிட்டீர்கள் போலிருக்கிறது. பொறுத்துப் பார்ப்போம்."

சுந்தர பாண்டியர் இப்படிக் கூறிய பிறகுதான் முத்தரையருக்கே தாம் வீரமல்லன் விஷயத்தில் சிறிது அவசரப் பட்டு விட்டதாகத் தோன்றியது.

முத்தரையரோடு அவர் வீட்டுக்குச் சென்றுவிட்டு, விளக்கேற்றும் நேரத்தில் அங்காடியை நோக்கி நடந்தான் வீரமல்லன். உடனடியாகச் சேனபதி கிருஷ்ணன் ராமனிடம் சென்று, நேரில் தெரிவிக்க வேண்டிய செய்திகள் நிறைய இருந்தன. முழுவதையும் சொல்லிவிடலாமா, ஒரு பாதியை மட்டும் சொல்லலாமா, அல்லது முழுவதையுமே மறைத்து விடலாமா என்ற மனப் போராட்டத்தில் வீரமல்லன் ஈடுபட்டிருந்தான்.

முழுவதையும் சொல்லிவிட அவனுக்கு விருப்பமில்லை. முழுவதையும் மறைப்பதற்கு அவன் மனம் இடம் தரவில்லை. நிலகவதியின் வாயிலாகத் தெரிந்துகொண்டவற்றை மட்டும் கூறி விட்டு, மற்ற விவரங்களை மறைப்பதென்ற முடிவுக்கு வந்தான். சோழர்களைப் பகைத்துக்கொள்ளும் அளவுக்கு அவனுக்கு அவர்களிடம் விரோதமில்லை.

மெய்யப்பரிடம் கச்சைகளுக்குரிய பொன்னைக் கொடுத்துவிட்டு, சேனபதியிடம் சென்று, பாண்டியர்களும் ஈழத்தவர்களும் சேர்ந்து செய்திருக்கும் திட்டங்களைக் கூறினான். ஏற்கனவே மற்ற ஒற்றர்கள் வாயிலாக அவருக்கு அதே செய்திகள் கிடைத்திருந்தன. என்றாலும் வீரமல்லன் கூறியதை முற்றிலும் கேட்டுவிட்டு, "நாளைக்குப் பிற்பகல் தஞ்சைக்குப் புறப்படுவதற்குச் சித்தமாக இரு" என்றார் கிருஷ்ணன்ராமன்.

"தஞ்சைக்கா?"

"ஆமாம், போய்ப் படைத்தலைமையை ஏற்றுக் கொள்; ஓலை தருகிறேன். உன்னோடு இன்னும் சிலரும் வருவார்கள்."

இந்தச் செய்தி வீரமல்லனுக்கு மகிழ்ச்சியளித்ததா, கவலையளித்ததா என்று அவனுக்கே தெரியவில்லை. தஞ்சைக்குப் போகு முன்பு எப்படியாவது ஒரு முறை நிலகவதியைப் பார்த்து விட்டுப் போக நினைத்தான்.

முப்பத்திரண்டாம் அத்தியாயம்

## முதலைச் சுனை

ரோகிணியிடம் அவள் தந்தை கூறிய அடையாளங்களை நினைவில் வைத்துக்கொண்டு, கருக்கிருட்டு நேரத்தில் இளங்கோ அந்த மலைச்சுனையைத் தேடித் திரிந்தான். அவனுக்கு எதிரில் பொட்டல் வெளியில் திட்டுத் திட்டாக இரண்டு மலைகள் படுத்துக் கிடந்தன. இடதுபுறம் வெகு தூரத்தில் அடர்ந்த காட்டுக்கு மத்தியில் ஒரு மலை தலை தூக்கி நின்றது. இந்த மூன்று மலைகளில் எந்த மலையில் சுனை இருக்கிறது? சுனைக்குள்ளே உள்ள குகையை எப்படித் தேடிக் கண்டுபிடிப்பது?

பொழுது விடிவதற்கு முன்னர் சுனையின் இருப்பிடத்தைக் கண்டுபிடிக்கத் துடித்தான் இளங்கோ. மகிந்தரின் ஆட்கள் தன்னைத் தொடர்ந்து வரக் கூடும் என்ற அச்சம் அவனிடம் நிறைந்திருந்தது. ஒருவேளை, அவர்கள் மலையின் உச்சியிலிருந்து பார்த்தால், பகல் பொழுது அவனை அவர்களுக்குக் காட்டிக் கொடுத்து விடுமல்லவா? கருக்கிருட்டு நேரத்தைத் தனக்குக் கவசமாக்கிக் கொள்ள நினைத்தான் இளங்கோ.

நேரம் அவனுடைய விருப்பத்துக்காகக் கட்டுப்பட்டு நிற்கவில்லை. பொழுது புலர்ந்துகொண்டு வருவதற்கான அறிகுறிகள் மெல்ல மெல்லத் தோன்றத் தொடங்கின. கீழ்வானம் தீப்பட்டுக் கனிந்த பொன் தகடாகமாறியது. கானகத்துப் புள்ளினங்கள் பாட்டிசைத்துக் காலைப் பொழுதை வரவேற்றன. இளங்கோ மறைந்து மறைந்து சென்றான். கையில் அவன் குகையிலிருந்து எடுத்துக் கொண்டுவந்த கூர் வேல் பளிச்சிட்டது. இடையில் உடைவாள் தொங்கியது.

பொட்டல் வெளி மலைகளில் மணிமுடி இருக்கக் கூடும் என்ற சந்தேகம் அவனிடம் எழவில்லை. தேடுவாரற்ற அநாதைகளைப் போல் அவை திறந்த வெளியில் வெறும் பாறைகளாய்க் கிடந்தன. அவற்றில் ஒன்றின்மீது ஏறி, அதன் உச்சி முகட்டுக்கு வந்தான் இளங்கோ. தன்னையும் மறைத்துக்கொண்டு, தன் கண்களையும் கதிரொளியிலிருந்து மறைத்துக்கொண்டு, தொலைவில் தெரிந்த இடது புறத்து மலையைக் கூர்ந்து நோக்கினான்.

முகத்திரை யணிந்த முரட்டுப் பெண் ணொருத்திபயத்தோடு தலையைத்தூக்கிப் பதுங்கிப் பார்ப்பது போல், அடர்ந்த மரக் கூட்டத்தின் மையத்தில், மௌடீகமான தோற்றத்துடன் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தது அந்த மலை. இளங்கோவுக்கு நேர் எதிரில் அந்த மலையை ஒட்டினாற்போல் புகை மண்டலம் மேலே எழும்பிக் கொண்டிருந்தது. மேகத்திரள் அல்ல அது. குளிர் காய்வதற்காகவோ, காலை உணவுக்காகவோ அங்கு சிலர் நெருப்பு மூட்டியிருக்க வேண்டும்.

அதே இடம்தான் என்பது இளங்கோவுக்கு நிச்சயமாகி விட்டது. ஆனால் அங்கு கட்டுக்காவல் இருக்கக் கூடும் என்று அவன் நினைக்கவில்லை. மகிந்தர் அடுத்தாற்போல் தமது வீரர்களுடன் தங்கியிருந்ததால், குகைக்கு வேறு தனியான பாதுகாப்பு இருக்காதென்று எண்ணினான். அவருடைய வீரர்கள் தேடி வருவதற்கு முன்பு எவ்வளவோ காரியங்களைச் சாதிக்க முடியும்.

இப்போது அது முடியாதுபோல் தோன்றியது. என்றாலும் அவன் சற்றும் மனம் தளரவில்லை. முன்வைத்த காலைப் பின்வைக்கவில்லை.

மலையிலிருந்து இறங்கி, புதர்களின் வழியே தவழ்ந்து, மரக் கூட்டத்துக்குள் புகுந்தான். பாதை எதுவும் அவன் கண்களுக்குப் படவில்லை. மலையைக் குறி வைத்துக்கொண்டு தன் போக்கில் நடந்தான். காட்டு மரக் கிளைகள், முரட்டுக் கொடிகள், கூரான முட்புதர்கள் இவையெல்லாம் அவனைத் தடுத்துச் சோதனை செய்து பார்த்தன. பாம்புகள், பறவைகள், அட்டைகள் முதலிய சின்னஞ்சிறு பிராணிகள் அவனுடைய குறுக்கீட்டை விரும்பாமல் அங்குமிங்கும் சிதறிச் சென்றன. விநோதமான அனுபவம் இளங்கோவுக்கு.

மலையின் அடிவாரம் கண்களுக்குப் புலப்படத் தொடங்கிய பின் மிகவும் விழிப்போடு முன்னேறினான் இளங்கோ. அருகில் நெருங்க நெருங்க அந்த இடம் எவ்வளவு பயங்கரமானது என்பது விளங்கியது. இனியும் முன்னால் போக முடியாது. ஆளரவம் கேட்கிறது.

ஓர் ஆள் உயரத்துக்குமேல் தென்பட்ட ஒரே ஒரு குகை வாயிலைத் தவிர, மற்ற இருபுறங்களிலும் அவனுடைய கண்ணுக் கெட்டியவரை மலை செங்குத்தாகவே நின்றது. தன்னிடம் நெருங்கி வருபவர்களை விழுங்கக் காத்திருப்பது போல் அது தன் வாயைப் பிளந்து கொண்டு காத்திருக்கிறதா? அதன் கடைவாய்ப் பற்களைப்போல் பக்கத்துக்கொன்றாக இருபுறமும் இரண்டு வேல் முனைகள் நீட்டிக்கொண்டு நின்றன. குகைக்குள்ளே பாறைகளில் அமர்ந்திருந்த இரண்டு வீரர்களின் உருவங்கள் மங்கலாகத் தெரிந்தன.

கைவேலை இடுக்கிக்கொண்டு மரத்தின் மேல் ஏறிக் கிளையில் உட்கார்ந்து கொண்டு, இலைகளை விலக்கி விட்டுப்

பார்த்தான் இளங்கோ. வலது புறம் ஒரு குறுகலான பாதை சென்றது. நீண்ட கயிற்றினால் சிறு பாறையில் கட்டப்பெற்று இரண்டு குதிரைகள் புல் மேய்ந்து கொண்டிருந்தன. 'இரண்டே இரண்டு வீரர்கள்தானே! பார்த்துக் கொள்ளலாம்' என்ற நெஞ்சத் துணிவு பிறந்தது அவனுக்கு.

இடதுபுறம் திரும்பிய கண்கள் அங்கே இன்னும் இருவர் மரத்தடியில் உணவு சமைப்பதில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு திகைத்தன. மெதுவாகக் குகை வாயில் மேலே தன் விழிகளை உயர்த்தினான். விழிகள் இமைப்பை மறந்து நிலைகுத்தி நின்று விட்டன.

குகை வாயில் முடிந்த இடத்திலிருந்து மலைச் சரிவில் பாகத்துக்கொரு மரமும், மரத்துக்கொரு வேல் முனையும் தெரிந்தன. வேல் முனைகளை எண்ணிப் பார்த்தான். இன்னும் அறுவர்!

முன்னால் அவர்களை மரங்கள் மறைத்தன. பின்னால் அவர்களுக்கு மலைக் குடைவுகள் பாதுகாப்பளித்தன. அந்தச் சரிவின் வழியாகத்தான் கணைக்குப் போக வேண்டும் போலும். அங்கே அவர்கள் நிற்கும் வரையில் அவர்களால் எதிர்ப்பவர்களுக்கு ஆபத்தே தவிர, அவர்களுக்கு ஒரு தொல்லையும் கிடையாது. முன்புறம் மரங்களும் பின்புறம் மலைக் குடைவுகளும் அவர்களைக் காக்கும் கேடயங்கள்.

இருபது முப்பது வீரர்களுடன் அவன் கூட்டமாக வந்திருந்தால் அவர்களை முறியடிக்க வழியுண்டு. இருபது விரல்களும், ஒரு வாளும், ஒரு வேலுந்தான் இப்போது இளங்கோவுக்குத் துணை. அவன் தனி மனிதன். அவனுக்கெதிரே பாதுகாப்பான இடத்தில் பத்துப்பேர்.

மரத்தை விட்டுக் கீழே இறங்கி நெற்றியை அழுத்தித் தேய்த்துக் கொண்டான் இளங்கோ. தனியே துணிந்து சென்றால் அவர்களிடம் உயிரைப் பறிகொடுக்க வேண்டியதுதான்; மூடியிருக்கும் கணையை எட்டிப் பார்க்கக்கூட இளங்கோவை விடமாட்டார்களே.

பேசாமல் திரும்பிச் சென்று விடலாமா? கப்பகல்லகத்துக்குச் சென்று, வேண்டிய அளவு வீரர்களைத் திரட்டிக் கொண்டு வருவதுதான் நல்லது. ஆனால் அதுவரையில் மணிமுடி இந்த இடத்தில் இருக்குமென்பது என்ன நிச்சயம்? மகிந்தரின் வீரர்கள் எந்த வேளையிலும் இங்கு வருவார்கள். எடுத்துக் கொண்டுபோய் வேறிடத்தில் மறைத்து வைக்கத் தவறமாட்டார்கள். — அவர்கள் தலைநகரத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்த விஷயம் அவனுக்குத் தெரியாது.

இடத்தைக் கண்ட பிறகு அவனுக்கு அதைவிட்டுப் போகவே மனமில்லை. எப்படியாவது எடுத்துக் கொண்டுதான் போக வேண்டும். ஒரு நாளானாலும் சரி, ஒன்பது நாளானாலும் சரி, வெறுங் கையோடு திரும்பக் கூடாது.

வலது கைப்புறமாகவே மரங்களுக்கிடையில் புகுந்து மலையைச் சுற்றி வந்தான் இளங்கோ. மலை எந்த இடத்திலும் சரிந்து காணப் படவில்லை. மனிதனின் காலடிச் சுவடு, தன் குகை வாயில் வழி தவிர, வேறெந்தப் பகுதியிலும் படக்கூடா தென்பது போல் அது நிமிர்ந்து நின்றது. சிறிது சாய்வு கண்டிருந்த இடைவெளிகளையும் மரங்கள் நிரப்பிக் கொண்டிருந்தன.

நேரம் ஆகியது. வருவது வரட்டும் என்ற முடிவோடு இளங்கோ ஒரு நெடு மரத்தைப் பற்றிக் கொண்டு தொத்தினான். மரத்துக்கு மரம் அடுக்காக நெருங்கி யிருந்தது. மரத்துக்கு மரம் தாவும் வானரமாக மாறுவதைத் தவிர வேறு வழியில்லை. நெடு வேலைத் தன் பற்களால் இடுக்கிக் கொண்டு, கிளைகளில் அது மோதி அவனைக் கீழே தள்ளாமல் பார்த்துக் கொண்டு, தழைத்துப் பெருகியிருந்த இலைக் கூட்டத்துக்கு இடையே மறைந்தான்.

நின்று கொண்டிருக்கும் யானையின் முதுகில் யாரும் அதன் வாலைப் பிடித்துக் கொண்டு ஏறும் வழக்கமில்லை. யானையின் வாலாக இளங்கோவுக்கு மரங்கள் பயன்பட்டன. மலையின் முதுகுப் புறத்துக்கு எப்படியோ தட்டுத் தடுமாறி வந்து சேர்ந்தான். வெள்ளமாய்ப் பெருக்கெடுத்து வழிந்த வேர்வையைத் துடைத்து விட்டுக் கொண்டான்.

நல்ல வேளையாக மலையின் முதுகில் பச்சைப் பசேலென்று மலைப்புல் புதராக மண்டிக் கிடந்தது. அதனிடையே புகுந்து தன்னை மறைத்துக்கொண்டு மெல்ல மெல்ல நகர்ந்தான் இளங்கோ. மலையின் நடுப்பகுதிக்கு வந்தவுடன், திடீரென்று வீசிய குளிர்காற்று கணையின் அருகே அவன் நெருங்கி விட்டதைச் சொல்லிற்று. இன்னும் சில விநாடிகளில் மலைப்புல்லின் இடுக்குகள் வழியே அவன் கணையை நேரில் கண்டான்.

கதிரொளியை உண்ட மயக்கத்தில் அது படிகம் போல் தேங்கிக் கிடந்தது. அவனுக்கு நேர் எதிரில் கணையில் சில பழுப்பு இலைகள் விழுந்து அழுகிக் கொண்டிருந்தன. ஒரு புறம் பாறை செங்குத்தாகக் கீழ்நோக்கி இறங்கியும், மறுபுறம் சரிவாகக் கரைந்து வந்தும் கணை நீரைத் தேக்கிக் கொண்டிருந்தது.

அருவியைச் சுற்றிலும் மேற்புறத்தில் செடிகொடிகளோ மறைவிடங்களோ

காணப்படவில்லை. எதிர்க்கரையில் ஒரே ஒரு காட்டுமரம் தலைவிரித்து நின்று கொண்டிருந்தது. அவ்வளவு பழுப்பு இலைகளும் அதிலிருந்து விழுந்தவை யாகத்தான் இருக்க வேண்டும்.

பளிங்கு போன்ற தண்ணீரில் தெரிந்த அந்த மரத்தின் பிரதிபிம்பத்தை உற்று நோக்கினான் இளங்கோ. நிழலில் மரத்தின் கிளை நடுங்குவதையும், நடுங்கும் கிளையில் ஒருவன் சாய்ந்து கொண்டு சோம்பல் முறிப்பதையும் கண்டான். அவனுடைய கால்களில் ஒன்று கிளைக்குக் கீழே தொங்கியது. பெரிய வில்லும் அம்புகள் நிறைந்த தூணியும் அவனிடம் இருந்தன.

அம்புக் கூட்டைக் கிளையில் கட்டியிருந்தான். வில் அவன் காலைப் போலவே மரக்கிளையிலிருந்து தொங்கியது. காவலுக்கு நிற்கும் பத்துப் பேர்கள் போதாதென்று இவனும் ஒருவனா!

மூச்சு விட்டால் கூடப் புல் நடுங்கு மென்று பயந்து இளங்கோ சுவாசத்தைக் கட்டுப்படுத்தித் திணறிக் கொண்டிருந்தான். அவனுடைய விழிகள் மரத்தை ஒட்டினாற் போல் அதற்குப் பின்னால் தெரிந்த வட்ட வடிவப் பாறையை நோக்கின. பெரிய பந்தைப் போல் உருண்டை வடிவத்தில் அது மலையோடு மலையாக ஒட்டிக் கொண்டு நின்றது.

அந்த உருண்டைக் கல்லுக்குப் பின்னால் இன்னும் எத்தனைபேர்கள் மறைந்திருக்கிறார்களோ? நின்று கொண்டிருந்தால் மனிதர்களின் தலை மேலே தெரியும். உட்கார்ந்திருந்தால் தெரியாது. அங்கே யாரும் இருக்கிறார்களோ, இல்லையோ!

இளங்கோவிடம் இப்போது கேடயமும் கிடையாது; கவசமும் கிடையாது. மகிந்தரின் ஆட்கள் அவற்றைப் பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். மரத்தின் மேல் இருப்பவனின் கண்களில் இப்போது தட்டுப்பட்டுவிட்டால் மரணத்தின் கண்களுக்குத் தட்டுப்படுவது போலத்தான். கேடயம் இல்லாவிட்டாலும் அவன் எரியும் அம்புகளை இளங்கோ தன் கை வேலால் தடுத்துக் கொள்ள முடியும். ஆனால் அவன் கூக்குரல் எழுப்பிக் கூட்டம் சேர்த்துத் தொலைப்பானே!

வீரத்துடன் விவேகமும் வேண்டுமென்று சொல்லியனுப்பியிருக்கிறாள் அருள்மொழி நங்கை. அந்த விவேகம் முதல் நாளிரவு ரோகிணியைக் கண்டவுடன் விடைபெற்றுக் கொண்டு விட்டது. அதன் பலனையும் அநுபவித்து மீண்டாயிற்று. இனியாவது விவேகத்தை நம்பி, அதே இடத்தில் சிறிது நேரம் காத்துக் கிடக்க வேண்டும்.

நெல் நாற்றுப் படுகை போன்ற மலைப் புல் படுகைக்குள் இளங்கோ சலனமற்றுப் படுத்துக் கிடந்தான். சிறிது நேரத்தில் எங்கிருந்தோ ஒரு கூக்குரல் எழுந்து அவனை அதிர்ச்சியுறச் செய்தது. நாடி நரம்புகள் அனைத்தும் அவனுக்குக் கலகலத்து விட்டன.

மரத்தின் மீதிருந்தவன் பதில் குரல் கொடுத்துக்கொண்டே அந்த உருண்டைக் கல்லின்மேல் குதித்துக் கீழே இறங்கினான். சுற்றுமுற்றும் ஒரு முறை கூர்ந்து நோக்கினான். இளங்கோவுக்கு வேர்த்துக் கொட்டியது. அவனுடைய வரவு அவர்களுக்குத் தெரிந்து விட்டதா?

காவலன் பிறகு உருண்டைக் கல்லுக்குப் பின்புறம் சென்று மறைந்தான். அங்கே அவனும் மற்றொருவனும் ஏதோ பேசிக் கொண்டார்கள். அடுத்தாற் போல், முதலில் சென்றவனே கையில் தூக்க முடியாமல் ஒரு பெரிய ஆலம் விழுதைத் தூக்கிக்கொண்டு திரும்பி



வந்தான். ஆலம் விழுதா அது? அல்ல மலைப் பாம்பு!

உயிருள்ள பாம்பாக இருந்திருந்தால் அது தன்னைத் தூக்கி வந்தவனை உயிருடன் விட்டிருக்காது. அதை அவன் சிரமப்பட்டுச் சுமந்து கொண்டு சுனைக்குள் இறங்கினான். வாலைப் பிடித்துக் கொண்டு அதன் தலையைத் தண்ணீரில் விட்டுத் துழாவினான்.

"இந்தா! விரைந்து வா! எனக்கும் பசிக்கிறது நீ இதை விழுங்குகிற நேரத்துக்குள் நானும் போய் உணவருந்தி விட்டு வருகிறேன்."

இளங்கோவின் கண்களுக்குப் புலப்படாத எதனிடமோ பேச்சுக் கொடுத்தான் அவன்.

மறு கணத்தில் அந்தச் சுனையே கலங்குவதுபோல் பேரலைகள் எழுந்தன. 'பளீர் பளீர்' என்று நீர்த்திவலைகள் நாலாபுறமும் சிதறி விழுந்தன. பாம்பை வீசி

நடுச் சுனையில் எறிந்து விட்டுத் தலை தெறிக்க ஓடினான் காவலாளி.

இளங்கோ கண்ட காட்சி அவன் அடி வயிற்றைப் புரட்டியது. மிகப் பெரிய முதலையின் முதுகு மலைக் குன்றின் மேல் பாகம் போல் தெரிந்தது. வாயைப் பிளந்து கொண்டு வந்து மலைப் பாம்பின் தலையைக் கவ்வியது அது. அதை அடுத்துச் சுனை நீரில் அந்த முதலை சுழித்த சுழிப்புகளும், வளைந்த வளைவுகளும் பயங்கரமாக இருந்தன. உயிருள்ள பாம்புடன் போராடுவதாக அது நினைத்துக் கொண்டது போலும்!

காவல் காத்துக் கொண்டிருந்தவன் தன் வில்லையும் அம்புக் கூட்டையும் மரத்தில் வைத்து விட்டுப் போய் விட்டான். அவனுடைய தலை உருண்டைப் பாறைக்குப்பின் மறைந்தவுடன் மெல்ல எழுந்து நடந்தான் இளங்கோ. பாறைக்குப் பின்னால் எட்டிப் பார்த்தான். அங்கு வேறு யாருமில்லை.

விசாலமற்ற குறுகலான ஒரு பாதை அங்கிருந்து நேரே சென்று குகை வாயிலின் பின்பக்கம் முடிவடைந்தது. சுரங்க வாயிலைப் போன்று தெரிந்த சின்னஞ்சிறு பிலத்துக்குள் நுழைந்து குகைக்குள் இறங்கிக் கொண்டிருந்தான் அந்தக் காவலன். இடுப்பளவு தெரிந்த அவன் உருவம் ஒரு விநாடிக்குப் பின் பிலத்தின் இருளில் மறைந்தது.

'அரை நாழிகை அல்லது ஒரு நாழிகைக்குள் அவன் திரும்பி வரக்கூடும். இந்தப் பொன்னான நேரம் போய்விட்டால் பிறகு மண்ணில் பிறந்ததில் பலனில்லை' என்று எண்ணிக் கொண்டான் இளங்கோ.

வீரன் விட்டுச் சென்ற வில்லும் அம்புகளும் அவனுக்குத் தெம்பு தந்தன.

மலைப் பாம்பை விழுங்கிக் கொண்டிருந்த முதலை அவனை மலைக்க வைத்தது

பளிங்குச் சுனையின் மார்பகத்தில், செங்குத்தான பாறையில், நீர் மட்டத்துக்குக் கீழே குகை இருப்பது இளங்கோவின் கண்களுக்குத் தெரிந்தது.

பாம்பை முதலை பாதி அளவு விழுங்கி விட்டு, மறு பாதியைக் குகைக்குள்ளே இழுத்துச் சென்றது. (தொடரும்)





நீங்கள்

# ஸாத்தே

பிஸ்கத்துகளையும்
சாக்லெட்டுகளையும்
வாங்குவீர்களேயானால்,
அவைகளில் மிகச்
சிறந்தவைகளையே நீங்கள்
வாங்குகிறீர்கள்
















**ஸாத்தே பிஸ்கட் அண்டு சாக்லெட் கம். லிட்., பூனா-2**

Heros' 98. TAM

நாடக மேடை

# வளம் பெற்ற வாழ்வு

— காந்தன்

உலகத்தில், எல்லா நாடுகளிலும் இரட்டைக் குழந்தைகள் பிறப்பது சகஜம். ஆனால் எல்லா இரட்டைக் குழந்தைகளும் அதிர்ஷ்டமாயிருக்கும் என்று சொல்ல முடியாது. உலக இயல்பை ஒட்டி வேண்டுமானால் இப்படிச் சொல்லலாம். நாடக மேடை, சினிமா இவைகளில் வரும் இரட்டைப் பிறவிகளுக்கு நிச்சயம் ஒரு தனி அந்தஸ்து உண்டு. எத்தனையோ நாடகங்களில் குழப்பம் ஏற்படுத்திய இரட்டைப் பிறவிகள் வெள்ளித்திரைக் கதைகளிலும் தோன்றி வெளுத்து வாங்கியிருக்கின்றனர். ஆரம்பத்தில் குழப்பத்துக்குக் காரணமாயிருந்த இரட்டைக் குழந்தைகளே கடைசியில் குழப்பத்தைத் தவிர்த்து நாடகத்தையும், சினிமாவையும் நல்லபடியாக முடித்து வைக்கின்றனர்.

சினிமா, நாடகக் காட்சிகளில் சிலவற்றைக் கண்டு விட்டு ரசிகர்கள் கொஞ்சம் ஏமாந்தால் தான் நாடகத்துக்கும் சரி, படத்துக்கும் சரி களை கட்டும். ஆனால் இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. அதாவது ரசிகர்கள் கொஞ்சம் ஏமாந்து போகலாமேயன்றி அடியோடு ஏமாற்றம் அடைந்து விடக் கூடாது. ரசிகர்கள் ஏமாற்றம் அடைய நேரிட்டால் நிச்சயம் நாடக வசூலிலும் ஏமாற்றம் ஏற்படும்!

குலதெய்வம் நாடக மன்றத்தார் சமீபத்தில் ராஜா அண்ணாமலை மன்றத்தில் நடத்திய "வளம் பெற்ற வாழ்வு" என்ற நாடகம் இரட்டைப் பிறவிகளால் தான் வளம் பெற்றது. நாடகத்தில் அந்தச் சம்பவம் மிகவும் நன்றாக இடம் பெற்றுவிட்டது.

அறிவொளி, செல்லம் என்ற இரண்டு பெண்களும் சிதம்பரம் குப்புசாமிப்பிள்ளையின் இரட்டைச் செல்வங்கள். காணாமற்போனதாகக் கருதப்பட்ட பெண் தான் செல்லம். அவள் சேகரை மணந்து கொள்கிறாள். அறிவொளி அத்தான் சுந்தரத்தை மணக்க விரும்புகிறாள். ஆனால் சுந்தரம் ஞானம் என்ற ஓர் ஏழைப் பெண்ணை மணந்து கொள்கிறான். அறிவொளி இதை அறிந்ததும் துடிக்கிறாள். ஞானம் ஒரு மகவை ஈன்று இறக்கிறாள். அறிவொளி அந்தக் குழந்தையை வளர்க்கும்பொருட்டு அத்தான் சுந்தரத்திடமே தங்கியிருக்கிறாள். அறிவொளியின் பள்ளித் தோழன் நாகநாதன் அவளைக் காதலித்துத் தோல்வியடைந்து விடவே வில்லனாகிறான். அறிவொளியைத் தேடியலைந்த நாகநாதன் கண்களுக்குச் செல்லம் அறிவொளியாகத் தோன்றுகிறாள்.

அறிவொளி, செல்லம் இரண்டு பாத்திரங்களும் உருக்கமான பாத்திரங்கள். உள்ளத்தில் சிறிதும் கள்ளம், கபடு இன்றிப் பிள்ளைப் பிராயம் முதல் தன் அத்தான் சுந்தரத்தைக் காதலித்துக் கடைசியில் படுதோல்வி அடைந்தவள் அறிவொளி.

செல்லம் கணவனின் அன்பைப் பரிபூரணமாகப் பெற்றிருந்தும், இரட்டையாகப் பிறந்து தன் தங்கையின் உருவ ஒற்றுமையைப் பெற்றிருந்த காரணத்தால் வில்லனின் கொடுமைக்குள்ளானவள். கணவனின் தூய்மையையே சந்தேகப்படும் அளவுக்கு உருவ ஒற்றுமை சதி செய்கிறது. மாலைக் கண் நோய் வேறு அவள் பார்வையை மறைக்கிறது.

அறிவொளியாக வந்து ஆடிப் பாடி, அத்தானைக் காதலித்து அகமகிழ்ந்த போதும், அத்தான் தனக்கில்லை என்றறிந்து பதறித்தவித்த போதும் அந்தப் பாத்திரத்தை ஏற்ற எஸ். வி. வசந்தா அற்புதமாக நடித்தார். அவர் முகத்தில் தோன்றிய சந்தர்ப்பங்களுக்கு ஏற்ற முக பாவங்கள் இன்னும் என் கண்ணெதிரிலேயே நிற்கின்றன.

செல்லத்தின் நடிப்பும், பேச்சும் மிகவும் உயர்ந்து விளங்கின. கணவனின் தூய்மையைச் சந்தேகித்தது, கண்பார்வை அற்றிருந்த போது காணப்பட்ட தடுமாற்றம், கடைசியில் இணற்றில் குதித்தது ஆகிய கட்டங்களில் செல்லம் எல்லோருடைய உள்ளங்களையும் உருக்கி விட்டாள்.

அறிவொளி, செல்லம் என்னும் இரண்டு பாத்திரங்களையும் எஸ். வி. வசந்தாவே ஏற்று நடித்தார் என்பதைக் கண்டு கொண்டாலும் என்னால் அதை இலேசில் நம்ப முடியவில்லை. இரண்டு பாகங்களையும் வெவ்வேறு நடிகைகள்தான் ஏற்றிருப்பார்களோ என்று பிரமிக்கத் தோன்றியது.





அத்தான் சுந்தரம் ஒரு நல்ல பாத்திரம். கே. ஆர். கிருஷ்ணன் அதை ஏற்று அழகுற நடித்தார்.

வி. ஆர். ராஜகோபால் வேலைக்காரச் சம்பந்தமாக வந்து எல்லோரையும் சிரிக்க வைத்து அதே சமயத்தில் உருகவும் வைத்தார்.

கிணற்றில் விழுந்த செல்லத்தைப் பின் பற்றிப் பாய்ந்து கிணற்றினுள் குதித்தபோது அனைவரையும் உருக்குகிற ராஜகோபால், தன் எஜமான் சுந்தரத்துக்குச் சாப்பாடு போட்டபோது சிரிக்க வைத்து ரஸிக்கவும் வைத்தார்.

நாடகம் முழுவதும் நல்ல ஹாஸ்ய வெடிகள் இழையோடி நிற்கின்றன.

கல்யாணம் முடிந்ததும் நாடகம் ஆரம்ப மாகிறது. அது புதுமையாக இருப்பதுடன் விறுவிறுப்பாகவும் இருக்கிறது. நாடகம் வெறும் காதல் கதையாக இல்லை.

செல்லத்தின் கணவன் சேகராக வரும் எஸ். ஆர். தசரதன் மிகவும் இயல்பாக நடித்தார். மனைவியினுல் அடாண்டமாகச் சந்தேகிக்கப்பட்ட போது அவர் துடித்தது மிகவும் உருக்கமாயிருந்தது.

தஞ்சை கல்யாணசுந்தரம் அறிவொளியின் தந்தையாக வந்து நிதானமாகவும், வேக மாகவும், கோபமாகவும் நடித்து எல்லோரை யும் அயரச் செய்து விட்டார்.

இந்த நாடகத்தை இயற்றியவர் தஞ்சை கல்யாண சுந்தரம் அவர்கள்தான் என்று அறிந்ததும் நான் அயர்ந்து போனேன். உள்ளக் குமுறலும், உயிர்த் துடிப்பும் நிறைந்து முழுவதும் பார்க்கத் தூண்டும் ஒரு நாடகத்தை இயற்றி வெற்றி பெற்றதோடு நின்றுவிடாமல், அதில் தாமும் ஒரு பாத்திரம் ஏற்று வெற்றிகரமாக நடித்து விட்டார்.

வில்லன் நாகநாதனாக வந்த கே. கே. சௌந்தரும் தம் பாகத்தைச் சிறப்பாக நடித்தார்.

வேலைக்காரன் சம்பந்தத்தின் ஜோடி மோர்க்காரி அஞ்சலையாக வந்த நிர்மலா, சுந்தரத்தின் மனைவி ஞானத்தின் பாகத்தை ஏற்ற காமாட்சி ஆகியவர்கள் குற்றங்குறை களுக்கு இடம் கொடாமல் நடித்தனர்.

அனேகமாக நாடகங்களில் வழக்கமாக ஏற்படும் குறை இதில் தென்படாதது எனக்கு மிகவும் திருப்தியளித்தது. நாடகமேடை யின் இருபுறங்களிலும் தோன்றுமல் தோன் றிக் கடைசி வரையில் நாடகத்தை நடத்தி வைக்கும் பிராம்ப்டர் 'களை'யே குறிப்பிடு கிறேன். ஒத்திகைகள் நடத்துவதற்குச் சோம் பேறித்தனப்பட்டுக் கொண்டு பல நாடகக் குழுவினர் 'பிராம்ப்டர்'களை நம்பியிருக்கின்ற னர். அது நாடகத்தையே கெடுத்து விடுகிறது.

பத்திரிகைகளில் வரும் கதைகளுக்குப் படங்கள் இன்றியமையாத அம்சமாகிவிட்டது போல், நாடகங்களுக்கு வாத்திய கோஷ்டி இன்றியமையாததாகி விட்டது. "வளம் பெற்ற வாழ்"வில் வாத்திய கோஷ்டி இனி மையாக அமைந்திருந்தது.

ஆரம்பத்திலேயே களைகட்டிவிடும் அழுத்த மான கதைப் போக்கும், கடைசிக் காட்சி வரையில் ததும்பிப் பொங்கும் ஹாஸ்ய ரஸமும், எல்லாக் காட்சிகளிலும் மெல்லிய நூல்போல் இழையோடும் சோக ரஸமும், அலுப்புத் தட்டாத காட்சி அமைப்புகளும் சேர்ந்து இந்த நாடகத்துக்குத் தனிச்சிறப்பை அளித்துவிட்டன.

பாத்திரங்களின் வாயசைப்போடு சரியாக ஒத்துழைக்க மறுத்துவிட்ட பாடல்கள் தவிர இந் நாடகத்தில் குறை கூற எதுவும் இல்லை.





## சுதந்திரக் கட்சியும் காந்தி ஜெயந்தியும்

மயிலை சுதந்திரக் கட்சியினர் சென்ற அக்டோபர் 7-ந் தேதி, காந்தி ஜெயந்தியை மயிலை ஸ்ரீனிவாஸ சாஸ்திரி மண்டபத்தில் பேராசிரியர் எம். ரத்னசுவாமி அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடினர். (1) மேடையின் தோற்றம். நின்று கொண்டு பேசுபவர் தான் முன்னுள் சட்டசபைக் காரியதரிசி திரு ஆர். வி. கிருஷ்ணய்யர் (2) கூட்டத்தின் ஒரு பகுதி (3) திரு கே. எம். சுப்பிரமண்யம் சக்கைப்போடு போட்டுக் கொண்டிருக்கிறார். (4) கூட்டத்தின் மற்றொரு பகுதி. (5) மயிலை சுதந்திரக்கட்சி அமைப்பாளர் திரு பன்னலால் சபையோரை வரவேற்கிறார். இவர்களைத் தவிர டாக்டர் சந்தோஷமும், திரு எஸ். எஸ். மாரிசாமியும் பேசினர்.







போட்டோ : விசுவநாதன்




சுதந்திரக் கட்சிக் கிளைக் காரியாலயங்கள், கட்சிப் பிரசாரச் கூட்டங்களை நாட்டில் பலஇடங்களில் நடத்திவருகின்றன. சென்னையில் பேட்டை தோறும் கூட்டங்கள் நடைபெற்று வருகின்றன. திருவல்லிக்கேணியில் அக்டோபர் 5ம் தேதி மாலை தவன உற்சவ மண்டபத்தில் ஒரு பெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டம் மண்டபம் முழுதும் நிரம்பி வெளியிலும் ஜேஜே என்றிருந்தது. அன்று அந்தக் கூட்டத்தில், 1. ராஜாஜி, 2. திரு கே. ஆர். ஆர். சாஸ்திரி, 3. திரு ஆர். எம். சேஷாத்ரி, ஐ. ஸி. எஸ். ரிடையர்டு, 4. திரு காதர், 6. திரு கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார் பேசினர். இவர்கள் தவிர, டாக்டர் சந்தோஷம், பழையதேசபக்தர் திரு ஏ. ஆர். வி. ஆச்சார் முதலியோரும் பேசியிருக்கின்றனர்.












நாள் முழுவதும்
# புத்துணர்ச்சியுடன்
இருக்க

வசீகரமான மணம், மிகவும் மென்மையான டால்க், சருமங்களில் கறைகளையும், வியர்வை நாற்றத்தையும் உண்டாக்கும் கிருமிகளை நாசம் செய்யும், மற்ற டாய்லெட் பவுடர்களிலில்லாத உலகப் பிரசித்தி பெற்ற ஜி-11★ உள்ளது . . . இருந்த போதிலும் கோத்ரெஜ் டாய்லெட் பவுடர் விலை அதிகமில்லை.
வேர்க்குரு போன்ற சரும உபாதைகளுக்கு துரிதமாக நிரந்தர நிவாரணமளிக்கிறது — குழந்தைகளுக்கு ஓர் வரப்பிரசாதம்.

**கோத்ரெஜ்**

டாய்லெட் பவுடர்

துர்நாற்றத்தைப் போக்க வல்லது . பாதுகாப்பு அளிப்பது . நறுமணமுள்ளது . மென்மையானது.

பூரண பாதுகாப்புக்கு சிந்தாலினுல் ஸ்நானம் செய்த பிறகு உபயோகியுங்கள்.

( ★ பேடன்ட் ஹெக்ஸா-க்ளோரோபின் யு.எஸ்.பி. )




**கோத்ரெஜ்** மிகச் சிறந்த சோப்புகளை தயாரிக்கிறார்கள்

நீங்கள் உறங்கும்போதே
# ஆஸ்தமா சளிகரைகிறது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல் சுவாசம் தடைபடுதல் ஆஸ்த்மா, ப்ராங்கைட்டீஸ், ஜலதோஷம், குளிர்சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Hendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து இரத்தத்தின் மூலமாக சுவாசப்பைகள், சுவாசக் குழாய்கள், மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை நீக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சுவிடுதல், இல்லாமல் சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அதுநிச்சயமாக அளிக்கும்.

# கால் அரிப்பு சரும அரிப்பு

அரிப்பு எரிச்சல் முதலிய உபாதைகளை உங்களால் தாங்கமுடியாமல் வைத்தியம் செய்து விடும் போலிருக்கிறதா? உங்கள் சருமத்தில் வெடிப்புகள் தோன்றி தோல் உரிந்து ரத்தம் கசிகிறதா? பாதங்களிலும் கால் விரல்களுக்கிடையிலும் புண்கள் தோன்றி உபத்திரவம் செய்கின்றனவா? இவைகள் வெடித்துக் கசிந்து மேலும் புண்களை உண்டாக்குகின்றனவா? இவைகளுக்கெல்லாம் மூலகாரணம், சிரங்கப்பூர் சொறி வண்ணாரப்படை, என்று பல பெயர்களில் வழங்கப்படும் ஓர்வகைக் கிருமி. மூலகாரணமான இக்கிருமிகளை ஒழிக்கும்வரை இவ்வுபாதைகளிலிருந்து நிவாரணமடைய முடியாது. விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நிக்ஸோடர்ம் (NIXODERM) முதல்தடவை போட்டவுடனேயே அரிப்பை நிறுத்தி, கிருமிகளைக்கொன்று சருமத்தின் புண்ணை ஆற்றி மிருதுவாக்கி சுத்தப்படுத்த ஆரம்பிக்கிறது. நிக்ஸோடர்ம் (NIXODERM) அரிப்பை நிறுத்துவதில் வெற்றி கண்டுள்ளது. மேலும் பாதத்தின் மேலிருக்கும் புண்கள், மோசமாய் பரவும் படை, முகப்பருக்கள், கட்டிகள், முகத்திலோ அல்லது தேகத்திலோ பரவிய படர் தாமரை முதலிய உபாதைகளைக் குணமாக்குகிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (NIXODERM) வாங்குங்கள். பூர்ண திருப்தி அது நிச்சயமாக அளிக்கும்.

# ஆவினம் அழைக்கிறது

"கதிர்"

இரவு ஏழு மணி இருக்கும். சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தின் அருகே சென்று கொண்டிருந்தேன். மைதானத்திலிருந்து மாடு கன்றுகள் '' அம்மா...... அம்மே!'' என்று கத்தும் சத்தம் கேட்டது.

ஒன்றிரண்டு மாடுகள் போடும் சத்தமாயிருந்தால் பேசாமலே சென்றிருப்பேன். ஆனால், எழுநூறு, எண்ணூறு மாடுகள் கத்திக்கொண்டிருந்தபடியால் ஆச்சரியத்தால் கவரப்பட்டு, மைதானத்தின் முகப்பு வாயில் வழியாக உள்ளே நுழைந்தேன். நுழைந்ததும் ஒரு மரத்தடியில் யானையோ என்று சந்தேகிக்குமாறு பெரிய எருமைக் கடா ஒன்று அசையாமல் நின்று கொண்டிருந்தது. அதனருகே மனித உருவம் ஒன்றும் அசையாமல் நின்று கொண்டிருந்தது. இரு உருவங்களையும் ஒரு கண நேரம் உற்றுப் பார்த்ததும் கால்கள் நடுங்கத் தொடங்கின; சந்தேகமில்லை.....! நின்று கொண்டிருப்பது எமதூதனும் அவனுடைய வாகனமுமேதான்! அங்கிருந்து மெள்ள நழுவ முயன்றேன்.

'' நில்! போகாதே!'' என்று யம தூதன் கூறியதும் நின்று விட்டேன்.

'' உன்னைப் பார்க்க வேண்டுமென்று நினைத்தேன். நீயாகவே என்னிடம் வந்து விட்டாய்...... !'' என்று சொல்லி விட்டுப் பயங்கரமாகச் சிரித்தான் தூதன். அவனுடைய வாகனம் என்னை முறைத்துப் பார்த்து 'புஸ்' என்று சீறியது.

'' உன்னுடன் எமலோகத்துக்கு நான் வர மாட்டேன். பூலோகத்தில் எனக்கு இன்னும் ரொம்ப வேலை இருக்கிறது. நாவல் ஒன்று அரைகுறையாக எழுதி முடியாமல் இருக்கிறது. அதை முடிக்க வேண்டும். வீடு தேடிக் கொண்டிருக்கிறேன். அது இந்தச் சமயம் பார்த்துக் கிடைத்துவிடும் போலிருக்கிறது. சந்திரமண்டலத்துக்கு ரஷ்யா அனுப்பிய ராக்கெட்டின் விளைவுகளைக் குறித்து எனக்கும் என் பக்கத்து வீட்டுக்காரருக்கும் இரண்டு நாட்களாக நடந்து வரும் வாக்குவாதம் முடிவு பெறவில்லை. இப்படியாக, பூலோகத்தில் எவ்வளவோ காரியங்கள் தலைக்குமேல் இருக்கும்போது, தயவுசெய்து என்னை விட்டு விடுங்கள். உங்களுடன் கூட வரவோ, அல்லது நின்று பேசவோ எனக்கு நேரமில்லை. மன்னிக்கவும்!'' என்று கூறிவிட்டு நான் நகர்ந்ததுதான் தாமதம், ''என்னை எம தூதன் என்றே தீர்மானித்து விட்டாயா!'' என்று கேட்டுக்கொண்டே என்மீது பாய்ந்து பிடித்துக் கொண்டார் பழக்கமான வெளியூர் நண்பர்.

'' அடாடா! தாங்களா? இங்கே எப்போ வந்தீர்கள்? எருமை மாட்டுடன் இங்கே எதற்கு நின்று கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன். மறுதினம் அங்கு நடக்கப் போகும் தென் பிராந்திய கால்நடைக் கண்காட்சியில் கலந்துகொள்ளத் தமது இரண்டாயிரம் பவுண்டு கனமுள்ள எருமைக் கடா சகிதம் லாரியில் வந்து இறங்கி யிருப்பதாக நண்பர் கூறினார்.

சில தினங்களுக்கு முன் நடந்த இந்தக் கால்நடைக் காட்சியில் கேரளம், ஆந்திரம், மைசூர், சென்னை ஆகிய நான்கு ராஜ்யங்கள் பங்கெடுத்துக் கொண்டன.

கால்நடைக் காட்சியில் பெரும்பான்மை ஸ்தானம் வகித்தது மாடுகள்தான். கோழிகளும், ஆடுகளும் ஒரு சிறு அளவில் இங்கு பரிசு பெற வந்திருந்தன. ஒரே ஒரு குதிரையும் இந்தக் காட்சிக்கு வந்திருந்தது.

முதல் ஐந்து, ஆறு தினங்கள் வரையில் அங்கு கால்நடைக் கண்காட்சி நடப்பது நகரவாசிகள் பலருக்குத் தெரியாமல் இருந்த தென்றே கூற வேண்டும். ஆனால், ''பதினைந்து படி பால் கறக்கும் பசு வந்திருக்கிறது!'' என்ற செய்தி காட்டுத் தீ போல் பரவி இதைப் பார்க்கத் திரள் திரளாக நகரவாசிகள் கடைசித் தினத்தன்று கூடி விட்டார்கள். அந்த அதிசய மாட்டைக் கண்டு பிடிப்பதற்காகத் தொழுவங்களை யெல்லாம் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தார்கள்.

கண்காட்சியை முதல் நாள் சென்னை ராஜ்ய விவசாய மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் திறந்து வைத்தார். கடைசித் தினத்தில் ஆந்திர முதன் மந்திரி ஸ்ரீ சஞ்சீவி ரெட்டி சிறந்த கால்நடைகளுக்கான பரிசுகளைரொக்கமாகவும் வெள்ளிக் கோப்பைகளாகவும் வழங்கினார்.

ராஜ்ய சர்க்கார்களின் கால்நடைப் பண்ணைகள் பல இதில் கலந்து கொண்டதை விட, தனியார் வளர்க்கும் கால் நடைகளே அதிகம் வந்திருந்தன. இவற்றுக்குமட்டுமே பரிசுகள் அளித்தார்கள். ரொக்கப் பரிசு மட்டும் ரூ. 15,000 அளிக்கப்பட்டது. அரசாங்கப் பண்ணை கால்நடைகளுக்கு ரொக்கப் பரிசோ, கோப்பைகளோ அளிக்கவில்லை. அத்தாட்சிப் பத்திரம் மட்டிலும் வழங்கினார்கள்.

பரிசளிப்பின்போது வெற்றி பெற்ற காளைகளும் பசுக்களும், எருமை முதலியவைகளும் ஒவ்வொன்றாக மேடை முன் அழைத்து வரப்பட்ட காட்சி ரஸமா யிருந்தது.

உம்பளாச்சேரி மாடு







பரிசு பெற்ற கால்நடைகளில் பெரும்பான்மையானவை ஆவினங்கள்தான்.

* * *

மேல்நாடுகளில் பசுக்களைத்தான் முக்கியமாகப் பயன் படுத்துகிறார்கள். விவசாயத்துக்கும், வண்டி வாகனங்களுக்கும் இயந்திர சக்தியை உபயோகிப்பதால் காளைகளை அவர்கள் அவசியமாகக் கருதுவதில்லை. இந்தியாவிலோ நிலைமை முற்றிலும் மாறானதாயிருக்கிறது. பசுக்களும் வேண்டும்; விவசாயத்துக்குக் காளைகளும் வேண்டும்.

ஆனால், காளைகளும், பசுக்களும் நாட்டில் எந்த நிலைமையில் இருந்து வருகின்றன?

இந்தச் சோக வரலாறுகளைக் கேட்டால் திடுக்கிட வேண்டியதாயிருக்கும். இந்தியாவில் மனிதர்களின் எண்ணிக்கையை விடக் கால் நடைகளின் எண்ணிக்கைதான் அதிகம் என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். இருந்தும் ஏராளமான கால்நடைகள் போதிய உணவில்லாமல், காலப் போக்கில் நலிந்து, தரம் குறைந்து வருகின்றன. முக்கியமாக லட்சக் கணக்கான மாடுகள் கேட்பாரற்றுத் தெருக்களிலே திரிகின்றன. இந்த ஆவினங்கள்தான் இன்று நம்மை நோக்கி, "எங்களுக்கு வாழ்வு உண்டா?" என்று கேட்கின்றன. பதில் கூறும்படி நம்மை அழைக்கின்றன. தேச விடுதலைக்குப் பின் மக்களின் வாழ்வே க்ஷீணித்து வரும் போது ஆவினங்களுக்கு நாம் என்ன பதிலைக் கூற முடியும்?

எனினும் "இதோ நாங்கள் பதில் கூறுகிறோம்" என்பது போல் அன்று காட்சிச் சாலைக்கு வந்த சில தனிப்பட்டவர்கள், காளைகள், பசுக்களுக்கு வாழ்வு உண்டு என்பதை நிரூபித்துக் காட்டினார்கள்.

அவர்களிலே ஓங்கோல் தாலூக்காவிலிருந்து ஒரு விவசாய குடும்பத்தினர் கொண்டுவந்திருந்த ஓங்கோல் பசு அனைவரது கவனத்தையும் கவர்ந்தது. பரிசுகள் பல பெற்றுத் திகழும் இந்தப் பசுவை அந்தக் குடும்பத்தினர்





தங்களுடைய சொந்த மகளைப் போலவே வளர்க்கிறார்கள்.

'லட்சுமி' என்று பெயரிட்டு வெள்ளியில் கல் இழைத்த நகைகள் செய்து போட்டிருக்கிறார்கள். காலில் கொலுசுகளும் உண்டு இதற்கு. லட்சுமியுடன் அடிக்கடி அவர்கள் ஏதோ பேசி விட்டுப் போகிறார்கள். என்ன பூ வேண்டும் என்று கேட்கிறார்கள். கன்னத்தை இழைக்கிறார்கள். இவ்வளவையும் புரிந்து கொண்டதுபோல் லட்சுமியும் காதுகளைத் திருப்பிக் கண்களால் உரையாடுகின்றது.

காட்சிக்கு வந்திருந்த கிர் இனப் பசுக்களையும், காளைகளையும் பற்றிக் கேட்டபோது, கிருஷ்ண பகவானின் கோகுலத்துக்கே வந்து விட்டோமோ என்ற சந்தேகம் உதித்தது. ஏனெனில், இந்த கிர் இனக் காளைகளைத்தான் பொல்லாத கண்ணன் மேய்த்துக் குளிப்பாட்டி வந்தானாம். கண்ணனுக்குப் பாலித்த மரபு என்பதற்கு அடையாளமாக, இம் மாடுகளின் மேலே அவன் தட்டிக் கொடுத்ததற்கு அறிகுறிகள் இருந்து வருகின்றன. எந்த மாட்டைப் பார்த்தாலும், அதன் முதுகு அல்லது கழுத்தில், உள்ளங்கை ரேகைகள் படிந்திருப்பதை இன்றும் காணலாம்.

கண்ணனின் குழலோசையைக் கேட்பதற்கென்றே அமைந்தது போல் இதன் காதுகள்

---

1. புங்கனூர் பசு 2. சிந்தி பசு 3. ஓங்கோல் 'லட்சுமி' 4. கிர் பசு 5. குன்றேச் 6. ,, தர்பர்கார் 7. ஆலம்பாடி காளை.

மாவிலைபோல் நீளமாக அமைந்திருக்கின்றன. கிர் காளைகளுக்கு உழைக்கப் பிடிக்காதாம்; சோம்பேறித்தனம் உண்டாம்; ஆனால் பசுக்கள் நன்கு பால் அளிக்கிறது. சராசரி தினம் எட்டு பட்டணம் படி பால் அளிக்கிறது. பவநகர் ராஜா சென்னையில் கவர்னராயிருந்தபோது இந்த ராஜ்யத்துக்கு ஒரு ஜோடி கிர் மாடுகள் அன்பளிப்பாகக் கொடுத்து உதவினார் என்று கூறப்பட்டது. அந்த ஒரு ஜோடி மாடுகளும் இன்று பல ஜோடிகளாகப் பரவி வருகின்றன.

தேனாம்பேட்டை காட்சி குறித்து, சென்னை நகரில் பரபரப்பு உண்டாக்கிய மாடு சிந்திப் பசு. தினம் பதினான்கு பட்டணம் படி பால் கறக்கும் இந்தப் பசுவைகாணவென்றே ஏராளமான பேர்கள் வந்திருந்தார்கள். காட்சியில் பரிசுபெற வந்த சிந்திப் பசு சென்ற எட்டு ஈத்துக்களில் 55,523 பவுண்டு பால் அளித்திருக்கிறது. இது தவிர, எட்டு சிறந்த கன்றுகள் போட்டிருக்கின்றது. மொத்தம் இதுவரையில் ரூ. 13,880 மதிப்புள்ள பால் அளித்திருக்கிறது. இம் மாட்டின் விலை என்னவென்றே கூற முடியாமல் சொந்தக்காரர்கள் மயங்குகிறார்கள். ஏனெனில் இந்த மாடுகளை விற்கும் சிந்தனையே அவர்களுக்குக் கிடையாது.

நேருஜி ஒருமுறை இந்த சிந்திப் பசுக்களில் ஒன்று தமக்கு வேண்டுமென்று கூறி என்ன விலை இருக்குமென்று கேட்டாராம். "விலை சொல்ல முடியாது, பண்டிட்ஜி! இதற்கு விலை மதிப்பே இல்லை. அபிமான விலையாகக் கொடுத்தால்தான் கொடுத்தது" என்று கூறி ஹொசூர் அரசாங்கக் கால்நடைப் பண்ணை நிர்வாகிகள் விற்க மறுத்து விட்டார்கள்! அரசாங்கப் பண்ணைகளிலேயே இவ்வளவு கிராக்கி என்றால் இம் மாடுகளைச் செல்லமாக வளர்க்கும் தனியாரிடமிருந்து வாங்குவதென்பது எவ்வளவு கடினமென்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

அடுத்தபடியாக, மனத்தைக் கொள்ளை கொண்டு விட்ட தர்பார்கர் மாடுகளைப் பற்றிக் குறிப்பிட வேண்டும். தூய வெள்ளை நிறமுடைய இந்த மாடுகள் சிற்பி செதுக்கிய கோவில் வாகனங்கள் போன்று அழகுடன் விளங்குகின்றன. கன்றுகளின் கலை அழகை ஒரு நாள் முழுதும் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போலிருந்தது. கிர் வகை பசுக்களைப் போலவே, தர்பார்கர் பசு நிறையப் பால் பொழிகிறது. காளைகள் சுறுசுறுப்பான உழைப்புக்கும், முக்கியமாக வண்டிகளில் பூட்டுவதற்கும் ஏற்றபடி கம்பீரமாயிருக்கின்றன. பஞ்சாப் ராஜ்யத்தைச் சேர்ந்த இந்த மாடுகளை ராமநாதபுரம் ஜில்லாவில் சில பண்ணைகளில் அருமையாக வளர்த்து வருகிறார்கள். தினசரி ஒன்பது பட்டணம் படி பால் கறக்கிறது இந்த வெள்ளைப் பசு.

வந்தவர்களுக்கெல்லாம் வேடிக்கையாகத் தோற்றமளித்தது புங்கனூர் மாடுகள். உருவத்திலே மிகச் சிறிய இந்த மாடுகளை ஏழை எளியவர்கள்கூட, சொற்பச் செலவில் வளர்த்து லாபகரமாகப் பால் உற்பத்தி செய்யலாம். இந்த வகை மாடுகளின் இனம் மறைந்து விடாதபடி ஆந்திரத்தில் ஊக்கமுள்ளவர்கள் இதை வளர்த்து வருகிறார்கள்; விற்றும் வருகிறார்கள். காய்ந்த புல், இலை, தழை எது கிடைத்தாலும் அதை உண்டு பால் கறக்கின்றன இந்தப் புங்கனூர் மாடுகள்.










தினசரி இந்தப் பசுவுக்கு ஆறு அணா செலவிட்டாலும் போதுமாம்; இரண்டரைப் படி பால் கிடைக்கும் என்கிறார்கள்; "கழிந்த கடுதாசிகளைப் போட்டுக்கூட இந்த மாடுகளை வளர்க்கலாம்" என்று, விழாவுக்கு வந்திருந்த மத்திய உதவிமந்திரி திரு கிருஷ்ணப்பா கூறினார். சில மேலிடத்து மந்திரிகள் நீண்ட அறிக்கைகள் தயாரித்துப் படிப்பதற்குப் பதிலாக, அவற்றைப் புங்கனூர் மாட்டுக்குப் போட்டாலும் பாலாகுமே என்று எனக்குத் தோன்றியது.

காட்சியில் எல்லோரையும் ஒரே காபரா அடையச் செய்து கொண்டிருந்தது உம்பளாச்சேரி மாடுகள்.

உம்பளாச்சேரி இனத்தில் பசுக்களை விடக் காளைகளே மிகவும் பயன்படுகின்றன. வண்டிகளை இழுப்பதில் இந்தக் காளைக்கு இணை இந்தக் காளைகள்தான். ராமநாதபுரம் மாவட்டத்தில் மாடுவிரட்டுப் பந்தயங்களுக்கு இந்தக் காளைகளைத்தான் பெரும்பாலும் உபயோகிக்கிறார்கள்.

"ஒரு காளையை அவிழ்த்து விட்டால் போதும்; இந்தத் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்துக்கு வந்திருக்கும் மந்திரிகள், இந்திரிகள், ஜனங்கள்- இனங்கள், போலீஸ்காரர்கள்-லீஸ்காரர்கள் அவ்வளவு பேரும் ஓட்டம் பிடிக்க வேண்டியிருக்கும். அவ்வளவு ரோசமான காளைகள் சார் இந்த உம்பளாச்சேரி காளைகள்!" என்றார் தஞ்சை ஜில்லா ஆலத்தம்பாடி காந்திய கோசாலை அன்பர் ஒருவர். அதைக் கேட்டதும் உடல் நடுக்கம் ஏற்பட்டது. அவர் மேலும், "இந்தக் காளைகளுக்குக் கறுப்பு நிறமே ஆகாது. காமரா, குடை ஒன்றையும் இதனிடம் காட்டக் கூடாது. கறுப்புக் கைக்குட்டைகூட இதன் கண்ணில் படக் கூடாது. கறுப்புச் சட்டையைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. ரொம்ப வெளுப்பான சட்டைகளும் ஆகாது. நடுவாந்தரமாக இருக்க வேண்டும்" என்று கூறிவிட்டுத் தஞ்சை ஜில்லா ஆலத்தம்பாடி காந்தி கோசாலையில் இவ்வகை மாடுகளைச் சிறப்பாக வளர்த்துப் பணி புரிந்து வரும் கோசாலை ஸ்தாபகர் திரு கோ. த. ரங்கநாதனின் முயற்சிகளையும் எடுத்துரைத்தார்.

டாக்டர் டி. பட்டாபிராமன்

காட்சிக்கு இன்னும் பல அற்புதமான ஆவினங்களும் வந்திருந்தன. பழைய கோட்டைப் பட்டக்காரர் அவர்களுடைய பண்ணையின் சிறப்பைப் பற்றித் தமிழ்நாட்டில் அறிந்திராதவர்கள் இருக்க முடியாது. அந்தப் பண்ணையிலிருந்து வந்திருந்த காங்கேயம், ஆலம்பாடி வகை மாடுகள் பளபள வென்ற வெள்ளிக் கோப்பைகள் பலவற்றைப் பெற்றுச் சென்றன. குண்டூர், நெல்லூர் இன மாடுகள் பல காட்சிக்கு வந்து கரகோஷங்களைப் பெற்றுச் சென்றன.

எருமைகளில் தினம் பதினெட்டு படி பால் அளிக்கக் கூடிய முர்ரா வகை மாடுகளும் இன்னும் சில ரகங்களும் வந்திருந்தன. இவை யெல்லாவற்றையும் பார்த்துவிட்டு, சென்னை ராஜ்ய கால்நடை இலாகா டைரக்டர் டாக்டர் டி. பட்டாபிராமன் அவர்களைச் சந்தித்தேன். "கால்நடை வளர்ப்பு பற்றி ஒரு மூட்டை நிறைய சந்தேகங்கள் கொண்டு வந்திருக்கிறேன். அவற்றை அவிழ்த்து விடட்டுமா? சந்தேகங்களைப் போக்கி விளக்கங்கள் தரமுடியுமா?" என்று கேட்டேன்.

"ஒரு மூட்டை என்ன, ஒரு வண்டி நிறையக் கொண்டு வந்தாலும் அதைப் பார்க்கத் தயார்!" என்று கூறி இந்தக் காட்சியின் நோக்கத்தை அவர் நன்கு விளக்கினார்.

ஸ்ரீ பட்டாபிராமன் அவர்கள் மிகவும் எளிய சுபாவமுள்ள அதிகாரியாக விளங்கி, பல அரிய பெரிய சாதனைகளைப் புரிந்திருக்கிறார். முக்கியமாக, அழிந்துபோகும் நிலையிலிருந்த ஆலம்பாடி மாடுகளின் சந்ததியை அவர் அழியாமல் காப்பாற்றி யிருப்பதோடு அதன் வளர்ச்சிக்காகப் பெரிதும் பாடுபட்டிருக்கிறார்.

"ஆடுமாடுகள் பற்றி நீங்கள் என்ன சந்தேகம் கேட்டாலும் பதில் சொல்லத் தயார். என்ன உதவி கோரினாலும் அதிகார வரம்புக்கு உட்பட்டுச் செய்யத் தயார். எங்கு அழைத்தாலும் வரத்தயார்" என்று இப்படி எதற்கும் தயாராய்ச் சேவைக்கு முன் நிற்கும் அவருடன் பேசிச் சந்தேக மூட்டைகளை அள்ளிப் போட்டேன். அவர் கொஞ்சமும் சளைப்படையாமல் ஒவ்வொன்றுக்கும் பதில் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தபோது, யாரோ கூட்டத்தில் "உம்பளாச்சேரி காளை அவிழ்த்துக் கொண்டு விட்டது" என்று கூறியதுதான் தாமதம். அங்கு நான் ஏன் நின்றுகொண்டிருக்கப் போகிறேன்?

# டி.எஸ்.ஆர் & கோ

கும்பகோணம்



# கண்கள் உறங்காவோ?

## அத்தியாயம் 12

## "ஐயோ, விகாஸ்!"

நாணுவதிக்குப் பாமர மக்களிடையே செல்வாக்கு உண்டு. 'செல்வாக்கா! தாணுவதிக்கா!' என்று வாயைப் பிளக்காதீர்கள். ஒருவர் ஒன்று சொல்லி அதைச் சிலர் 'அட்டி' சொல்லாமல் நிறைவேற்றி வந்தால் அவருக்கு அவர்களிடம் செல்வாக்கு உண்டு என்று சொல்கிறோம். ஆனால் ஒருவருக்கு மற்றவர்களிடம் செல்வாக்கு ஏற்பட எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. வயதில் பெரியவர், அறிவில் பெரியவர், பணத்தில் பெரியவர், பதவியில் பெரியவர் என்பன அவற்றில் சில. இவற்றின் மூலம் ஏற்படும் செல்வாக்கு மனப் பூர்வமானதாக இருக்கும். அதே போல் கட்டளையினால் ஏற்படும் செல்வாக்குகளும் சில உள்ளன. உதாரணமாக, நம் வேலையாட்கள் நாம் இடும் கட்டளைகளைத் தட்டின்றி நிறைவேற்றுகிறார்கள். இது நாம் அவர்களுக்குக் கொடுக்கும் ஊதியம் காரணமாகக் கட்டாயமாகப் பிறந்த செல்வாக்கு. ஆசிரியர் சொன்னதை மாணவன் உடனே நிறைவேற்றுகிறான்; அது கடமையால் பிறந்த கட்டாயச் செல்வாக்கு. இம்மாதிரி மற்றொரு கட்டாயச் செல்வாக்கும் இருக்கிறது. அது பயத்தினால் பிறப்பது. எதிராளி பலவானாக இருந்து ஒரு கட்டளையைப் பிறப்பிக்கும்போது அதை நிறைவேற்றாவிட்டால் நம்மை என்ன செய்து விடுவானோ என்று பயந்து கொண்டு அவன் விருப்பப்படியெல்லாம் ஆடுகிறோமே, அதுதான் பயத்தினால் பிறந்த செல்வாக்கு.

தாணுவதிக்குப் பாமர மக்களிடையே பிறந்திருந்த செல்வாக்கும் இத்தகையது தான். அவனுடைய முரட்டுத்தனத்துக்கும், அவன் கையில் கிராம முனிசிப் பதவி சிக்கியிருந்ததற்கும் பயந்து கொண்டு கேசவபுரத்திலுள்ள படித்தவர்களும் பணக்காரர்களுமே அவன் சொற்களுக்கும் செயல்களுக்கும் 'ஆமாம் சாமி' போட்டு வந்தபோது அறிவிலிகளாகவும், ஏழைகளாகவும் இருந்த பாமர மக்கள் அவனைக் கண்டு பயப்படக் கேட்பானேன்? அவர்களுடைய அந்தப் பயத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவன் எத்தனையோ காரியங்களை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறான்; எத்தனையோ அட்டூழியங்களைப் புரிந்திருக்கிறான். அந்தத் தெம்பில்தான் சில ஆட்களை ஏவிப் புங்கனூற்றிலுள்ள டிஸ்பென்ஸரியை வீணாக மூடிவிடும் நிலையை ஏற்படுத்தி விடுவதாக அன்று அவன்



தைலம்மாளுக்குத் தைரியமாக வாக்களித்து விட்டு வந்தான்.

தாளுவதியிடம் எந்தக் காரியத்தையும் ஒத்திப்போடும் வழக்கமே கிடையாது. அது நல்லதானலும் கெட்டதானலும் உடனே செயலில் இறங்கி இரண்டிலொன்று முடிவு கண்டுவிட்டுத்தான் அவன் நிற்பான். அவ்வாறே அன்று தைலம்மாளுக்கு வாக்குக் கொடுத்து விட்டு வந்ததும், அவன் வண்டியைக் கட்டிக் கொண்டு புங்கனூற்றுக் காலனிக்குப் புறப்பட்டு விட்டான்.

புங்கனூற்றுக் காலனியில் வசித்து வந்தவர்களில் சில குமாஸ்தாக்களையும் ஒருசில அதிகாரிகளையும் தவிர மற்றவர்களெல்லாம் கல்வி அறிவே இல்லாத குடியானவர்கள். அவர்களிலும் பெரும்பாலோர் பழைய சேரவாய்மலை வாசிகள். சேரவாய்மலை கேசவபுரத்திலிருந்து மூன்று மைல் தூரத்தில் ஒரு தனிக் கிராமமாக இருந்து வந்தபோதிலும், அவ்வூருக்குத் தனியாகக் கிராம முனிசீப் கிடையாது. கேசவபுரம் 'பிர்க்கா'வைச் சேர்ந்த கிராமந்தான் அது. ஆதலால் அவ்வூரும் தாளுவதியின் ஆளுகைக்கு உட்பட்டதாகவே இருந்தது. அங்கு வசித்து வந்த மக்களும் அவனுடைய கைக்கும் வாய்க்கும் பயந்தவர்களாவே இருந்தனர்.

ஓர் ஊர் என்றால் அங்கே நல்லவர்களும் இருப்பார்கள்; கெட்டவர்களும் இருப்பார்கள். உழைப்பாளிகளும் இருப்பார்கள்; வீணில் உண்டு களித்திருப்போரும் இருப்பார்கள். இந்த விதிக்கு விலக்கான கிராமமன்று சேரவாய்மலை. அங்கேயுள்ள மக்களில் பெரும்பாலோர் விவசாய வேலையிலோ, அல்லது அணைஸ்தல வேலையிலோ ஈடுபட்டு உழைத்துப் பிழைத்து வந்த போதிலும் ஒரு வேலையிலும் ஈடுபடாமல் சோம்பேறிகளாகவும், 'காலி'களாகவும் திரிந்து வந்த கோஷ்டியும் ஒன்று அங்கே இருந்தது. அந்தக் கோஷ்டியிடம தாளுவதிக்கு மிகுந்த செல்வாக்கு உண்டு. அவர்களுக்குத் தாளுவதி அடிக்கடி பண உதவி செய்து கைக்குள் போட்டு வைத்துக் கொண்டிருந்தான். அவர்களைத் தேடிக் கொண்டுதான் அவன் அன்று புங்கனூற்றுக் காலனிக்கு வந்தான்.

அந்தச் சோம்பேறிக் கோஷ்டியின் தலைவன் செந்திவேலு என்பவன். எந்தப் பழி பாவத்துக்கும் சிறிதும் அஞ்சாத கொடியோன் அவன். முதலில் அவனிடம்தான் வந்தான் தாளுவதி. அவன் வீட்டு வாசலில் இருந்த வேப்ப மரத்தடியில் ஒரு கட்டிலைப் போட்டுக் கொண்டு



அமர்ந்து, அர்தக் கோஷ்டியைச் சேர்ந்த இதர நபர்களை அழைத்து வரச் செய்தான். எல்லாரும் வந்ததும், "ஏலே! திமிரு புடிச்ச பயலுகளா! என் உப்பைத் தின்னுக்கிட்டு இந்த ஊரிலே என்னடா செய்துக்கிட்டிருக்கிறீங்க?" என்று விரட்டினான்.

"என்ன எசமான்? என்ன நடந்து போச்சு?" என்று குழைந்தான் கோஷ்டித் தலைவன் செந்திவேலு.

"ஒங்க கிராமத்திலே ஊர்ப்பட்ட அநியாயம் நடந்துக்கிட்டிருக்குதாம். சோம்பேறிப் பயலுகளா! இத்தனை நாளா அதைப் பார்த்துக்கிட்டு இருந்திருக்கிறீங்களே!"

"அநியாயமா? எசமானுக்குங்களா?" ஒரே குரலில் அனைவரும் அலறினார்கள்.

"எந்தப் பய செய்தான்? சொல்லுங்க எசமான்! ராத்திரி ராவே அவன் தலையைக் கிள்ளிக் கொண்டாந்து எசமான் காலிலே போட்டுடறேன்!" என்று மீசையை முறுக்கினான் செந்திவேலு.

"முட்டாப் பயலுகளா! இந்தத் தாணுவதி சிங்கத்துக்கிட்டே ஒரு பயல் வாலாட்டிவிட முடியுமாடா? முடியுமாடா? சொல்லுங்களேன். நான் சொல்றது நிசந்தானே?"

"நிசந்தான் எசமான்; நிசந்தான் எசமான்!" என்று தலையாட்டிவிட்டு, "பின்னே எசமான் இந்த அடிமைங்களைத் தேடுக்கிட்டு வந்த விசயம்...?" என்று இழுத்தான் செந்திவேலு.

"எனக்கு எவனாவது என்னமாவது செய்தாத்தான் அநியாயமாடா, கூறு கெட்ட பயலுகளா! ஊர்ச் சனங்களுக்குச்செய்தா அது அநியாயமில்லையாடா? என்னடா சும்மா நிக்கிறீங்க? வாயிலே என்ன கொழுக்கட்டையா போட்டுக்கிட்டு இருக்கிறீங்க? சொல்லுங்களேன், நான் சொல்றது நிசந்தானே?"

"அநியாயந்தான், அநியாயந்தான்" என்று தலையைப் பலமாக ஆட்டினார்கள்.

"அப்போ அந்த அநியாயத்தைப் பார்த்துக்கிட்டு வாயை மூடிக்கிட்டுத் தானே இருந்திருக்கிறீங்க? சோம்பேறிப் பயலுகளடா நீங்க. ஒங்களை வவுத்துக்கு இல்லாம அடிச்சுத் தண்டிக்கணும்."

"எசமான்! எசமான்! அப்படியெல்லாம் நீங்க பேசப்படாது. முதுகிலே அடியுங்க. பட்டுக்கிடுதோம். வவுத்திலே அடிக்கப் போடாதிங்க, எசமான்!" என்று தாணுவதியைக் கையெடுத்துக் கும்பிட்டனர் அக்கோஷ்டியினர்.

தாணுவதிக்கு உள்ளூறமகிழ்ச்சி. இந்தப் பயல்களில் ஒருவன் புறக் கையால் ஒரு தட்டுத்தட்டினால்தான் தவிடுபொடியாகிவிடத் தக்க நிலையில் இருந்தும், அவர்களை இப்படி நாயைப் போல் குழைய வைத்திருந்ததில் அவனுக்கு ஒரு தனிப் பெருமை. அவன் இன்னும் அவர்கள் மேல் கோபம் கொண்டவன் போல் நடித்துக் கொண்டே, "ஒங்களையெல்லாம் செருப்பாலே அடிக்கணும்டா, திமிரு புடிச்ச பயலுகளா! ஆகட்டும், இந்தக் காரியம் முடியட்டும்; பிறகு பார்த்துக்கிடறேன் ஒங்களை ஒரு கை. ஏண்டாலே! ஒங்க ஊரிலே ஒரு தாலியறுத்த பொண்ணு ஆசுபத்திரி வைச்சிருக்குதே, தெரியுமாடா?" என்று கேட்டான்.

"ஆமாம், சொன்னுங்க. ரொம்ப நல்ல பொண்ணு. ஏழை எளியவங்ககிட்டே பணம்-கிணம் வாங்காமல்கூட வைத்தியம்செய்துக்கிட்டு இருக்குதுன்னு பேசிக்கிட்டாங்க. அதுங்கிட்ட போய் வாலாட்டிட்டானுங்களா? சொல்லுங்க, எந்த ராசாவா இருந்தாலும், பனங்காயைச் சீவறாப்பிலே சீவிப் போடுகிறோம் அவன் தலையை!"

"ஏலே! சொல்றதை முழுதும் கேளுங்கடா! மூளை கெட்ட பயலுகளா! அந்தப் பொண்ணுதாண்டா ஊர்க்காரங்க தலை குனியும்படியான அவமானத்தைச் செய்துக்கிட்டு இருக்குதாம்!"

"என்னங்க எசமான் இப்படிப் பேசறீங்க? அதன் முகத்தைப் பார்த்தாலே பாவம் தீரும்னு ஊரிலே பேசிக்கிடறுங்க; நீங்க....." என்று குறுக்கிட்டான் அக்குழுவில் ஒருவன்.

தாணுவதிக்கு மூக்குமுட்டக் கோபம் வந்து விட்டது. அவன் தலையில் கட்டிக் கொண்டிருந்த துண்டை அவிழ்த்து வேகத்தோடு கீழே வீசினான். "யாருடா அவன் பேசறது? சம்முகமாடா? நாய்ப் பயலே! ஒனக்கு என்னடா கேட்குது? இந்தச் சிங்கம் ஒண்ணு சொல்லுது. அது பொய்ன்னு சொல்ல ஒனக்கு எவ்வளவு தெம்பிருக்கணும்டா! ஏலே, முதுகுத் தோலை உறிச்சுப் போடுவேன், நினைப்பிலே வைச்சுக்கிடு. ஊர்க்காரங்க சொல்றுங்களாமே, ஊர்க்காரங்க! ஏண்டா, நாய்ப் பயலே! ஊர்க்காரங்ககிட்டே போய் ஒனக்குச் சோறு தண்ணி கொடுக்கச் சொல்லேண்டா, நன்னி கெட்ட பயலே; என் ஆளுன்னு சொல்லிக்கிட்டு ஏண்டா பொழுது விடிஞ்சு பொழுது போனா, 'யசமான்!'ன்னு முட்டை சொரிஞ்சிக்கிட்டு வந்து நிற்கிறே!"

"ஐயோ, எசமான்! நீங்க பொய் சொல்றீங்கன்னு இந்த அடிமை சொல்லலே, எசமான். ஊர்க்காரங்க பேசிக்கிடறுங்களேன்னுதான் சொன்னேன், எசமான்!" என்று பதறினான் சண்முகம்.

"அவன் கிடக்கிறுங்க. எசமான்! பேசத் தெரியாத முட்டாப் பய. நீங்க

# அன்பின் வற்றா ஊற்று!

இந்தப் பருவத்தில் உங்கள் கனிவமுதின் சுகம், சந்தோஷம், எல்லாம் உங்களைத்தான் பொறுத்திருக்கிறது. அவனுக்கு இணையில்லா சுகத்தை அளிக்க குழந்தைகளுக்கான ஜான்ஸனின் தயாரிப்புகளே சிறந்த சாதனங்கள். ஏனெனில் அவை 60 ஆண்டு அனுபவத்தையும் ஆராய்ச்சிப் பயனையும் அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டுவரும் சாதனங்கள்.

**ஜான்ஸனின் பேபி சோப்:** குழந்தையை குளிப்பாட்டுவதற்கு. **ஜான்ஸனின் பேபி பவுடர்:** குளிப்பாட்டிய பிறகும் அவன் ஜெட்டியை மாற்றும் பொழுதும் தூவுவதற்கு. இந்த மிக்க மென்மையான பவுடர் அவனுக்கு சுகமும் இதமும் அளிக்கும்.

இன்னும், அவனுக்கு உபயோகிக்க ஜான்ஸனின் பேபி ஆயிலும் க்ரீமும் உள்ளன.




**ஜான்ஸன் அண்டு ஜான்ஸன்**

60 ஆண்டுகளுக்கு மேலாக குழந்தைகளுக்கான சாதனங்களை தயாரித்து வருபவர்கள்

ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிட்.

விசயத்தைச் சொல்லுங்க. அந்த டாக்டர் அம்மா என்ன அநியாயம் பண்ணிக்கிட்டு இருக்குது?" என்று அவர்கள் பேச்சில் புகுந்து சமரச பாவத்தில் பேசினான் செந்திவேலு.

"ஊரு பொறுக்காத அநியாயண்டா. ஆஸ்பத்திரி நடத்துறேன்னு அணையிலே வேலே பார்க்கிற ரெண்டு இன்ஜினீயர் பயலுகளோட 'ஹூட்டி' அடிச்சுக்கிட்டு இருக்குதாம். ஏலே, என் பிர்க்காவிலே எந்த அநியாயம் நடந்தாலும் நான் பொறுத்துக்கிடுவேண்டா. இந்த மாதிரி அறுத்த பொண்ணு செய்யுதுன்னு எப்படிடா பொறுக்குது."

அங்கே கூடியிருந்தவர்கள் தாணுவதியைப் பரம யோக்கியன் என்று கருதியிருந்தவர்கள் அல்லர். அவனுடைய அட்டூழியங்களும், பெண் பித்தும் அவர்கள் அறியாததல்ல. ஆதலால் அவர்கள் அவன் நாட்டம் அந்த டாக்டர் அம்மாள்மீது விழுந்திருக்கிறது என்பதை உடனே ஊகித்து விட்டார்கள். இருந்தாலும் அவனுடைய அட்டூழியங்களுக்கு உறுதுணையாக இருந்து வயிறு வளர்த்து வந்த காரணத்தால், இங்கும் தாங்கள் என்ன செய்ய வேண்டியிருக்குமோ என்பதில் அவர்கள் எண்ணம் அப்பொழுது சென்றதேயன்றி, வீணை நல்லவளா, கெட்டவளா என்பதில் அவர்கள் நினைவு கவியவில்லை. விஷயத்தை வளர்த்தாமல் செந்திவேலு உடனே, "எங்களுக்குத் தெரியவே தெரியாதுங்களே! தெரிஞ்சிருந்தால் அவங்களை விட்டு வைச்சிருப்போமா? இப்போ என்ன செய்யணும், சொல்லுங்க. அந்தப் பொண்ணு தலையைத் திருகிக் கொண்டாந்திடட்டுங்களா?" என்று கேட்டான்.

"அடேடே! அப்படி ஒண்ணும் செய்து போடாதே. அவள் படிச்சவள். ஊரிலே அவள் அப்பன்காரரும் படிச்சவர்; அதுனாலே அப்படியெல்லாம் ஒண்ணும் செய்யக் கூடாது. நமக்கு வேண்டியது நம்ம பிர்க்காவுக்குள்ளே இந்த மாதிரி நடக்கக் கூடாது என்கிறது தான். நீங்க பத்து பேராக அங்கே போய் ஒரு நாலு நாள் கலாட்டாப் பண்ணுங்கள். இன்னைக்கு என்ன செவ்வாய்க்கிழமையா? அடுத்த செவ்வாய்க்கிழமைக்குள்ளே அவள் இங்கே இருக்கிற ஆஸ்பத்திரியை மூடிப் போடணும், தெரிஞ்சுக்கிட்டீங்களாடா?"

"தெரிஞ்சுக்கிட்டோம் எசமான்! தெரிஞ்சுக்கிட்டோம்" என்று தலையைப் பலமாக ஆட்டினர் செந்திவேலு கோஷ்டியினர். வீணை தவறாக நடந்து கொள்ளுவதற்கும், அவனுடைய



கல்கி நாடக மன்றத்தார் கல்கியின் 'அமரதாரா'வை நாடகமாக்கிச் சமீபத்தில் மயிலை ரசிக ரஞ்சனி சபையின் ஆதரவில் நடித்தார்கள். நாடகத்துக்கு திரு டி. கே. ஷண்முகம் வந்திருந்து நாடகத்தில் பங்கு பற்றியவர்களை வாழ்த்தினார். புரூக்பாண்ட் தேயிலை ஸ்தாபனத்தின் குரூப் மானேஜர் திரு பாலன் நாடகத்துக்குத் தலைமை தாங்கினார்.

டிஸ்பென்சரியை மூடச் செய்வதற்கும் என்ன சம்பந்தம் என்று அவர்கள் கேட்கவில்லை. தாணுவதி ஏதோ ஒரு திட்டத்துடன்தான் இப்படிப் பணித்திருக்கிறான்; அவனுடைய நோக்கம் வீணையின் கெட்ட நடவடிக்கையால் ஊருக்கு அவப் பெயர் ஏற்படக் கூடாது என்பதில்லை என்று அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தபோது, ஏன் அவர்கள் எதிர்க் கேள்வி கேட்டு அவன் வாயால் நாலு வசவை வாங்கிக் கட்டிக் கொள்ளப் போகிறார்கள்!

தாணுவதி தான் வந்த வேலையை முடித்து விட்டு எழுந்தான். அவனுக்குத் தெரியும், இந்தப் பயல்கள் எப்படியாவது காரியத்தை நிறைவேற்றி விடுவார்கள் என்பது. இம்மாதிரி காரியங்களில் இவர்களை ஈடுபடுத்துவதற்கு முன் ஏதாவது வாய்க்கரிசி போட வேண்டும் என்பதும் அவனுக்குத் தெரியும். ஆகலால் கட்டிலை விட்டு எழுந்த அவன் தன் சட்டைப் பைக்குள் கையை விட்டு ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்துக் கட்டிலில் வீசி, 'இந்தாங்கடா; இதைச் செலவுக்கு வைக்கக்கிடுங்க. காரியத்தை முடியுங்க; அப்பாலே ஆளுக்குக் கொஞ்சம் இன்னும் வாய்க்கரிசி போடுறேன்" என்று கூறிவிட்டு நகர்ந்தான். சிறிது தூரம் சென்றதும் அவன் ஏதோ நினைவுக்கு வந்தவனாய்ச் சட்

டென்று நின்று திரும்பி, "ஏலே, செந்திவேலு! ஒன்று நினைப்பிலே வைச்சுக்கிடுங்கலே. மறந்து கூட அந்தப் பெண்மேலே கையை வைச்சுடக் கூடாது. எனக்கு வேண்டியது இங்கே வைச்சிருக்கிற ஆஸ்பத்திரியை அவள் மூடிப் போடணும், அவ்வளவுதான்!" என்று நினைவூட்டி விட்டுச் சென்றான்.

* * *

இந்தச் சம்பவம் நடந்த மறுநாள் பிற்பகலில் வீணா வழக்கம் போல் புங்கனூற்று டிஸ்பென்சரிக்கு வந்தாள். ஸொப்னா மரணமடைந்த பிறகு பல நாட்களாக வீணாவின் டிஸ்பென்சரிப் பக்கமே வராதிருந்த விகாஸ்கூட அன்று டிஸ்பென்சரியைத் திறந்ததும் வந்து சேர்ந்தான். அவனுடைய டிஸ்பென்சரியில் இப்பொழுதெல்லாம் கூட்டம் நிரம்பி வழிந்தது. சாதாரணமாகத் தினந்தோறும் அவள் வரும் முன்பே நோயாளிகள் டிஸ்பென்சரி வாசலிலிருந்த வாகை மரத்தின் நிழலில் கூடியிருப்பார்கள். டிஸ்பென்சரி திறக்கப்பட்டதும் 'நான் முந்தி, நீ முந்தி' என்று சிகிச்சை பெறப் போய் விடுவார்கள். விகாஸ் நாள் தவறாமல் டிஸ்பென்சரிக்கு வந்து கொண்டிருந்த போது அவன் நோயாளிகள் இம்மாதிரி ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு வீணா அமர்ந்திருக்கும் பரிசோதனை அறைக்குள் நுழைவதைத் தடைசெய்து ஒவ்வொருவராக உள்ளே அனுப்பி வைப்பான். ஆனால் அவன் அங்கு வருவதை இடைக்காலத்தில் நிறுத்தி விட்டதால், மீண்டும் இத்தகைய குழப்பம் ஏற்பட ஆரம்பித்தது. ஒரு நாள் மருந்து வாங்க வந்திருந்த இரு பெண்மணிகளுக்குள் இதற்காகப் பெரிய கைச் சண்டையே ஏற்பட்டு விட்டது. ஆதலால் வீணா சமீபமாக இதற்கு ஓர் ஒழுங்குமுறையை ஏற்படுத்தியிருந்தாள். யார் முன்னால் வந்தாலும் சரி, யார் பின்னால் வந்தாலும் சரி, காத்திருப்பவர்களில் குழந்தைகளையும், குழந்தைகளுடன் இருக்கும் தாய்மார்களையுந்தான் அவள் முதலில் கவனிப்பாள். பிறகு வயோதிகர்கள்; பின்னர் இதர பெண்டிர்; கடைசியாக ஆண்கள் என்று ஒரு திட்டம் வகுத்து அதன்படி தான் இத்தனை நாட்களாகச் சிகிச்சை அளித்து வந்தாள் அவள்.

அந்தத் திட்டப்படி அன்று அவள் டிஸ்பென்சரியைத் திறந்ததும் முதலாவதாகக் குழந்தைகளை ஒவ்வொருவராக அழைத்துச் சிகிச்சை அளித்து அனுப்பிக் கொண்டிருந்த போது, "ஏய், டாக்டர் அம்மா! சீக்கிரம் ஆகட்டும்; எத்தனை நேரம் ஒரு மனுசன் காத்துக் கொண்டிருக்கிறது?" என்று வெளியே யாரோ ஒருவன் இரைவது கேட்டது. அப்படி இரைந்தது வேறு யாருமில்லை; நானாவடியால் ஏவிவிடப்பட்ட செந்திவேலுதான்.

ஆண்கள் இப்படி இரைவது அங்கே சகஜம். ஏனென்றால் அவர்கள் எல்லாருக்கும் முன்னதாக வந்தபோதிலும், வீணா வகுத்துக் கொண்டிருந்த வரிசைக் கிரமப்படிக் கடைசியில்தானே சிகிச்சை பெற வேண்டியிருந்தது. இதற்கு முன் கூடச் சில நாட்கள் சில இளைஞர்கள் இப்படிப் பொறுமையிழந்து கூக்குரலிட்டிருக்கிறார்கள். ஆனால் அதற்காக வீணா தான் வகுத்திருந்த நடைமுறையை மாற்றிக் கொண்டுவிடவில்லை. யாராவது நேரடியாகக் கேட்டால்கூட, "என் டிஸ்பென்சரியில் இதுதான் வழக்கம், ஐயா! பிரியமிருந்தால் காத்திருங்கள். இல்லாவிட்டால் போய்க் கொள்ளுங்கள்" என்று கண்டிப்பாகக் கூறி விடுவாள். ஆதலால் இன்றும் அவ்வாறு ஒருவன் பொறுமையிழந்து கூச்சல் போட்டபோது அவள் அதைச் சட்டை செய்யவேயில்லை. தன் போக்கிலேயே வரிசைக்கிரமப்படி நோயாளிகளைக் கூப்பிட்டுச் சிகிச்சை அளித்து அனுப்பிக் கொண்டிருந்தாள்.

ஆனால் அவள் செந்திவேலுவின் கூச்சலைத் துளியும் காதில் போட்டுக் கொள்ளாமல் இப்படிச் செய்து கொண்டிருந்தது, அவனை ஆத்திரமடையச் செய்தது. அப்பொழுது வீணா குழந்தைகளுடன் வந்திருந்த தாய்மார்களை ஒவ்வொருவராகப் பார்த்து அனுப்பிக் கொண்டிருந்தாள். ஒரு சமயம் ஒரு குழந்தைக்காரி சிகிச்சை பெற்றுத் திரும்பி அடுத்த குழந்தைக்காரி உள்ளே போக எழுந்த போது அவன் சட்டென்று எழுந்து அந்தக் குழந்தைக்காரியை முந்திக்



கோயமுத்தூர் ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில்ஸ் நிர்வாக டைரக்டர் திரு வி. கோபால் நாயுடுவின் பேரன் திரு பாலசுப்பிரமணியன் பிலடெல்பியாவில் மூன்று ஆண்டுகள் நெசவாலைத் தொழில் என்ஜினியரிங் பட்டப் படிப்பை முடித்துக் கொண்டு சமீபத்தில் கோவை திரும்பினார்.

கொண்டு பரிசோதனை அறைக்குள்ளே நுழைய முயன்றான். பரிசோதனை அறைக்குச் செல்லும் வாசலை அடுத்து ஒரு மேசையும், நாற்காலியும் போடப்பட்டிருந்தன. அந்த நாற்காலியில்தான் விகாஸ் உட்கார்ந்திருந்தான். விகாஸ் தமிழ் நாட்டுக்கு வந்து இப்பொழுது கிட்டத்தட்ட ஒன்றரை ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆதலால் பிறர் பேசுவதைப் புரிந்து கொள்ளும் அளவு அவன் தமிழ் அறிவு பெற்றிருந்தான். தவிர ஸொப்னு அவனுடன் வாழ்ந்த அந்தச் சிறிது காலத்தில் அவனுக்குச் சில தமிழ்ச் சொற்களைக் கூடக் கற்றுக் கொடுத்திருந்தாள். ஆதலால் அவன் பேச்சில் கூட இப்பொழுது ஒரு சில தமிழ்ச் சொற்கள் கலந்து வந்துகொண்டிருந்தன.

செந்திவேலு கூச்சலிட ஆரம்பித்தவுடனே விகாஸ் அவன் இரைச்சலின் காரணத்தைப் புரிந்து கொண்டு தனக்குத் தெரிந்த சில தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தி அவனை அமைதியாக இருக்குமாறு கேட்டுக் கொண்டான். ஆனால் செந்திவேலு அவன் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்காமல் தொடர்ந்து கூச்சலிட்டுக் கொண்டிருந்ததால், மொழி தெரியாத விகாஸால் அவனைச் சமாதானப்படுத்த முடியவில்லை. அவன் ஹிந்தியிலும், ஆங்கிலத்திலும் கூறிய இரைச்சல்கள் எவ்விதப் பயனையும் பெறவில்லை. சரி, தொண்டை நீர் வற்றக் கத்திவிட்டுத் தானாகவே ஓயட்டும் என்று விட்டுவிட்டான் விகாஸ்.

ஆனால் இப்பொழுது அவன் ஒரு பெண்மணியைத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைய முயன்றபோது விகாஸினால் சும்மா இருக்க முடியவில்லை. அவன் எழுந்து இரு கைகளையும் விரித்து வழியை மறித்தான். அவன் கைகளைத் தள்ளி விட்டு உள்ளே நுழைவது ஒன்றும் செந்திவேலுவுக்குப் பெரிய காரியமில்லை. ஆனால் அவன் அதைச் செய்யவில்லை. மாறாக அவன் வீணுவையும், விகாஸையும் இணைத்துத் தாறுமாறாகத் திட்டத் தொடங்கினான். விகாஸின் இளமீசை துடித்தது. அவனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அவன் செந்திவேலுவைப் பளீரென்று கன்னத்தில் அடித்துத் தன் முழுப் பலத்தையும் பிரயோகித்து அவனை வெளியே கொண்டு தள்ளிவிட்டு வந்தான்.

செந்திவேலு அங்கே குழப்பம் விளைவிக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு வந்திருந்ததால் விகாஸின் அடியையும் அவன் தன்னை வெளியே இழுத்து வந்து விட்டதையும் பொறுத்துக் கொண்டான். ஆனால் அவன் வீடு திரும்பிவிடவில்லை. அன்று வீணு ஆஸ்பத்திரியை மூடிவிட்டு வீட்டுக்குச் செல்லும் வரையில் வாசலில் நின்று குரைத்துக் கொண்டே இருந்தான்.

இதே சம்பவம் மறுநாளும் நடந்தது. அன்று விகாஸ் அவனை உள்ளே வரவே அனுமதிக்கவில்லை. இருந்தாலும் அன்றும் வீணு டிஸ்பென்சரியை மூடிவிட்டுச் செல்லும் வரையில் அவன் வெளியே நின்றவாறு அவர்களைப் பலவாறு கேவலமாகப் பேசிக் கொண்டிருந்தான். இடையே செந்திவேலுவை நன்கு அறிந்திருந்த சிலர் வீணுவையும், விகாஸையும் எச்சரித்தனர். "அவனிடம் வம்புக்குப் போகாதீர்கள். முரடன் அவன்; முதல் நம்பர் அயோக்கியன். சில நாட்கள் இப்படி வந்து குரைத்து விட்டுப்போகட்டும்" என்று கூறியிருந்ததால் அவர்களும் அவன் வசவுகளை ஒரு பொருட்டாக மதியாதிருந்தனர். ஆனால் மூன்றாம்நாள் நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது.

அன்று வெள்ளிக் கிழமை. சுந்தரத்துக்கு இப்பொழுதெல்லாம் வெள்ளிக் கிழமைதான் வாராந்திர விடுமுறை நாள். வேலைப் பளுவை யொட்டி இப்படி வாராந்திர விடுமுறை நாட்களை வெவ்வேறு கிழமைக்கு அடிக்கடி மாற்றிக் கொண்டிருப்பது அனை ஸ்தலத்தில் சகஜம். இப்பொழுது விடுமுறை நாட்களில் சுந்தரமும் வீணுவுடன் புங்கனூற்று டிஸ்பென்சரிக்கு வந்து கொண்டிருந்தான். அன்றும் அவன் வந்திருந்தான். அவனும் விகாஸும், நோயாளிகள் காத்திருக்கும் டிஸ்பென்சரியின் வெளி அறையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த போது செந்திவேலு தன் கோஷ்டியைச் சேர்ந்த நாலைந்து ஆட்களைத் திரட்டிக் கொண்டு முன்னுளைப் போலவே வீணுவின் டிஸ்பென்சரிக்கு வெளியே வந்து நின்று அவளைக் கேவலமான முறையில் பழித்துக் கூச்சலிட ஆரம்பித்தான்.

சுந்தரத்துக்கு இரண்டு நாட்களாக இங்கே நடந்து வந்த தகராறு ஒன்றும் தெரியாததாலால், அவன் இந்தக் கோஷ்டியின் கூச்சலைக் கேட்டதும் திடுக்கிட்டான். "என்ன மிஸ்டர் விகாஸ்? ஏன் இவர்கள் இப்படிக் கூச்சலிடுகிறார்கள்? ஐயோ! வீணுவை அல்லவா வாயில் வராத வார்த்தைகளால் வைது கொண்டிருக்கிறார்கள்!" என்று அவன் பரபரப்போடு எழுந்தான்.

ஆனால் விகாஸ் அவன் கையைப் பிடித்து நாற்காலியில் அமர்த்தி விஷயத்தை யெல்லாம் அவனுக்குக் கூறிவிட்டு, "அவர்கள் எதற்கும் துணிந்த

# சிரிக்காதே!



### எது மேல்?

வரியும் சாவும் கிட்டத்தட்ட ஒரே மாதிரிதான். ஆனால் ஒரு வித்தியாசம். சாவு ஒருவருக்கு ஒரு முறைதான் வரும்.

### அதுவும் அப்படியா?

பொய் சொல்லுபவன் தப்பித் தவறி, தான் சொன்னது பொய்தான் என்று ஒப்புக் கொண்டால் நம்பாதீர்கள். அதுவும் ஒரு பொய்யாக இருக்கலாம்!

### பஞ்சமா பாதகம்!

பேச்சாளர்: நான் இன்று இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றிப் பேசவிருக்கிறேன்!

"அந்தப் பஞ்சம் பற்றி வேண்டாம்! இந்தச் சர்க்கரைப் பஞ்சத்தைப் பற்றிப் பேசுங்கள்!"

### என்ன பிரமாதம்!

"ஜீவஹிம்சை கூடாது என்று ஒரு வகுப்பினர் போகும்போது பாதையைப் பெருக்கிக்கொண்டே போவார்களாம்!"

"அது என்ன சார் பிரமாதம்! எங்கப்பா ஜீவஹிம்சை ஏற்படப்படாது என்று வாழைப் பழத்தைச் சாப்பிட்டு விட்டுத் தோலைக் கீழே போடாமல் அதையும் சாப்பிட்டு விடுவார்!"

### நீதி பத்தினி

நீதிபதியின் மனைவி நீதிபதியிடம்: கேவலம் இந்த நானூறு ரூபாய்ப் புடவையை எனக்கு வாங்கித்தர மறுக்கிறீர்கள்... நான் யார் என்று உங்களுக்கு மறந்து போய் விட்டதா, என்ன? நான் நீதிபதியினுடைய மனைவியாக்கும்!...

### தூக்கமும் துக்கமும்!

"இந்தத் திடுக்கிடும் செய்தியை என் சிநேகிதனிடம் இன்றிரவே போய்ச் சொல்லி விட வேண்டும். இதைச் சொன்னால் அவன் இரவு முழுதும் தூங்காமல் இருந்து விடுவான்.

"காலையில் போய்ச் சொல்லுங்களேன்!"

"சொல்லாவிட்டால் இன்றிரவு எனக்குத் தூக்கம் இல்லாமல் போய் விடுமே!"

### குகை நடுவினில்

"நீங்கள் வாயை அவ்வளவு பெரிதாகத் திறக்க வேண்டாம். நான் வாய்க்கு வெளியிலே இருந்துதான் பல்லை எடுக்கப் போகிறேன்." —பல் வைத்தியர்

வர்களாம், மிஸ்டர் சுந்தரம்! அவர்களிடம் வாக்குவாதம் செய்யப் போகாதீர்கள். திட்டினால் திட்டி விட்டுப் போகட்டும்" என்றான்.

சுந்தரத்துக்குக் கோபம் வந்து விட்டது. "என்ன சொன்னீர்கள்? திட்டினால் திட்டிவிட்டுப் போகட்டுமா? அவர்கள் என்னையோ, உங்களையோ திட்டினால் பரவாயில்லை, விகாஸ்! நாம் கண்ணைப் போற்றிக் காத்துவரும் வீணாவைப் பழித்துப் பேசுகிறார்கள். அதைக் கேட்டுக் கொண்டு கோழையைப் போல் உள்ளே உட்கார்ந்திருக்க உங்களுக்கு வெட்கமாக இல்லை. வாருங்கள் அந்தப் பயல்களை உதைத்து விரட்டி விட்டு வருவோம்" என்று அவன் மீண்டும் எழுந்து கிளம்பி விட்டான்.

விகாஸுக்கும் இப்படி ஒரு தூண்டுகோல்தான் அப்பொழுது தேவையாக இருந்தது. அவன் எப்பொழுதுமே துடிதுடிப்பானவன். இரண்டு நாட்களாகத் தன் ஆத்திரத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டிருந்தான். இப்பொழுது அது பொத்துக் கொண்டு விட்டது. எதிரே உட்கார்ந்திருந்த கிழவர் ஒருவரின் கைத்தடியைப் பிடுங்கிக் கொண்டு அவனும் பாய்ந்தான்.

அடுத்த சில நிமிஷங்களுக்கு வெளியே ஒரே இரைச்சலாகவும் குழப்பமாகவும் இருந்தது. தெருவில் பெருங் கூட்டம் கூடக் கூடி விட்டது. ஆனால் அவை ஒன்றையும் லட்சியம் செய்யாமல் டிஸ்பென்சரியின் உள்ளறையில் நோயாளிகளைப் பரிசோதிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தாள் வீணா. பாவம் அவளுக்குச் சுந்தரமும் விகாஸும் வெளியே சென்றிருப்பதோ, இந்தப் பெரும் சத்தத்துக்குக் காரணம் அவர்கள்தாம் என்பதோ தெரியாது.

இப்படிச் சுமார் பத்து நிமிஷங்கள் சென்ற பிறகு, சிகிச்சைக்காக வெளியே காத்திருந்த பெண்மணி ஒருத்தி "ஐயோ கொன்னுட்டான்! ஐயோ கொன்னுட்டான்!" என்று பீதி நிறைந்த குரலில் கத்திக் கொண்டே உள்ளே ஓடிவந்து, "டாக்டர் அம்மா! ஓடுங்க, சீக்கிரம் ஓடுங்க; ஒங்க வட நாட்டுக்கார சிநேகிதரை யாரோ ஒருத்தன் கத்தியாலே குத்திட்டான்" என்றாள்.

மறு நிமிஷம், "ஐயோ, விகாஸ்!" என்று அலறிக் கொண்டு வீணா வெளியே ஓடினாள். (தொடரும்)

# வளரவே, குழந்தை வளரவே,
# திடமுடன் ஒழுங்காய் வளரவே...

**Glaxo**

**க்ளாக்ஸோ**

தாய்ப்பால் இல்லாத இளங் குழந்தைகளுக்கு
உகந்த சாலச் சிறந்த பாலுணவு





குழந்தை முதன் முதலாக உண்பதற்கான கனபதார்த்த உணவாகிய பாரெக்ஸ் குழந்தை திடகாத்திரமாகவும் ஆரோக்கியமாகவும் வளருவதற்கான புரத சத்துக்கள், வைட்டமின்கள், உலோகச் சத்துக்கள் அனைத்தும் செறிந்துள்ள தானிய உணவாகும். தாய்ப்பால் அருந்திவரும் குழந்தைகளுக்கும் சரி, புட்டிப்பால் அருந்திவரும் குழந்தைகளுக்கும் சரி, நான்காவது அல்லது ஐந்தாவது மாதமுதல் பாலைத் தவிர **பாரெக்ஸ்** உணவும் தேவைப்படும்.

'க்ளாக்ஸோ குழந்தைப் புத்தகம்' இலவசமாகப் பெற விரும்புவோர் அதன் தபால் செலவிற்காக 50 ந. பைசாக்களுக்குத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக. க்ளாக்ஸோ, உட்ஸ் ரோடு, மதராஸ்—2

**க்ளாக்ஸோ லாபரெட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.**

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புதுடில்லி
டிப்போக்கள்; ஸ்ரீநகர் கௌஹாத்தி - விஜயவாடா

# நின்ற ஊர் பூசல் அன்பன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

செயற்கரிய செய்த திருத்தொண்டர் அறுபத்து மூவர் வரலாற்றைச் சேக்கிழார் பெரிய புராணமாகவே பாடியிருக்கிறார். அந்த அறுபத்து மூவரில் ஒருவர் பூசலார் நாயனார். அவர் வாழ்ந்த ஊர் திருநின்ற ஊர். காஞ்சிபுரத்துக்கு வடமேற்கே இருபது மைல் தொலைவில் இருக்கிறது. காஞ்சியில் இருந்து அரசு செய்தவர்களில் பெரும் புகழும் பெற்றவன் ராஜசிம்மன் என்னும் பல்லவ மன்னன். அவனுக்கு ஓர் ஆசை. தன்னுடைய ஆட்சிக் காலத்திலேயே கைலாசநாதருக்கு ஒரு கோயில் கட்டி முடிக்க வேண்டும் என்று அளவற்ற செல்வம் படைத்த அவன் நினைக்கிறான். அவன் ராஜ்யத்தில் வாழும் மக்கள் எல்லாம் துணை புரிகிறார்கள். கோயில் உருவாவதற்குக் கேட்பானேன்? இப்படிக் கைலாசநாதருக்கு ராஜசிம்மன் கோயில் கட்ட முனைந்திருப்பதை அறிகிறார் பூசலார். இவருக்கும் ஆசை பிறக்கிறது தாமும் ஒரு கோயில் கட்ட வேண்டுமென்று. இவரோ பரம ஏழை; தொண்டு கிழம். அன்றாட வாழ்க்கையே மிகவும் சிரமம். இவர் எப்படிக் கோயில் கட்டுவது? அவருக்கு ஒன்று தோன்றியது. ஏன் தம்முடைய உள்ளத்துக்குள்ளேயே ஒரு கோயில் கட்டக்கூடாதென்று. எண்ணிய எண்ணத்தை நிறைவேற்ற முயல்கிறார் இந்தப் பூசலாரும். ராஜசிம்மன் கோயில் கட்டக் கால்கோள் செய்தால் இவரும் தம் மனத்துள் கட்டும் கோயிலுக்குக் கால்கோள் நடத்துகிறார். மன்னன் ஏவலால் பொன்னும் பொருளும் வந்து குவிகின்றன! சிற்பிகள் வேலையைத் துவக்குகின்றனர். மதில் எழுகிறது; மகாமண்டபம் உருவாகிறது; அர்த்த மண்டபம் கட்டப்படுகிறது; கர்ப்பக் கிருகம் நிர்மாணம் ஆகிறது; அதன் மேல் விமானம் எழுகிறது. இரண்டு வருஷகாலமாகக் கோயில் கட்டும் வேலை ஜரூராக நடக்கிறது, கச்சியிலே. பூசலாரும் சளைக்கவில்லை. இவரது கோயிலும், மதில், மண்டபம், கர்ப்பக் கிருகம், விமானம் எல்லாம் உருவாகின்றன, யாதொரு செலவும் இல்லாமலேயே. ராஜசிம்மன் கோயில் கட்டி முடிந்ததும் கைலாசநாதரைப் பிரதிஷ்டை செய்ய நாள் குறிக்கிறான். அதே நாள் அதே முகூர்த்தத்தையே பூசலார் தாம் கட்டிய கோயிலிலும் இறைவன் பிரதிஷ்டைக்குக் குறித்துக் கொள்கிறார். பிரதிஷ்டை நடக்க இருப்பதற்கு முந்திய நாள் இரவு, மன்னன் ஏற்பாடுகளையெல்லாம் கவனித்துவிட்டுத் தன் அரண்மனை திரும்புகிறான்.



பூசலார் நாயனார்

அரிய காரியம் ஒன்றைச் சிறப்பாகச் செய்து முடித்த மன நிறைவோடு அமளி சேர்கிறான். இரவு நடுச்சாமம். அரசனது கனவில் கைலாசநாதர் தோன்றுகிறார். மன்னனைப் பார்த்து, 'ராஜசிம்மா! நாளை உதயத்தில்தானே பிரதிஷ்டை? அந்தப் பிரதிஷ்டைக்கு நான் வரமுடியாதுபோல் இருக்கிறதே. இன்னொரு கோயில், ஆம், நீ கட்டிய கோயிலைவிடப் பெரியதொரு கோயிலில், அதே நேரத்தில் பிரதிஷ்டை என்று ஏற்பட்டிருக்கிறதே. நான் அங்கு செல்ல வேணுமே, ஆதலால் உன் கோயிலில் பிரதிஷ்டையை இன்னொரு நாளைக்கு மாற்றி வைத்துக் கொள்ளேன்' என்று சொல்கிறார். இதைக் கேட்டு ராஜசிம்மன் விலவிலத்துப் போகிறான். 'ஸ்வாமி! அப்படி என்னுடைய கோயிலைவிடப் பெரியதொரு கோயிலை, எங்கே யார் கட்டியிருக்கிறார்கள்?' என்று மிக்க ஆதங்கத்தோடு கேட்கிறான். கனவில் வந்த கைலாசநாதரும், 'அதுவா, பக்கத்தில்தான். திருநின்ற ஊரிலே பூசலார் என்ற அன்பன் கட்டியிருக்கிறான்' என்று சொல்லி மறைந்து விடுகிறார். அவ்வளவுதான்; மன்னன் எழுகிறான் மந்திரி பிரதானிகளையெல்லாம் அழைக்கிறான். கேள்விமேல் கேள்வி கேட்கிறான். எல்லோருமே பூசலார் கட்டிய கோயிலைப் பற்றி அறியவில்லை. ஆதலால் உடனே புறப்படுகிறான் ராஜசிம்மன் திருநின்ற ஊரைநோக்கி. மந்திரி, மக்கள் எல்லோருமே அரசனைத் தொடர்ந்து செல்கிறார்கள். பலபல என்று விடிகிறபோது திருநின்ற ஊரில் வந்து சேர்கிறார்கள். அங்கே

கோயில், பிரதிஷ்டை என்ற ஆர்ப்பாட்டம் ஒன்றையும் காணோம். ஊர் மக்களிடம் விசாரித்தால், 'பூசலாரா? அந்தக் கிழமா கோயில் கட்டியிருக்கிறது?' என்று ஏளனமாகவே பேசுகிறார்கள். திரும்பவும் கேட்டால் 'அவரா, அவர் ஊருக்கு மேற்கே உள்ள குளக்கரையில் உட்கார்ந்திருப்பார்' என்கிறார்கள். விரைந்து சென்றால் அங்கே ஒரு மரத்தடியில் பூசலார் பதும ஆசனத்தில் யோகநிலையில் அமர்ந்திருக்கிறார். அவரை அணுகி, 'பெரியவரே! பெரியவரே! நீர் கட்டியிருக்கும் கோயில் எங்கே?' என்று கேட்கிறான் ராஜசிம்மன். அவரோ 'என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள். நான் கட்டிய கோயிலில் இப்போதுதான் பிரதிஷ்டை நடந்து கொண்டிருக்கிறது' என்கிறார். விவரம் கேட்டால், அவர் தம் உள்ளத்திலே கோயில் கட்டிய கதையையும் அதில் பிரதிஷ்டை நடந்த விதத்தையும் விரிவாகவே கூறுகிறார். அரசன் பூசலார் அடியில் வீழ்ந்து—'அன்பரே! இறைவன் நான் கல்லாலும் மண்ணாலும் கட்டிய கல்கோயிலை விட, உம்முடைய மனக்கோயிலே பெரிது என்று உவந்து உம் கோயில் பிரதிஷ்டைக்கே வந்திருக்கிறார்' என்று கூறுகிறான். பூசலாரும் இறைவனது பேரன்பை வியக்கிறார்; நினைந்து நினைந்து தொழுகிறார் இவரையே.

நீண்ட செஞ்சடையினார்க்கு
நினைப்பினால் கோயிலாக்கி
பூண்ட அன்பு இடை அறாத
பூசலார் பொற்றாள் போற்றி

என்று சேக்கிழாரும் மகிழ்ந்து பாடுகிறார். மாசிலாப் பூசலார் மனத்தினால் முயன்ற கோயில், கச்சியில் ராஜசிம்மன் அமைத்த கற்றளியிலும் சிறந்தது என்று இறைவன் கருதுகிறான் என்பது கதை.

சில வருஷங்களுக்கு முன்பு, மேல் நாட்டு அறிஞர் பலர் கூடிச் சமய உண்மைகளை எல்லாம் அலசி ஆராய்ந்து கொண்டிருந்தனர் ஒரு கூட்டத்தில். அந்தக் கூட்டத்துக்குச் சென்ற நானும் அவர்கள் பேசுவதை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்தேன் வாயே திறவாமல். அங்கிருந்த மேல் நாட்டு அன்பர் ஒருவர் என்னையும் ஏதாவது சொல்ல வேண்டும் என்று கேட்டார். அந்தச் சமயத்தில் எனக்கு நினைவுவந்த இந்த நின்றவூர்ப் பூசல் அன்பன் நினைவினால் அமைத்த கோயிலைப் பற்றிய கதையைக் கொஞ்சம் கண் மூக்கு எல்லாம் வைத்துச் சொன்னேன். இதைக் கேட்ட ஓர் அறிஞர் என்னைக் கேட்டார். 'நண்பரே! இவ்வளவும் உண்மையாய் நடந்ததா என்று?' நான் சொன்னேன்:

'சேக்கிழார் பொய்யே சொல்ல அறியாதவர் ஆயிற்றே. அவர் நடந்ததை யெல்லாம் நடந்தபடியே சொல்லும் புலவர் அல்லவா? அதோடு காஞ்சி கைலாசநாதர் கோயில் வேறே இருக்கிறதே. மேலும் திண்ணனூர் என்று இன்று வழங்கும் திருநின்ற ஊரில் இருக்கும் கோயிலில் இருப்பவர் இருதய கமலநாத ஈசுவரர் என்று பெயர் பெற்றவர் ஆயிற்றே. ஆதலால், இவ்வளவு நேரம் சொன்னது அத்தனையும் அப்படியே நடந்திருக்க வேண்டும் என்றே நம்புகிறேன் நான்' என்றேன். அப்போது அறிஞர் சொன்னார்: 'அன்பரே! இப்படி யெல்லாம் நடந்து அதையே உங்கள் சேக்கிழார் சொல்லியிருந்தால் அவர் ஒரு சரித்திர ஆசிரியர் என்ற பாராட்டுக்கு மட்டுமே உரியவர். இப்படி ஒன்றுமே நடவாதிருந்து, அத்தனை விஷயத்தையும் கற்பனை பண்ணி, கதை சொல்லியிருந்தால் இந்த அரிய கற்பனைக்கு மேலே ஒரு கற்பனை உலக இலக்கியத்திலே கிடையாதே. உள்ளத்தில் இறைவன் இருக்கிறான் என்பதை எல்லாச் சமயவாதிகளும்தான் சொல்கிறார்கள், அந்த உண்மையில் அழுத்தமான நம்பிக்கை இல்லாமலேயே. அப்படி இருக்க இந்த உண்மையை விளக்க, இப்படி ஒரு கற்பனைக் கதையையே உங்கள் சேக்கிழார் உருவாக்கி இருந்தால், உலகமே அவருக்குத் தலை வணங்கி நிற்க வேண்டுமே' என்றார். உண்மைதானே. 'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்று பாடிய மணிவாசகரையும் 'மனத்தகத்தான்' என்று பாடிய அப்பரையும் அல்லவா விஞ்சிவிருக்கிறார் இந்தப் பூசலார், மனத்திலேயே கோயில் ஒன்றைக் கட்டி.

இந்தப் பூசலார் நெடிது நாள் நினைந்து செய்த இந்த மனக்கோயிலின் ஞாபகார்த்தமாகப் பின் வந்தவர்கள் ஒரு கோயில் கட்டியிருக்கிறார்கள் அந்தத் திருநின்ற ஊரிலே. 'சென்னை — அரக்கோணம் இருப்புப் பாதையில் — திண்ணனூர் என்று ஒரு ரயில்வே ஸ்டேஷன். அங்குசென்று தெற்கு நோக்கி



பக்தவத்ஸலர் கோயில்



பிரபல எழுத்தாளர் ஸ்ரீ சுந்தரராமசாமி அவர்களின் தந்தையும், ஜவுளி வர்த்தகருமான திரு. எஸ். ஆர். சுந்தரம் அய்யர் அவர்களின் சஷ்டியப்தபூர்த்தி நாகர்கோவிலில் செப்டம்பர் 19ந் தேதி வெகு விமரிசையாக நடந்தது.

---

ஒரு மைல் நடந்தால் (ஆம் நடக்கத்தான் வேண்டும் - வண்டி எல்லாம் ஸ்டேஷனில் எளிதில் கிடைக்காது) பெரிய கோபுரத்தோடு கூடிய கோயில் ஒன்றில் இருக்கும் பக்தவத்சலர் வழி மறிப்பார். நமக்குத்தான் சைவ வைணவ பேதமே கிடையாதே. ஆதலால் வழிமறிக்கும் பக்தவத்சலரையே தரிசிக்கலாம் முதலில். இவரையே **நின்றவூர் நித்திலம்** என்று **மங்கை மன்னன்** பாடிப் பரவி மகிழ்ந்திருக்கிறார். இந்த பக்தவத்சலனையே பத்தராவிப் பெருமான் என்று நல்ல தமிழில் அழைப்பார்கள். இத்துடன் அங்கு கோயில் கொண்டிருக்கும் தாயாரை ஸ்ரீமத்ஸவித்ரீ நாயகி என்று வடமொழியில், நீட்டி முழக்கிக் கூறினால் நிரம்பவும் அருமையாக **என்னைப் பெற்ற தாயார்** என்றே அழைப்பார்கள் நல்ல தமிழில் அன்பர்கள். இந்த பக்தவத்ஸலன் கோயிலில் ஸ்ரீநிவாச விமானம் உண்டு. வருண புஷ்கரணி உண்டு. விருத்தக்ஷீர நதிக் கரையிலே உள்ள இந்தப் பெருமாள் வருணனுக்கே பிரத்தியக்ஷமானவர் என்பது புராண வரலாறு. பெருமாளையும் தாயாரையும் வணங்கிவிட்டுப் பின்னும் கிழக்கே வந்தால் ஒரு சிறிய கோயிலைப் பார்ப்போம். கோயில் வாயிலில் கோபுரம் இருக்காது. உள் நுழைந்ததும், தகரக் கொட்டகை ஒன்றே நமக்குத் தென்படும். இந்தச் சின்னஞ் சிறிய கோயிலில் இருப்பவரே **இருதயாலய ஈசுவரர்.** அவரது துணைவியே **மரகதாம்பிகை.** இந்த அம்பிகை பின்னமுற்றிருப்பதால் பூசை இல்லை. புதிய சிலா உருவம் தயாராக இருந்தும் இன்னும் பிரதிஷ்டை ஆகவில்லை. கோயிலில் கர்ப்பக் கிருஹத்துக்குள்ளேயே பூசலாரும் சிலை உருவில் இருக்கிறார். மனத்துள் வைத்துப் பூஜித்தவரைக் கர்ப்பக் கிருஹத்துள் வைத்துப் பூஜிக்கிறார் இருதயாலயர். இந்தக் கோயிலில் செப்புச் சிலை வடிவிலும் பூசலார் இருக்கிறார். அவரையே பார்க்கிறீர்கள் பக்கத்திலே நீங்களும் நானும் அவரது இருதயத்தில் இருந்த இருதயாலயரைக் காணத் துடிப்போமல்லவா? ஆதலால் அவர் லிங்கத் திருவுருவில், பூசலார் மார்பிலே நெஞ்சுக்கு வெளியே இருக்கிறார். அரிய கற்பனை கற்பனையாகவே இருந்திருக்கலாமே, இப்படிக் கேலிக்கூத்தாக ஓர் உருவம் அமைந்திருக்க வேண்டாமே என்றும் தோன்றும். இக்கோயிலில் நால்வர், சோமாஸ்கந்தர், பிக்ஷாடனர் எல்லாம் இருக்கிறார்கள். இவர்களையெல்லாம் விஞ்சியவராய் பக்த உத்ஸவராம் மகா விஷ்ணுவே **மோஹினி** உருவிலும் இருக்கிறார். ஒன்றரை அடி உயரத்திலே உருவானவர்தான் என்றாலும் நல்ல அழகான திரு உரு. மோஹினியின் முன்னழகைவிடப் பின்னழகு (ஆம் பின்னல் அழகுதான்) பிரமாதம். இக்கோயில் அன்று பூசலார் உள்ளத்தில் ஒளிந்திருந்தது போல் இன்றுமே நின்ற ஊரிலே ஓர் ஒதுக்குப்புறத்திலேயே இருக்கிறது. இருந்தாலும் இக் கோயிலைத் தேடிப் பிடித்துத் திருப்பணி செய்திருக்கிறார் ஒரு அம்மை. அவர்தான் தேவகோட்டை சீதை ஆச்சி என்பவர். பூசலார் பக்திக்குத் தலை வணங்குவதுபோல் இந்த சீதை ஆச்சியின் பக்தி சிரத்தைக்குமே தலை வணங்கலாம்.

இந்தத் திருநின்றவூர் பூசலார், பக்தவத்சலர் என்ற இருவரால் மட்டுமே பிரசித்தி அடைந்தது என்றில்லை. இந்த ஊரிலே இருந்த ஒரு ரஸிகர், கொடை வள்ளல் **காளத்தி வாணர்** என்பவராலும் இலக்கியப் பிரசித்தி பெற்றிருக்கிறது. இந்த நின்றைக் காளத்தி வாணர் புலவர்களை ஆதரிக்கும் வள்ளல். ஆதலால் வறுமையால் வாடும் புலவர்கள் எல்லாம் இவரைத்தேடி வருவதுண்டு. அப்படி வருகிறான் ஒரு கவிஞன். நீண்ட நாளாக வறுமையுடன் போராடிய அவன் நின்றையூர் நோக்கி வருகிற வழியில் இருட்டி விடுகிறது. நின்றையூருக்கு அயலிலே உள்ள ஒரு சிறு கிராமத்தில் சத்திரத்தில் தங்குகிறான். அங்குள்ளவர்களும், காளத்திவாணரின் கொடையையும் ரஸிகத் தன்மையையும் பாராட்டிப் பேசுவதை யெல்லாம் கேட்கிறான். ஒரு நம்பிக்கை பிறக்கிறது உள்ளத்தில். மறுநாட்காலை காளத்தி வாணரைக் கண்டுவிட்டால் தன் வறுமை தன்னை விட்டுத் தொலை தூரத்தில் ஓடிவிடுமே. ஐயோ பாவம்! அது இன்றைக்கு ஒரு நாளாவது நம்மிடம் இருந்துவிட்டுப் போகட்டுமே என்று அனுதாபத்தோடு பார்க்கிறான், தன்னைத் தொடர்ந்து வந்த வறுமையை. இந்த அனுதாபம் ஒரு பாட்டாகவே வெளி வருகிறது அந்தச் சத்திரத்தில் அன்றிரவு.

நீளத் திரிந்து உழன்றாய்
　　நீங்கா நிழல்போல
நாளைக்கு இருப்பாயோ ?
　　நல்குரவே ! — காளத்தி
நின்றைக்கே சென்றக்கால்
　　நீ எங்கே ? நான் எங்கே ?
இன்றைக்கே சற்றே இரு

என்பது பாட்டு. ஆம். நின்றைக்கே செல்லலாம். நாமும் நினைப்பினால் கோயில் செய்த பூசலாரை நினைத்துக் கொண்டே. அங்குள்ள பக்தவத்சலரை, என்னைப் பெற்ற தாயாரை, இருதயாலயரை, மரகதவல்லியை வணங்கலாம். அதுவரையில் நாம் செய்த பழவினைகளும் நம்மோடு இருந்து விட்டுப் போகட்டுமே என்று அவைகளிடம் கொஞ்சம் அனுதாபமும் காட்டலாம்தானே.

# கவர்ச்சியாக இருக்க கற்றுக்கொள்கிறான்...

இன்னமும் சிறுவன்தான். இருந்தாலும், அவனுக்கும் கவர்ச்சியாக இருக்க ஆசைதான். அவனுடைய அடர்த்தியான முடியை அழகாகப் படிய வைக்கும் 'குட்டு'தான் அவனுக்கு விளங்கவில்லை. டாடாவின் பரிமள கோகனட் கூந்தல் தைலத்தின் மேன்மையை அவனுக்கு விளக்குங்கள். இந்த சுத்தமான தேங்காய் எண்ணெயின் பரிமளம் மனதிற்கு உல்லாச மூட்டும். அடர்த்தியான முடியை கண்கவர் கருமையுடன் படியச் செய்ய இருபத்தைந்து வருஷங்களாக உபயோகத்தில் இருந்துவரும் கூந்தல் தைலம் இது.




## டாடாவின் பரிமள கோகனட் கூந்தல் தைலம்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# தேன்மழை

அத்தியாயம் 5

## வீம்பு வென்றது

எத்தனையோ நாட்களுக்குப் பிறகு பாபு வந்திருப்பது அவளுக்கு வியப்பைத் தந்தது. ஆனால் அவன் வந்திருக்கும் வேளைதான் அசந்தர்ப்பமாகப் பட்டது. அவனை அவள் மனம் எதிர்பார்க்கவே யில்லை. இந்தப் பங்களாவுக்கு வந்து தன்னைச் சந்திக்கும் எண்ணமும் துணிச்சலும் அவனுக்கு இருக்கும் என்று அவள் கனவிலும் நினைத்ததேயில்லை.

அவனை, 'வா' என்று அழைக்கக் கூட அவளுக்கு வாய் வரவில்லை. காரணம் இன்றுள்ள சூழ்நிலையில் அவள் அவனைச் சந்தித்துப் பேச விரும்பவில்லை என் பதுதான்.

அவன்தான் இந்தச் சில மாதங்களுக்குள் எப்படி மாறி விட்டான்! அவனுடைய உருவ வளர்ச்சி அவளுக்குக் கூச்சத்தை உண்டாக்கியது. அவன் முன்னைக் காட்டிலும் உயரமாக வளர்ந்திருப்பதாகத் தோன்றினான். முகத்திலே இளமையின் செழிப்புத் தென்பட்டது. கண்களிலே நேசமும் நேர்மையும் பளபளத்தன.

ஒரு கணம்தான் அவர்கள் கண்கள் சந்தித்தன. உஷா சட்டென முன்போல் முகத்தைத் திருப்பிக்கொண்டு, "என்ன விஷயம்? எங்கே இப்படி இவ்வளவு தூரம் வந்தாய்?" என்று சுமுகமற்ற பாவனையில் கேட்டாள். குரலில் தொனித்த வேற்றுமை தெளிவாகவே புலப்பட்டது.

அவள் கேட்ட விதத்தைக் கண்டு பாபு சிறிது தயக்கமுற்றான். உஷா முன்போல் இல்லை என்று அவனுக்குப் பட்டதோ, என்னவோ!

"உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்!"

"என்னைப் பார்க்கவா?" சோபாவில் எங்கோ பார்த்துக் கொண்டிருந்த அவள் சிறிது ஏளனம் தொனிக்கும் குரலில் நகைத்து, "அதிசயமாக இருக்கிறதே! உன் நண்பனின் அநுமதி வாங்கிக் கொண்டுதானே என்னைப் பார்க்க வந்திருக்கிறாய்!" என்றாள்.

பாபு பேசாமல் இருந்தான். அவன் முகத்தில் எந்தவித மாறுதல் ஏற்படுகிறது என்பதை அவள் கவனிக்கவில்லை. என்ன எண்ணுகிறான் என்றும் தெரியவில்லை. அவளுக்கு ரோசமும் கோபமும் தான் முந்திக்கொண்டு வந்தன. விருட்டென்று அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

"நான் செல்வத்தில் புரள்கிறவள்; நீங்கள் ஏழைகள். ஏழைகள், ஏழைகள் என்று சொல்லிக்கொண்டே எப்படி வேண்டுமானாலும் செய்யலாம், என்ன வேண்டுமானாலும் அவமதிக்கலாம். ஆனால் நான் பணக்காரி; மனிதத்தன்மையற்றவள்; நட்புடன் பழகத் தகாதவள்; எந்த மாதிரி இழிவான வார்த்தைகளைச் சொன்னாலும் கேட்டு ஜீரணித்துக் கொள்ள வேண்டியவள். மனிதத் தன்மை படைத்த ஏழைகள் அப்படி இல்லாத நிலையில் உள்ளவர்களைப் பார்க்க வரலாமா?" என்று படபடப் போடு பேசினாள். முகமெல்லாம் அவளுக்குச் சிவந்துவிட்டது.

அவன் பேசியவற்றையெல்லாம் அவன் பொருட்படுத்தியதாகவே தோன்றவில்லை.

"வண்டியில் நீ வருவதை வழியில் பார்த்தேன். இல்லாவிட்டால் இந்த வேளையில் உன்னைப் பார்க்க வந்திருக்க மாட்டேன்!"

"இந்த வேளை என்ன? எந்த வேளையாக இருந்தாலும் நீ என்னைப் பார்க்க வரவேண்டும் என்று எழுதியா வைத்திருக்கிறது? அப்படி நான் எதிர்பார்க்கவில்லையே! செல்வத்தில் புரளுகிறவளைப் பார்க்க நீங்கள் எல்லாரும் வரலாமா என்பதுதான் கேள்வி!"

"சரி; இப்பொழுது சமயம் சரியாக இல்லை. கண் முன் ஏதாவது அவமதிப்பாகப் பேசியிருந்தால் அதற்கு நான் வேண்டுமானால் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு விடுகிறேன். நான் வந்தது என்னவோ அப்படி ஒன்றும் தலைபோகிற காரியமல்ல. ஆகவே அப்புறமாக வருகிறேன்!" என்று கூறிவிட்டு அவளுடைய விடையை எதிர்பார்த்துச் சிறிது நேரம் நின்றான்.

"அவன் பேசியது உனக்குச் சரியாகத் தோன்றினால் அது எனக்கு அவமதிப்



பல்ல. அப்படியானால் நீ என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டியதும் இல்லை. தலை போகிற காரியமோ, தலை போகாத காரியமோ என்னைப் பார்க்க இனி நீ வர வேண்டியது இல்லை. இதனால் பாதிக்கப் பட நேர்ந்தால் உனக்குப் பெரும் நீங்கு எதுவும் வரவும் வேண்டாம்!'' என்று சொல்லியவாறே, அவனைத் தாண்டிக் கொண்டு, நடு ஹால் பக்கம் சென்றாள்.

நடராஜ விக்கிரகம் வைத்திருந்த இடத்துக்கு எதிரே போய்ச் சிறிதுநேரம் வேகம் அடங்க நின்றாள். என்ன செய்வது என்றே அவளுக்குப் புரிய வில்லை. வீட்டில் சந்தடியையே காணோம். ஒரு புறம் வேதனை பிடுங்கித் தின்றது. காரணம் விளங்காமல் 'ஹோ' என்று வாயைவிட்டு அழுதால் தேவலைபோல் இருந்தது. இத்தனை துக்கத்துக்கும் காரணம் யார்? 'நீயேதான்!' என்று கூறுவதுபோல் எதிரேயிருந்த நிலைக் கண்ணாடியில் அவளுடைய உருவம் காட்சியளித்தது. அதை அவளால் பொறுக்க முடியவில்லை. தன் பிம்பத் தையே பார்க்கப் பிடிக்காமல் அவள் திரும்பி வந்தாள். வாசற்படி யருகில் இருந்த பாபுவைக் காணோம். உள்ளே நுழைந்து, முகப்பு ஜன்னல் வழியாகப் பார்த்தபோது அவன் சைக்கிளில் போய்க் கொண்டிருந்தான்.

"போகட்டும்! இவர்களிட மெல்லாம் எனக்கு என்ன சகவாசம்? என்ன பேச்சு! இனிமேல் இங்கே வராமல் போனால் போகட்டும். நல்லதாகப் போயிற்று!''

புதிதாக வந்திருந்த டிரைவர் மெது வாக எட்டிப் பார்த்துவிட்டு, ஆமை யைப் போல் தலையை இழுத்துக்கொண்டு விட்டான். குப்பன் இருக்க வேண்டிய இடத்தில் ஒரு சுப்பனா? அவளுக்கு நெஞ்சு வலித்தது. வீட்டில் அவள் திரும்பி வந்திருப்பது இன்னும் அவள் தாய்க்கோ பொன்னிக்கோ தெரியாமலா இருக்கும்? வண்டி வாசலிலேயே நிற்பதிலிருந்து தந்தையும் வீட்டில் இருக்க வேண்டும் என்றுதான் தோன்றியது. அவர்க ளுடைய மனம் அத்தனை கல்லாக மாறும்படி தான் என்ன தவறு செய்து விட்டோம் என்று எண்ணி எண்ணி அவள் குமுறினாள். கண்ணீர் துளும்பி மாலையாக வடிந்தது. நேரமாக ஆக, பொன்னி வீட்டில் இல்லை போலிருக் கிறது என்ற சந்தேகம் வலுத்தது. இதை எப்படி அவளால் சகித்துக் கொள்ள முடியும்? எப்படி இவர்கள் அவளைப் போகச் சொல்லலாம்?

தான் பிடித்த வீம்பைக் கடைசி வரை யில் நிறைவேற்றியே ஆக வேண்டும் என்று தோன்றுகிற வரையில் அவள்

ஜன்னலருகே நின்று கொண்டிருந்தாள். பிறகுதான் இரட்டிப்புச் சோர்வுடன் அவள் குஞ்சம் வைத்த வெல்வெட் தலையணையைத் தலைக்கு வைத்துக் கொண்டு சோபாவில் சாய்ந்தாள். அடர்ந்த இமைகள் தாமாகவே மூடிக்கொண்டன. கும்பென்று காதுகள் அடைத்துக் கொண்டன; 'ஙொய்' என்று ஓர் ஓசை. எத்தனை நிமிஷங்கள் ஆயினவோ! மோட்டார் புறப்படும் ஓசை கேட்டு அவள் கண்ணைத் திறந்து வாயிலை நோக்கினாள். பின் சீட்டில் தன் தாய் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அவள் வந்திருப்பது தெரிந்தும் பசியோடு படுத்திருப்பது தெரிந்தும், அவள் அலங்காரம் செய்து கொண்டு வண்டியில் ஏறிப் போகிறாள்! "இவள் என்ன ஓர் அம்மாதானா? இப்படியும் ஓர் அம்மா எங்கேயாவது இருப்பாளா? இருக்கட்டும்; இன்று யார் வீம்புதான் ஜயிக்கிறதோ, பார்க்கலாமே!" இவ்வாறு தனக்குத் தானே கூறிக் கொண்ட உஷா மீண்டும் கண்களை மூடிக் கொண்டு உறக்கத்தில் ஆழ்ந்தாள். உறக்கம் மட்டும்தானா அது? மயக்கமும் கூடத்தான்!

முகத்தில் ஜில்லென்று தண்ணீர் தெளிக்கப்பட்டதை உணர்ந்த பிறகே அவள் மெல்லக் கண் விழித்துப் பார்த்தாள். 'ஏன் இங்கே என்ன நடந்தது? இதென்ன எடிகொலோன் நெடி! பொன்னியா பக்கத்தில்? அப்புறம் அம்மா, அப்பா எல்லோருமே ஏன் இப்படிப் பார்க்கிறார்கள்?'

"பொன்னி!"

"குழந்தை!"

"குழந்தை! என்னைப் பார்! நான் நிற்கிறது தெரியவில்லையா?"

சொர்ணம்பாளின் குரலில் பயமா, ஏக்கமா? ஏன் இந்த நடுக்கம்?

"அம்மா!"

அவளுடைய தலையை மெதுவாக யாரோ வருடுவது தெரிந்தது. பாரிஸ்டர் தான்! உஷா கண்களை உயர்த்திப் பார்த்த போது, "நான்தான் குழந்தை. பயப்படாதே! சாப்பிடாததனால் மயக்கம். இப்படிப் பிடிவாதம் பிடிக்கலாமா? அம்மா எப்படிப் பயந்து போய் விட்டாள், தெரியுமா?" என்றார்.

பொன்னி ஒரு வாய் எலுமிச்சம் பழச் சாற்றைத் தண்ணீரில் பிழிந்து கொடுத்தாள். அப்பா! நாக்குக்கு இப்பொழுது தான் சொரணை வந்தது! என்ன ருசி! குமட்டலுக்கு அது உணக்கையாக இருந்தது. உஷாவுக்கு அந்த ருசி பன்மடங்கு அதிகமாக இருப்பது போல் தோன்றியது. பொன்னி அவளை விட்டு எங்கும் போகவில்லை. அவளுடைய அன்புக் கையால் பிழிந்து கொடுத்த அந்தச் சாறு எப்படிக் குமட்டும்? உஷா பொன்னியின் கையைத் தேடி, அதை இறுகப் பற்றிக் கொண்டு எழுந்தாள். "உன்னை எங்கே காணோம், இவ்வளவு நேரம்?" என்று கேட்பது போலிருந்தது அவளுடைய பார்வை.

பாரிஸ்டர் அவளுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். சொர்ணம்பாள் இன்னொரு பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

இருவரும் அவளுடைய இரு கைகளையும் தம் கையில் எடுத்து வைத்துக் கொண்டார்கள். அவர்களுக்கு அது எவ்வளவோ ஆறுதலைத் தந்தது. ஒருவராவது அவளிடம் பேச வேண்டுமே! பேசிப் பெற முடியாத இன்பத்தைப் பெற்றாள் உஷா.

கடைசியில் அவளுடைய வீம்புதான் வென்றது. அவளுடைய வீம்பு, சொர்ணம்பாள் காரில் ஏறிப் புறப்பட்டுச் சென்ற போதே வென்று விட்டது என்பது அவளுக்குத் தெரியாது. காலையில் கணக்குத் தீர்த்து வேலையை விட்டு நீக்கிய பொன்னியை மீண்டும் அழைத்து வருவதற்காகத்தான் அவள் புறப்பட்டுப் போனாள். பொன்னி இல்லாமல் போனால் உஷாவோடு அவளால் எப்படிச் சமாளிக்க முடியும்? நிலைமை மோசமாகி விடும் போல் இருந்தது. பிறகு பாரிஸ்டரின் யோசனை



யைக் கேட்டுக் கொண்டுதான் அவன் பொன்னியை அழைத்து வரவேண்டிய முடிவுக்கு வந்தான். இதெல்லாம் உஷாவுக்கு எப்படித் தெரியும்?

உஷா கல்லூரியிலிருந்து வந்த பிறகு கணவனும் மனைவியும் மாடியில் இந்த யோசனையில்தான் ஈடுபட்டிருந்ததால், அவர்களுக்குப் பாபு வந்ததும் தெரியாது; போனதும் தெரியாது. பொன்னி எப்போதும் போல் வேலையில் இருப்பதாகவே எண்ணிக் கொண்டிருந்தாள் உஷா.

"குப்பன் எங்கே?" என்று கேட்டாள் உஷா.

"லீவு போட்டு விட்டுப் போனுன்; நாளைக்கு வருவான்!" என்ருள் சொர்ணம்பாள் முந்திக் கொண்டு.

பொன்னி அதை மறுத்து உண்மையைக் கூற முடியுமா? லீவு போடாவிட்டால் என்ன, அவன் போனது உண்மை; நாளை வருவான் என்பதும் உண்மை. உஷாவுக்கு அவ்வளவு தெரிந்தால் போதாதா, அதுவும் இப்பொழுது இருக்கிற நிலையில்.

## அத்தியாயம் 6

# பாபுவின் கடிதம்

மறுநாள் காலையில் பொன்னியும் குப்பனும் பங்களாவினுள் நுழையும் போதே உஷாதான் எதிர்கொண்டு அழைத்தாள்.

"உண்மையைச் சொல்லு, நேற்று எங்கே போயிருந்தாய்? அதைக் கேட்கத்தான் இன்று சீக்கிரமாகவே எழுந்து விட்டேன். நீ வராமல் இருந்ததற்கு என்ன காரணம்?" என்று கேட்டாள் உஷா.

பொன்னி அவளுக்குப் பின்புறமாக நின்று உதட்டைக் கடித்துக் கொண்டு கண்களைக் காட்டினுள். அவள் என்ன ஜாடை காட்டினுளோ அது குப்பனுக்குத் தெரியாது. ஆனுல் உண்மையைச் சொல்லக் கூடாது என்பதை மட்டும் அவன் அறிந்து கொண்டான்.

"இதிலே உண்மை என்ன, பொய் என்ன குழந்தை! உங்களுக்கெல்லாம் வாரத்திலே இரண்டு நாட்கள் லீவு கிடைக்குதே—தாங்க வருஷத்திலே இரண்டு நாள் வராமெ இருந்துடப் படாதா? இல்லே, கேக்கறேன். என்னமோ உடம்பெல்லாம் வாயுப் பிடிப்பா இருந்தது. எண்ணெய் தேச்சு முளுகிட்டுப் படுத்திட்டேன். அப்புறம் விளக்கு வைக்கற நேரமிருக்கும். பாபு வந்தான். சேதி தெரியுமில்லே உனக்கு? இ.எஸ்.எல்.ஸி. பரிட்சைக்குப் போயிருந்தானும். மூணும் மாசம். அதிலே பாஸாயிட்டானும்... சங்கத்திலிருந்து போனவங்களாம் — மூணு பேரோ நாலு பேரோ போனுங்க போலிருக்கு; அத்தினி பேரும்—பாஸா விட்டாங்களாம். சங்கத்துலே கூட்டம் போட்டுப் பாராட்டினுங்க; போயிருந்தேன்! ஒரு நாளு ரெஸ்ட் எடுத்துக்கப் படாதா?" என்ருன் குப்பன். அவன் சொன்னதெல்லாம் உண்மைதான். ஆனுல் ஏன் போனுன் என்பது ஒன்றைத் தான் மறைத்து மழுப்பி விட்டான்.

"இதோ பாரு, என்ன இருந்தாலும் நீ பெரிய ஆளுதான்: ஆமாம், பொய்யைத்தான் எத்தனை பொருத்தமாச் சொல்லறே! நீ லீவுதான் போட்டுட்டேன்னு குழந்தை அப்படியே நம்பிட்டுதே...அடையம்மா! இதைப்போல் என்னுண்டை நீ என்னெல்லாம் சொல்லி மயக்கிறியோ, யாரு கண்டாங்க? அந்த முண்டக் கண்ணியாத்தாளுக்குத்தான் முழுக்கத் தெரியும்!" என்று இரண்டு கையையும் கொட்டி, மோவாயில் கையை வைத்து வியந்தாள் பொன்னி.

உஷா அவன் சொன்னதை அப்படியே எடுத்துக் கொண்டது உண்மைதான். அவள் எண்ணமெல்லாம் சட்டென்று வேறு எதிலோ போய்ப் பாய்ந்து விட்டது. தன்னைப் பாபு எதற்காகப் பார்க்க வந்திருக்கிருன் என்று இப்போதுதான் அவளுக்குத் தெரிந்தது. இந்த நல்ல செய்தியைச் சொல்ல வந்தவனைப் போய், பசியின் வேகத்தில் ஏதேதோ பேசி விரட்டி விட்டதை எண்ணி அவள் மனம் கசிந்தாள். சண்முகம் தன்னை வரவேண்டாம் என்று கூறியது அவனுக்குத் தெரியுமோ, தெரியாதோ, அதைக்கூட விசாரித்தறியாமல் வார்த்தைகளை வாரிக் கொட்டிவிட்டதை நினைத்துத் தன்னையே நொந்து கொண்டாள். உருவ வளர்ச்சியோடு பாபு அறிவு வளர்ச்சியும் அடைந்து வருவது அவளுக்கு உற்சாகத்தைக் கொடுத்தது. ஆயினும் அவள் இனி அவனை எங்கே சந்திக்கப் போகிருள்? அவன்தான் இனிமேல் அவளை ஏன் தேடி வரப் போகிருன்? அந்த அத்தியாயம் சோகத்திலே முடிந்துவிட்டதாக அவள் கருதினுள். எங்கேயோ அவன் நன்ருக இருந்தால் சரிதான்!

மேலுக்கு இப்படிச் சொல்லிக்கொண்டாலும், உள்ளூற அவளுக்குக் கல்லூரிப்

# கால்கேட்டின் மூலம் பற்கள் சொத்தையாவதைத் தடுப்பதோடு நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தையும் அகற்றுங்கள்!



கவனிக்க, கால்கேட் பற்பசை சொத்தையையும் துர்நாற்றத்தையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒரேதேய்ப்பில் ஒழிக்கிறது!

உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10-ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத் தான் உண்டு.

இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சேர்ந்திருக்கும் ஆதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல்துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர்மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




<u>வெண்ணிற பற்களைப்</u> பெறவும், வாயில் <u>நறுமணம்</u> கமழவும், உலகிலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

போன்: 2881 தந்தி: "கரணை"



# தீபாவளி விற்பனை!

நியாயமான விலை!! நாணயமான ஜவுளிகள்!!!

புத்தம் புதிய தினுசுகளில்

மில் நூல் & ஸில்க் நைலான் மற்றும் பேன்ஸி ஜவுளி ரகங்களும்
பின்னி ஜவுளி தினுசுகளும் நிறைய வந்திருக்கின்றன

காஞ்சீபுரம், ஆரணி, பெனாரஸ், பெங்களூர் பட்டு புடவைகள், பாவாடைகள்
கோடம்பாக்கம் நூல் சேலைகள் ஏராளமாக ஸ்டாக் செய்திருக்கிறோம்
உங்கள் தேவைக்கு எங்கள் கடைக்கு விஜயம் செய்யுங்கள்

## கரணை ஜவுளி மாளிகை

ராஜ வீதி கோயமுத்தூர்

OSR









## வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு I.O.B. உதவுகிறது



உங்கள் உபயோகத்துக்கு வேண்டிய நீடித் துழைக்கும் சாமான்களை வாங்குவதற்கும், சொத்து அபிவிருத்திக்க கடன்களும், சிறு வியாபாரக் கடன்களும், தவணையில் பணம் கொடுத்து வாங்கும் முறையில் விற்கும் ஏஜென்ஸிகளுக்கு பண உதவி செய்யும் கடன்களும் தரப்படும்.

சுலபமாகத் தவணைகளாக 6, 12, 18, 24, 30 மாதங்களில் கடனைத் திருப்பிக் கொடுக்கலாம்.

இந்தத் திட்டம்பற்றிய முழு விவரங்களுக்கு எழுதுங்கள்:

**தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்,**

151, மவுண்ட்ரோட், சென்னை-2

அல்லது

அகமதாபாத், பம்பாய், கல்கத்தா, கட்டக், ஹைதராபாத், சென்னை, புது டில்லி, தென்னிந்தியா முழுதும் உள்ள கிளைகள் எதிலும் பெறலாம்.




எம். ஸிடி. முத்தையா, சேர்மன்.

வி. பி. துரைக்கண்ணு, ஜெனரல் மானேஜர்.

IOB-8-58

படிப்பும் சரி, வீட்டு நிலைமையும் சரி சப்பென்று சுவையற்றுப் போய்விட்டன. நாட்டியப் பயிற்சி செய்யக்கூட மனம் நாட்டம் கொள்ளவில்லை. பைத்தியக் காரிபோல் ஒருத்தி தனியாகவா நின்று பயிற்சி செய்வாள்? அப்படி எதற்காகச் செய்ய வேண்டும்? இனி இந்தக் கலையை வைத்துக்கொண்டு அவள் சாதிக்கப் போவது என்ன? எந்த மேடையில் போய் அவள் ஆடிப் பிறரை மகிழ் விக்கப் போகிறாள்? அவளுடைய அருஞ் செல்வமான இளமை, கலை யுணர்வு இரண்டும் எந்த விதத்தில் உயர்ந்ததாக இருந்துதான் என்னபயன்?

ஆயினும் உயர்ந்த விஷயங்களைப் படிக் கும் போதும் கேட்கும் போதும் அவள் உள்ளம் சிறகடித்து வானில் பறப்பது போல் தோன்றியது. இதுவரையில் பரிச் சயமில்லாத புதுப் புது பாவங்கள் எல் லாம் மனத்தில் உருவாகிக் கொண்டிருந் தன. ஒவ்வோர் அங்க அசைவிலும் அந்த நாட்டிய பாவங்களின் மென் னலைகள் விரவிப் பரவிக் கொண் டிருந்தன.

தோட்டத்து மலர்கள் அசைந்தாடும் போதும் பறவைகளின் கிங்குரல் செவி யில் பாயும்போதும் அவளுடைய எழில் வண்ண மேனியெல்லாம் இனிய பாவங் களோடு இயங்கியது. தென்றலும் இன்மணமும் கிங்குரலும் சேர்ந்து வந்த போது வீணை நரம்புகளை மீட்டியசைப் பது போல் அவள் உணர்ந்தாள். அவற்றை உணராதபோது அவள் சோர்ந்தாள்.

அப்போதெல்லாம் தாயின் அன்புக் காக அவள் உள்ளம் ஏங்கியது. சொர் ணம்பாள் அன்பை வெளிக் காட்டத் தெரியாதவளாக இருந்திருந்தால் அதை அவளால்புரிந்துகொள்ளமுடிந்திருக்கும். அத்தனை கற்பனை அவளுக்கு இருந்தது. ஆனால் அன்பே இல்லாமல் வறண்டு கிடந்ததைத்தான் அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு தாயின் உள்ளத்தில் பாலையின் வெம்மை ஏது?

வேறு சில சமயங்களில் உள்ளம் சாம் பிப்போய் நிற்கும் ராதையாக அவள் தன்னைப் பாவித்துக் கொண்டாள். காதல் ராதையின் கனிந்த இதயத்தை வாடச் செய்யும் மோசக்காரக் கண் ணன் யார்? கோமளமான அவளுடைய உள்ளத்தில் கோபத் தீயை மூளும்படி செய்த கோபாலன்தான் எத்தனை கல் நெஞ்சுக்காரன்! ராதையாகவும் வள்ளி யாகவும் கோபியாகவும் கோதையாக வும் பாவித்து மாறி மாறி நின்றபோ தெல்லாம் அவளுடைய உடல் சிலிர்த்




தது: உள்ளமெல்லாம் சிலிர்த்தது: உலகமே தாபத்தால் சிலிர்ப்பது போல் தோன்றியது.... 'என்னையே நான் வாட்டிக்கொள்ளவா இந்தப் புனிதமான வித்தையைப் பயின்றேன்?' என்று அவள் தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள்.

எப்பொழுதாவது அவளுக்கு அந்தப் பழைய நினைவுகளும் வருவதுண்டு. விருந்துபசாரத்தின்போது பாதி நடனத் தில் எழுந்து சென்ற கண்ணபிரானை நினைத்தாலே அவளுக்கு வெறுப்பாகத் தான் இருந்தது. ஆயிரம் ரூபாய்க்குக் கொடுத்த செக்கைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்ததை நினைக்கும் தோறும் அவளுக்கு ஆறுதலைத் தந்தது. நடுவில் ஒரு நாளைக்கென்று வண்டி ஓட்ட வந்த டிரைவர் சொன்ன செய்தியை அவள் யாரிடமும் சொல்லவில்லை. ஆனால் அந்தச் சுசிலா என்பவள் யார் என்ற கேள்வி மட்டும் அடிக்கடி அவள் மனத்தில் எழுந்து கொண்டிருந்தது. அவள் இப்போது எங்கிருக்கிறாள்? சென்னையில் இருக்கிறாளா? சிங்கப்பூரில் இருக்கிறாளா? குப்பன் கூட அந்தக்

கண்ணபிரானோடு பழகும் ஒரு பெண்ணைப் பற்றிச் சொல்லியிருக்கிறான். ஆனால் அந்தப் பெண் இந்தச் சுசீலா தானா, அல்லது இன்னொருத்தியா?

இதெல்லாம் ஏன் தன் அப்பாவுக்குத் தெரியவில்லை என்று அவளுக்குக் கவலையாக இருந்தது. அவருடைய விருப்பமும் நோக்கமும் அவளுக்கு நன்றாகத் தெரிந்திருந்தன. அந்தக் கண்ணபிரான் அளவற்ற செல்வத்துக்கு அதிபதியாக இருக்கலாம். ஆனால் ஏழையான பாபுவிடம் கண்ட ஒழுக்கமும் நேர்மையும் அவனிடம் இருக்கின்றனவா? மனிதன் பணத்தினால் உயர்ந்து விடுகிறானா? பண்பினால் உயர்ந்தவனே மனிதன் என்று அவளுக்குப் பட்டது. பாபுவைப் பற்றி மட்டும் அவள் முழுதும் என்ன கண்டாள்? தெரியாது, தெரியாது....

திடீரென்று ஒரு நாள் குப்பன் அவளை வெள்ளையன் தோட்டத்துக்கு வர முடியுமா என்று கேட்டபோது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

"என்ன விஷயம்? திடீரென்று வெள்ளையன் தோட்டத்தில் என்ன வந்தது?" என்று கேட்டாள் அவள்.

குப்பன் முதலில் சிறிது தயங்கினான். பிறகு மெதுவாக, "ஒன்றும் இல்லே. பாபுவுக்குக் கொஞ்ச நாட்களாகவே உடம்பு சரியாயில்லே. என்னிக்குமே பேசாதவன் நேத்துத்தான் சொன்னான். நீ அவனே வந்து பார்க்கப் பிரியப்படுவியோ மாட்டியோன்னு அவனுக்கு யோசனே. ஆனால் நான் இதை மட்டும் சொல்வேன். நீ வந்து பார்த்தேன்னு வை, அவனுக்குப் பாதிச் சீக்கு அப்பவே பறந்திடும்!" என்றான் குப்பன்.

அவன் சொன்னது இவ்வளவுதான்; ஆனால் அவன் சொல்லாத பல உண்மைகள் அதில் தொனித்தன. எல்லாம் அவள் கண்முன் வந்து காட்சி தருவது போல் தெரிந்தன. பாபுவுக்கு உடம்பு சரியாக இல்லாததும் அதைக் குப்பன் வந்து சொன்னதும் அவளுக்கு விவரிக்க முடியாத வேதனையைக் கொடுத்தன. ஒவ்வொரு நாளும் கல்லூரியிலிருந்து திரும்பும்போதெல்லாம்எத்தனை தடவை வெள்ளையன் தோட்டத்துக்குப் போக வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டிருக்கிறாள்! இந்த ஆசையை வெளிக்காட்டிக் கொண்டதேயில்லை. இப்படி ஓர் ஆசை தோன்றுவது அவளுக்கே அவமானமாகத் தோன்றியது. தன்னை வர வேண்டாம் என்று சண்முகம் சொன்னது தகாததாக இருக்கலாம்; ஆனால் அதில் உண்மை சிறிதும் இல்லை என்பதை மறுக்க முடியுமா?

"இதை நீ ஏன் என்னிடம் முன்னாலேயே சொல்லவில்லை?"

"அதெப்படி குழந்தை! நீதான் அந்தப் பக்கம் இப்போதெல்லாம் போகிறதில்லேயே—அதனாலே தான் சொல்லல்லே!" என்றான் குப்பன்.

அவள் அன்று மாலை வெள்ளையன் தோட்டத்துக்குப் போனபோது பாபு சங்கத்துக் கொட்டகைக்குள் ஒரு மூலையாகப் படுத்திருந்தான். உடம்பு சரியாக இல்லாத நோயாளிகள் இப்படிப்பட்ட நிலையில் இருந்தால் எப்படிக் குணமாகும்? உஷாவுக்கு அந்த இடத்தைப் பார்த்ததுமே அதைரியமாக இருந்தது.

"உடம்பு சரியில்லே என்றால் ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கலாமே. இந்த இடத்தில் இருந்தால் உனக்கு உடம்பு எப்படிக் குணமாகும்?" என்று கேட்டாள்.

பாபு நன்றாக இளைத்துத்தான் போயிருந்தான். அவன் சிரிக்க முயல்வதே பெரும் பிரயாசையாக இருந்தது. "உம்...இந்த இடத்தைப் போய்ச் சொல்கிறாயே... இன்னும் கொஞ்சம் தோட்டத்துக்குள்ளே போய்ப் பார்த்திருந்தால் என்ன சொல்வாயோ? சீக்கு, கல்யாணம், பிரசவம், சாவு எல்லாம் எப்படி இங்கே நடக்கின்றன என்பது தெரியும். வாழ்க்கை இங்கே இப்படித்தான் இருக்கிறது, உஷா! இது அதனுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் ஆயிரம் மடங்கு உயர்ந்த இடம்!" என்றான் பாபு.

தன் கண்ணே பட்டு, திருஷ்டியாகப் போயிருக்குமோ என்ற எண்ணம் உஷாவுக்கு உண்டாயிற்று. சில மாதங்களுக்கு முன் எப்படி இருந்த அவன் இன்று எப்படி ஆகிவிட்டான்?

"உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஆசைதான். ஆனால் உன்னைத் தொந்தரவு செய்ய எனக்கு விருப்பமில்லே!"—பாபு இப்படிச் சொல்லிவிட்டு, பக்கத்தில் வேறு யாராவது இருக்கிறார்களா என்று பார்த்தான். சண்முகமும் தேவானையும் வெளியிலே நின்று குப்பனோடு பேசிக் கொண்டிருந்தார்கள்.

"எல்லாம் இருக்கட்டும்... இந்தா! இது ஒருவருக்கும் தெரிய வேண்டாம். அப்புறம் சாவகாசமாகப் போய்ப் படி!" என்று தலையணைக்குக் கீழே பத்திரப்படுத்தி வைத்திருந்த ஓர் உறையை எடுத்து அவளிடம் கொடுத்தான்.

உஷா அதை வாங்கிக் கொண்டாள். பிறருக்குத் தெரியாமல் அதை மறைத்து வைத்துக் கொண்டாள். (தொடரும்)

**நவராத்திரி தீபாவளி விற்பனை!**

தீபாவளி பண்டிகை வரை கீழ்க்கண்ட எமது பிராஞ்சுகளில் காஞ்சீபுரம் விலைக்கே பட்டுச் சேலைகள் விற்பனை செய்யப்படும்.

பிட்டிவாலா பில்டிங்ஸ், மாதுங்கா (C. Ry.) பம்பாய் - 19

டெலிபோன்: நெ. 88041

## மகாலக்ஷ்மி ஸ்டோர்ஸ்

(கொள்ளேகாலம் பட்டு ஜவுளி வியாபாரம்)

84, பாண்டி பஜார்-தியாகராய நகர் சென்னை-17.

6/90, W.E.A. கரோல்பாக், நியூ டில்லி-5. வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-4



## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

### பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414. மதராஸ்-5

தந்தி: 'EVERMANS' போன்: 85834

சேரக் கடைசி தேதி 21-10-1959 ... முதல் ஏலத் தேதி 23-10-1959

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (4-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி.) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள் 8-6, பிளாக் III, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1. ● 14-A/4, W. E. A. கரோல்பாக், புது டெல்லி-5 ● 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி-3 ● பெங்களூர் கிளை ஆபீஸ்: 185, முதல் மாடி, ஆறாவது கிராஸ், காந்திநகர், பெங்களூர்-9 ● பம்பாய் கிளை ஆபீஸ்: "வீனு விஹார்" 17-A, லைமன் - மாதுங்கா எஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய் - 22

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# அருணா

## ஸ்திரீகள் டானிக்

ஆயுர்வேதாஸ்ரமம் (பிரைவேட்) லிமிடெட்

சென்னை-17.

# சேவையின் கதை

வி.எஸ்.எஸ்

ஐந்து ஆண்டுகள் கல்லூரி ஆசிரியர் வேலைக்குப் பிறகு அதை விட்டு விட்டுச் சட்டம் படித்து வக்கீல் ஆனேன். சட்டத்துக்குள் புகுந்த பின்னர்தான், ஆசிரியர் வேலையை ஏன் விட்டோம் என்ற ஞானோதயம் ஏற்பட்டது. இனி, அந்த வேலைக்கு மீண்டும் போக முடியாது என்றாலும் என் ஓய்வு நேரங்களில் கல்லூரி மாணவர்களோடு கலந்து பழகும் சந்தர்ப்பம் கிடைத்ததில் மிக மகிழ்ச்சி அடைந்தேன்.

மாணவர்கள் தொடர்பு ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தது எங்கள் வட்டாரத்தில் அமைக்கப்பட்ட மாணவர் சேவா சங்கம். சமூகச் சீர்திருத்த சேவையில் நான் கொண்டிருந்த தீவிரமான கொள்கைகள் என்னுடன் பழக நேர்ந்த சில கல்லூரி மாணவர்களுக்குத் தெரியும். அவர்களும் என் அபிப்பிராயங்கள் பலவற்றை ஆமோதித்தார்கள். மாலை நேரங்களில் மாணவர்கள் என் வீட்டுக்கு வருவார்கள். பொது விஷயங்களைப் பற்றித் தர்க்கித்துப் பேசுவதில் நான் நம்பிக்கை கொண்டவன். எங்களுடைய இந்தச் சந்திப்புக்கள் நாளடைவில் ஞாயிற்றுக்கிழமை ஆராய்ச்சிக் கூட்டமாக மாறியது. இந்தக் காரணத்தால் மாணவர்கள் சமூக நல சங்கத்தின் தலைவர் பதவியை வகிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். மறுக்க முடியவில்லை; ஒப்புக் கொண்டேன்.

சங்கம் ஆரம்பித்த காலத்திலிருந்து கணக்கும், தடங்கல் எதுவும் இல்லாமல் வேலை விறுவிறு என்று நடந்து முன்னேறியதற்கு மூல காரணம் எங்கள் காரியதரிசி சகுந்தலாதான்.

சகுந்தலா ஆர்வம் நிறைந்த பெண். பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள். காலேஜில் எம். ஏ. வகுப்பு படித்துக் கொண்டிருந்தாள். நேர்மை, திறன், அறிவு யாவும் அமைந்த சகுந்தலாவிடம் எல்லோரும் அன்பு பாராட்டினார்கள். அவள் சொல்லை யாரும் தட்டுவது இல்லை. எவ்வளவு சிரமமான காரியமானாலும் அவள் தன்னுடைய சாமர்த்தியத்தால் நிறைவேற்றி வந்தாள்.

ஆறு மாதங்களுக்குப் பின்னால்தான் சகுந்தலாவின் வரலாறு எனக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரியவந்தது. அவளுக்கு ஏற்கெனவே கல்யாணமாகி விட்ட செதியும், அவள் கணவன் ஒரு சர்க்கார் உத்தியோகத்தில் இருப்பதும், இருவருக்கும் மன வேற்றுமை ஏற்பட்டதால் தகராறு ஆகிச் சென்னைக்கு வந்து சித்தி வீட்டில் தங்கி, அவள் படிப்பைத் தொடர்ந்து வருவதாகவும் கேள்விப் பட்டேன்.

மிகவும் வருந்தத்தக்க செய்தி. அறிவும் அதற்கேற்ற அழகும், குணமும் நிறைந்த ஒரு பெண்ணின் வாழ்க்கை இவ்வாறு சீர்கேடு அடையுமானால் அதற்கு யார் பொறுப்பாளி? இந்தக் கேள்வியை நானே கேட்டுக் கொண்டு அதன் காரணங்களைப் பற்றி ஆராயலானேன்.

* * *

எங்கள் சங்கம் முன்னேற்ற வேலைகள் செய்து வந்த கண்ணம்பேட்டை என்ற இடத்தில் சுமார் நூற்று ஐம்பது ஏழைக் குடும்பங்கள் வசித்து வந்தன.

அநேகமாய் எல்லோரும் கூலி வேலை செய்கிறவர்கள். மிகச் சிலர் கம்பெனிகளில் பியூன்களாக வேலை செய்தார்கள். நகர சபையில் கூலி வேலையில் ஈடுபட்டிருப்பவர்கள் சிலர். சர்க்கார் ஆபீஸ்களிலும் சிலர் பியூன்கள். ஆண்களைப் போல் பெண்களும் சம்பாதித்தார்கள். ஆனால் வயிறார உண்ண உணவு இல்லை, படுக்கப் பாய் இல்லை. பெரும்பாலோர் கந்தலைச் சுற்றிக் கொண்டிருந்தார்கள் என்று சொல்ல வேண்டுமே அன்றி உடை உடுத்திக் கொண்டிருந்தார்கள் என்று சொல்ல முடியாது. தலைக்கு மேலுள்ள கூரை வழியாகச் சந்திர சூரியர்களைப் பார்க்கலாம். மழை இலேசாகத் தூறி விட்டாலும் அந்த இடத்துக்குள் நுழைந்து செல்வது பெரும் பிரயத்தனமாக முடியும். எங்கும் துர்நாற்றம், சேறு சகதி. குட்டை குட்டையாகத் தண்ணீர் தேங்கிக் கொசுக்கள் வேறு உற்பத்தியாகிக் கொண்டிருக்கும்.

இங்கே சகுந்தலா தன் சேவைகளை ஒழுங்காகச் செய்து கொண்டிருந்தாள். அவளுடன் வேறு சுமவரும் சேவை செய்தாலும் அவளைப் போல் யாரும் அக்கறை காட்டவில்லை. வழக்கமாக இந்த மாதிரி சேவைக்குச் செய்யும் ஆரம்ப வேலைகளான ஒரு சிறு முதல் உதவி, ஆஸ்பத்திரி, இராப் பள்ளி இல்லாதவர்களுக்குத் துணி கொடுத்தல் முதலியனவைகளைத் தொடங்கினாலும், இதனால் அவர்களுக்கு நிரந்தர உதவி கிடையாது. அவர்களைச் சீர்திருத்துவதற்கு வழி என்னவென்பதை எங்கள் கூட்டத்தில் விவாதிக்கலானோம்.



இப்படிப்பட்ட ஒரு ஞாயிற்றுக் கிழமைக் கூட்டத்தில் நாங்கள் விவாதத்துக்கு எடுத்துக் கொண்ட விஷயம் கண்ணம்பேட்டையிலுள்ள குடும்பத்தில் ஏற்பட்ட தகராறு. சமூக சேவை செய்யப் போன நாங்கள் இந்தத் தகராறுகளில் தலையிடாமல் இருக்க முடியவில்லை. எப்படி இருக்க முடியும்? சமூக சேவை இந்த எல்லைக் கோட்டோடு முடிவடைகிறது என்று எப்படி வரையறுத்துக் கூற முடியும்? பரம்பரையாக இந்த மக்களின் இரத்தத்தில் ஊறிப் போயிருக்கும் ஏழைமையோடு தோழமை கொண்டிருக்கும் பொறுமை, அசுத்தம், பிடிவாதம், புறங்கூறல் முதலியவைகளையும் களைந்தெறிய வேண்டுமானால் எல்லா விஷயங்களிலும் தலையிட்டுத்தானே ஆகவேண்டும்? இந்த விஷயத்தில் நாங்கள் ஒன்றும் சொல்வதற்கில்லை. எப்படியும் போங்கள் என்று சொல்லிவிட முடியாமல், 'சரி இதற்கு ஒரு வழி காண்போம்' என்று சொல்லித் தகராறை ஒரு வாரத்துக்கு மட்டும் ஒத்தி வைக்கும்படி கேட்டுக் கொண்டோம். தகராறில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினரும் சரி என்று ஒப்புக் கொண்டார்கள்.

தகராறு இதுதான். கண்ணம்பேட்டையில் வசித்து வந்த கபாலி என்ற இளைஞனுக்கும் அங்கேயே இருந்த இன்னொரு குடும்பத்திலுள்ள சரோஜா என்ற பெண்ணுக்கும் இரண்டு வருஷங்களுக்கு முன் கல்யாணம் நடந்தது. கல்யாணம் நடந்த விவரத்தைச் சுருங்கச் சொல்லப் போனால் அது ஒரு காதல் கல்யாணம். கபாலியின் பெற்றோர்கள் இந்தக் கல்யாணத்தைத் தடுத்துவிட எவ்வளவோ முயன்றும் முடியாமல் போகவே, வேறு வழி எதுவும் இல்லாமல் கல்யாணத்தை நடத்தச் சம்மதிக்க வேண்டியதாயிற்று. சரோஜாவின் பெற்றோர்களுக்கு இந்தக் கல்யாணத்தில் விருப்பும் இல்லை, வெறுப்பும் இல்லை. ஊரில் ஏற்பட்டிருக்கும் கெட்ட பெயரை ஒழிக்க ஒரே வழி அவன் அவளைக் கல்யாணம் செய்து கொள்வதுதான் என்று முடிவுக்கு வந்து, கல்யாணத்தைச் சந்தோஷமாகவே நடத்தினர்.

ஆனால் கல்யாணம் நடந்தும் கபாலியின் அம்மாளுக்கு மருமகள் பேரில் பிடித்தம் ஏற்படவில்லை. காரணங்கள் பல.

முதலாவது காரணம் சரோஜா சீர் செனத்தி கொண்டு வரவில்லை என்பது. இந்தச் சீதன விஷயம் பணக்காரக் குடும்பங்களைத்



தான் ஆட்டிக் கொண்டிருக்கிறது என்று இல்லை. வீரனுக்குத் தக்க விக்கத்தைப் போல் எங்கும் தான் பரவியிருக்கிறது.

இரண்டாவது சரோஜா தங்கள் வீட்டில் காலடி எடுத்து வைத்ததிலிருந்து கபாலிக்கு வேலை வெட்டி கிடைக்கவில்லை என்பதால் அவள் அதிர்ஷ்டம் கெட்ட பெண்ணாகத்தான் இருக்க வேண்டும் என்பது. இது அண்டை அயலார் கண்டுபிடித்துக் கபாலியின் அம்மாவிடம் சொன்ன ரகசியம்.

இவ்வாறாக, நாளடைவில் கபாலியே சரோஜாவை வேண்டாத பெண்டாட்டி என்று எண்ணும்படியான நிலைமையில் கொண்டு வந்து விட்டு விட்டார்கள். இரு குடும்பத்துக்கும் தகராறு முற்றி விட்டது.

நிலைமையைச் சமாளிப்பது எப்படி என்பது எங்கள் சங்கத்தின் பிரச்னை.

சகுந்தலா விவாகரத்தை ஆமோதித்தாள். எப்பொழுது ஒரு பெண்ணுக்கும் ஆணுக்கும் எண்ண வேறுபாடு ஏற்பட்டு விட்டதோ, அதற்குப் பின் அவர்கள் வாழ்ந்தாலும் பிரயோசனமில்லை. முன்னைப்போல் ஒருமையோடு வாழ்வது முடியாத காரியம். ஆகவே கண்ணம்பேட்டையிலுள்ள பெருவாரியான நபர்கள் அபிப்பிராயப்படுவது போல் 'தீர்ப்புக் கொடுத்து'—கபாலி சரோஜாவை விலக்கிவிட வேண்டியதுதான் என்று தன் அபிப்பிராயத்தைச் சொன்னாள் சகுந்தலா. அன்று கூடியிருந்தவர்களில் இரண்டு மூன்று பேர்களைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் இதை ஆமோதித்ததாகவே தோன்றியது.

எங்கள் சங்கத்தில் அதிக ஆர்வம் கொண்டுள்ள நடராஜன் சகுந்தலாவை மிகத் தீவிரமாக ஆதரித்துப் பேசினான். குடும்ப பாரத்தை ஒரு பாரம் ஏற்றிய வண்டிக்கு ஒப்பிட்டுப் பேசினான்: "வண்டியில் பூட்டப்பட்ட மாடுகள் இரண்டும் ஒன்றுசேர்ந்து இழுக்கவில்லையானால் ஒருவண்டி எப்படிக் குறிப்பிட்ட இடத்துக்குப் போய்ச் சேரும்? ஆகையால் ஒரு நோக்குக் கொள்ளாத இருவரையும் பிரித்து விடுவதே சிறந்தது. இதனால் அவர்கள் இருவருக்கு மட்டும் அல்லாமல் கண்ணம்பேட்டையிலேயே சுமுகமான சூழ்நிலை ஏற்படும். அந்த ஊர் இரண்டு பட்டுக் கிடக்கிறது. இப்படியிருந்தால் முன்னேற்ற வேலைகள் ஒன்றும் முன்னேறாது!"

இவ்வளவுக்கும் நடராஜன் இளைஞன். நேற்றுத்தான் கல்லூரியிலிருந்து வெளியில் வந்து ஒரு கம்பெனியில் வேலைக்கு அமர்ந்திருக்கிறான். குடும்பத்தையும் அதன் பாரத்தையும் இன்னும் சரிவர உணராதவன். உலக அனுபவம் இல்லாதவன். ஏதோ புஸ்தகங்களில் படித்து விட்ட ஞானத்தைக் கொண்டு இவ்வாறு பேசுகிறானே அல்லாமல் வீண் விதண்டா வாதத்துக்காகப் பேசவில்லைதான். ஆனாலும் இந்த இளைஞர்களிடத்தில் கல்யாணத்தின் புனிதத் தன்மையையும் இல்வாழ்க்கையின் சிறப்பையும், கணவன் மனைவியரைப் பிரித்து விடும் இழி செயலையும் எவ்வாறு எடுத்துச் சொல்வதென்றே தெரியாமல் தயங்கினேன்.

கடைசியாக, சம்பந்தப்பட்ட இருவரிடத்தில் "அதாவது சரோஜா - கபாலியிடத்தில் பேசிப் பார்ப்பதற்கு ஒரு வார காலம் கொடுங்கள். இருவரிடத்திலும் பேசி அவர்கள் அபிப்பிராயங்களைக் கேட்டு விட்டு அடுத்த ஞாயிறன்று நம்முடைய முடிவைக் கண்ணம்பேட்டைவாசிகளுக்குச் சொல்லி விடலாம் என்று சொல்லிவிட்டுப் பல வருஷங்களுக்கு முன்னால் எனக்கு அறிமுகமான ஒரு கிராமத்தில் நடந்த விவாகரத்துக் கதையையும் சொன்னேன்.

எங்கள் பக்கத்தில் பூமேடு என்ற அழகிய குக்கிராமம். ஏறக்குறைய நூறு குடும்பங்களைக் கொண்டது. யாவரும் விவசாயிகள். இடைவிடாது பாடுபட்டுப் பலன் அடைபவர்கள். நல்ல பழக்க முள்ளவர்கள். இந்தச் சிற்றூரில் நல்லசாமிக் குடும்பம் ஒரு சிறந்த குடும்பம். நல்லசாமியின் மனைவி பூவம்மை. அவர்களுக்கு இரண்டே குழந்தைகள். பெருமாள் மூத்த மகன். தங்கம் என்ற பேருடைய ஒரு மகள்.

நம்முடைய கதையில் பெருமாள் கதாநாயகன். அவனுக்கு உரிய காலத்தில் பக்கத்து ஊரான நெல்லிமேட்டுக் கிராமத்திலிருந்து சேலா என்ற பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்தார்கள்.

சேலா அழகாக இருப்பாள். அதிகம் பேசத் தெரியாதவள். அவள் சுபாவமே அப்படி. தன் வேலையுண்டு தான் உண்டு என்று இருப்பவள். என்ன காரணத்தினாலோ மாமியாருக்குச் சேலாவை முதலிலிருந்து பிடிக்கவில்லை. இதனால் "மாமியார் உடைத்தால் மண் கலம், மருமகள் உடைத்தால் பொன் கலம்" என்றபடி சண்டை இடை இடையே வரலாயிற்று.

நல்லசாமியின் நல்ல குடும்பத்தில் இவ்வாறு சண்டைகள் நேர்வதை அவனால் சகிக்க முடியவில்லை. பூவம்மையிடம் அவன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான், சின்னஞ்சிறிசு, அவள் ஏதாவது தவறு செய்தால் அதைப் பெரிசு படுத்தாதே என்று. ஆனால் தங்கம் குடும்பச் சண்டைக்கு இடைவிடாது எண்ணெய் ஊற்றி வந்தாள்.

பெருமாள் சிறு வயதிலிருந்தே தாய் தகப்பனுக்கு அடங்கி வளர்ந்து வந்த பிள்ளை. அம்மா சொல்லுக்கு அப்புறம் இப்புறம் நகரமாட்டான். இந்தச் சண்டைகள் அவனுக்குத் தர்மசங்கடமான நிலைமைகளைக் கொடுத்து வந்தன. சேலாவிடம், 'அம்மாவுக்குப் பணிந்து போ' என்று புத்தி சொல்லி வந்தான். தான் ரொம்பவும் பணிந்து போவதாகவும் தாயும் மகளும்தான் சேர்ந்து கொண்டு தன்னைச் சண்டை பிடிக்கிறார்கள் என்றும் அழமாட்டாத குறையாகச் சொல்லுவாள். எப்பொழுதும் வேலையின் நிமித்தம் வயலிலும், வாய்க்காலிலும் நின்று கொண்டிருக்கும் பெருமாளுக்கு உண்மையை அறிய முடியவில்லை. குற்றம் யார் பக்கத்தில் இருக்கிறது என்பதை அறிய முயற்சி செய்தான்.

குடும்பச் சண்டையை நிறுத்த நிரந்தரமான வழி கண்டுபிடித்தாக வேண்டும் என்ற நிலை வந்தது. தான் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வேறாகப் போய்க் குடித்தனம் செய்தாலொழிய அந்தச் சண்டை ஓயாது என்ற முடிவு கட்டினான். தகப்பனிடம் தன் எண்ணத்தைத் தெரிவிக்கத் துணிவு இல்லை. தாயாரிடமும் சொல்ல முடியாது. அவனாக ஒரு

"என் வாழ்வின் ஒளி..."

"...என் பெருமை, என் இன்பம்"
என்றெல்லாம் கூறுகிறாள். தன் மகன்
பச்சிளம் பாலகனிலிருந்து உயரமான
வாலிபனாக வளர்ந்ததை அவள்
கவனித்திருக்கிறாள்.
உங்கள் பிள்ளைகள், உங்கள் பிள்ளைகளின்
பிள்ளைகள், அனைவருக்குமே நவீன வைத்
திய சாஸ்திர வளர்ச்சியின் மூலம் தேவை
யான பராமரிப்பும், பாதுகாப்பும் கிட்டி
யுள்ளன. அற்பமான நோய் என்று அலட்
சியமாக இருக்காமல், விவேகமுள்ள
நோயாளிபோல் உங்கள் வைத்தியரைக்
கலந்தாலோசியுங்கள். அவர் மூலம் உலக
விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ள அற்பு
தங்களின் பலனை நீங்கள் அடைவீர்கள்.
உங்கள் வைத்தியரின் தொழில் நுட்ப
அறிவும், நடைமுறை அனுபவமும் உங்க
ளுக்கு உதவும். நீங்கள் பின்பற்றவேண்
டியதொரு நல்ல வழக்கம்—

**உங்கள் வைத்தியரைக்**
**கலந்தாலோசியுங்கள்.**

அலெம்பிக் கெமிகல்
வொர்க்ஸ் கம்பெனி லிமிடெட்,
பரோடா-3



ACW 58-1A TM

யோசனை செய்து கொண்டான். கல்யாணம் செய்ததிலிருந்து தான் கொஞ்சம் பணம் சேர்த்து வைத்திருந்தான். அந்தப் பணம் சேலாவிடம் இருந்தது. சேலாவும் தன் கைக்குக் கிடைக்கும் ஒன்றிரண்டு காசுகளை அதோடு போட்டு வைத்தாள். அந்தப் பணம் ஒரு நூற்று ஐம்பது ரூபாய்க்குக் குறையாமல் இருந்தது. அதைக் கொண்டு மாட்டுச் சந்தையில் ஒரு ஜோடிக் காளைகள் பிடித்து வந்து, சட்டென்று தனிக் குடும்பத்தை ஆரம்பித்து விடத் தீர்மானம் செய்துவிட்டான்.

அன்று இரவு வீட்டில் சண்டை. பெருமாள் வந்ததும் அவனிடம் தாயாரும் மகளும் புகார் செய்தார்கள். "சரி! இனிமேல் இந்தச் சண்டையை நினைவிட முடியாதபடி செய்ய வேண்டும். கொஞ்சம் சும்மா இருங்கள், புண்ணியம் உண்டு" என்று சொல்லிவிட்டுச் சேலாவிடம் போய், "உன்னிடம் இருக்கும் பணத்தைக் கொடு" என்றான். வழக்கம் போல் மாறு ஒன்றும் பேசாமல் பையோடு பணத்தைக் கொடுத்தாள். அவள் மனசில் கலக்கம் ஏற்பட்டது. தன் நிலையை வாய் திறந்து சொல்ல முடியாமல் கண்ணீர் விட்டு அழுதாள். "ஒன்றுக்கும் கவலைப்படாதே. நான் ஒரு வாரத்துக்குள் வந்துவிடுவேன்" என்று ஆறுதல் சொல்லிவிட்டுச் சென்றான்.



ஜார்ஜ் ஓக்ஸ் ஸ்தாபனத்தின் டைரக்டரும் ஜெனரல் மானேஜருமான திரு கே. ஹரிஹரன் அவர்கள் தொழில் அபிவிருத்தி சம்பந்தமாக ஐரோப்பாவுக்கும் இங்கிலாந்துக்கும் சென்றிருக்கிறார்.

மறுநாள் காலையில் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் பெருமாள் மாட்டுச் சந்தையை நோக்கிப் புறப்பட்டுப் போய்விட்டான்.

இதை அடுத்துக் காரியங்கள் வேகமாக நடைபெறலாயின. சேலாவின் தகப்பனும் அவன் உறவினர்கள் இருவரும் அன்று மாலை பூமேட்டுக் கிராமத்துக்கு வந்து, ஊர்ப் பெரிய தனக்காரரை அடுத்துச் சேலாவைக் கொண்டவிட்டார் மிகவும் கொடுமைப் படுத்துவதாகவும் அதற்கு ஒரு முடிவு செய்யவே தாங்கள் வந்திருப்பதாகவும் அறிவித்தார்கள்.

பெற்ற பாசம்தான் அவ்வாறு செய்யத் தூண்டியது, சேலாவின் தகப்பனை. அன்று இரவு ஊர்ப் பஞ்சாயத்து கூடிற்று. தங்களிடம் ஒன்றும் சொல்லாமல் ஊர்ப் பெரிய தனக்காரரிடம் சேலாவின் தகப்பன் பிராது செய்ததையும் பஞ்சாயத்து கூட்டியதையும் நினைத்து நல்லசாமியும் பூவம்மையும் சீறி எழுந்தார்கள்.

பஞ்சாயத்தில் சேலா தங்கள் வீட்டுக்கு வந்த நாளிலிருந்து செய்த குற்றங்கள் அனைத்தையும் வரிசைப்படுத்திக் குறைசொன்னார்கள். இனிமேல் ஒரு நிமிஷங்கூடத் தங்கள் வீட்டில் அவள் இருக்கக் கூடாதென்றும், அவளுக்கு உண்டான தீர்ப்பை அப்பொழுதே கொடுக்கச் சித்தமென்றும், அவள் வீட்டில் இருக்கும் வரையில் தங்கள் மகன் வீட்டில் காலடி எடுத்து வைக்க மாட்டேன் என்று சொல்லிவிட்டுப்போய்விட்டதாயும் ஒரு பெரிய பொய்யையும் சொன்னார்கள்.

பஞ்சாயத்தார் தீர்ப்புக் கொடுக்க வேண்டிய ஒரு வழக்குத்தான் அது என்று அபிப்பிராயப் பட்டார்கள்.

தன் மகள் கஷ்டப்பட்டுக் கொண்டு அந்த வாழ்க்கையை நடத்த வேண்டாமென்று எண்ணித் தீர்ப்பை வாங்கிக் கொள்ளத் தயார் என்று சொன்னான் தகப்பன்.

விவரித்து ஒன்றும் சொல்லத் தெரியாத சேலா தன் எண்ணங்களைக் கண்ணீராகக் கொட்டினாள்.

பஞ்சாயத்து வழக்கைத் தீர்த்து விட்டது: சேலாவுக்கும் பெருமாளுக்கும் இனித் தொந்தமில்லையாம்!

இப்படியாகச் சம்பந்தப் பட்ட தம்பதிகள் சம்மதமில்லாமல், ஆற அமர யோசியாமல் திடீரென்று ஏற்பட்ட ஒரு கொந்தளிப்பைச் சமாளிக்க விவாகரத்தைச் செய்து விடுவது எவ்விதத்திலும் அறிவுடைமையாகாது. விவாகரத்தைப் பற்றித் தீர யோசிப்பதற்காகவே நம்முடைய பெரியோர்கள் பெண் அல்லது பிள்ளை கேட்பதையும், நிச்சயப் படுத்துவதையும் விரிவான சடங்குகளாக அமைத்திருக்கிறார்கள். முதலிலேயே ஆர அமர யோசித்துச் செய்ய வேண்டிய காரியம் திருமணம் அல்லவா?" என்றேன்.

"சரி! நீங்கள் சொல்லுவது போல் ஒரு வாரம் கழித்து மீண்டும் பேசுவோம். இதற்கிடையில் நீங்கள் அந்த இருவரிடமும் பேசிப் பாருங்கள்" என்றான் நடராஜன்.

நான் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தேன். எப்படியும் சரோஜா—கபாலி விவாகரத்தைத் நிறுத்தி விடலாம் என்ற உறுதியே எழுந்தது.

மூன்று நாட்கள் கழித்து ஒரு நாள் மாலை சகுந்தலா என்னைக் காண வந்தாள்.

"ஏன் சகுந்தலா, இன்று கண்ணம்பேட்டைக்குப் போகவில்லையா?" என்றேன்.

"போகவில்லை. போன ஞாயிற்றுக்கிழமையிலிருந்து என் மனம் சரியில்லை. இரண்டு நாட்களாகவே உங்களைப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம்."

"ஏன் என்ன விஷயம்?"

"ஒன்றுமில்லை. அந்தச் சேலாவின் குறைக் கதையையும் கேட்க வேண்டும் என்பதுதான். அவள் புருஷன் வந்த பின்னர் என்ன நடந்தது? அதை நான் கேட்க வேண்டும்."

"ஓ அதுவா? அதற்கப்புறம் எவ்வளவோ நடந்தது. மனிதர்கள் ஆற அமர யோசியாமல் ஒரு காரியத்தைச் செய்து விடுவதன் கொடுமையை என்னவென்று சொல்வது."

"நீங்கள் அந்தச் சேலாவின் கதையைச் சொன்னதிலிருந்து சேலாவின் பரிதாப

நிலையை எண்ணி எண்ணி வருந்தினேன். அதற்கு மேல் அவன் நிலை என்ன ஆயிற்று என்று அறியத் துடிக்கிறது என் மனம்.''

''சகுந்தலா உன் மனம், உண்மையான பெண் மனம். அதனால் இவ்வாறு துடிக்கிறாய். உட்கார். முழுக் கதையையும் சொல்லி விடுகிறேன்'' என்று சொல்லிச் சோபாவில் அமரச் செய்தேன்.

''இந்தக் கட்டத்தில்தான் நான் இந்தக் கதையில் சம்பந்தப் படுகிறேன்.

எங்கள் குடும்பத்துக்கும் பெருமாள் குடும்பத்துக்கும் நெருங்கிய அறிமுகம் உண்டு. பூமேட்டுக்கு அருகிலுள்ள எங்கள் வயலை எங்கள் பாட்டனார் காலத்திலிருந்தே அவர்களுக்குத்தான் குத்தகைக்கு விட்டிருந்தோம். பல வருஷங்கள் அவர்கள் கையிலேயே நிலம் இருந்தது. நில வளப்பத்தைக் குறையாமல் பார்த்துக் கொண்டதால் அதை இன்னொருவரிடம் குத்தகைக்கு விட எங்களுக்கு மனம் வரவில்லை.

அப்பொழுது நான் கோடை விடுமுறைக்கு ஊருக்குப் போயிருந்த சமயம் இரவு பதினொரு மணிக்கு மேல் வந்து எங்கள் வீட்டுக் கதவைத் தட்டினான். இவ்வளவு நேரம் கழித்து வந்து கூப்பிட வேண்டிய அவசியம் என்ன என்று விசாரித்தேன்.

பெருமாள் நடந்த விஷயத்தைச் சொல்லி எது எப்படிப் போனாலும் அக்கினி சாட்சியாகத் தாலி கட்டிய மனைவியை அவன் விட்டு விடப் போவதில்லை என்றும், அவள் சாதாரண மனுஷப் பிறவி இல்லை என்றும், தெய்வப் பிறவி என்றும் கூறினான்.

''உன் தாயுடனும் தங்கையுடனும் ஒத்துப் போகாமல் இவ்வளவு சண்டை சச்சரவுக்குக் காரணமாக இருந்த அவளை எப்படித் தெய்வப் பிறவி என்று சொல்லுகிறாய்?'' என்று நேரடியாகக் கேட்டேன்.

''அவள் தெய்வப்பிறவி என்பதை உங்களிடம் விளக்கிச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் அவள் தெய்வப் பிறவி என்பது எனக்குத்தான் தெரியும்'' என்றான். அவன் பேச்சில் அசைக்க முடியாத உறுதி தொனித்தது.

''தீர்ப்பு கொடுத்த பஞ்சாயத்துக்காரர்கள் மீண்டும் அவர்களைக் கணவன் மனைவியாக வாழ விட மாட்டார்கள். தெய்வ சம்மதத்தோடு தாலி கட்டிக் கொண்டவளைப் பிரிக்க மனிதர்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்பது பெருமாளுடைய வெகு நியாயமான கேள்வி. திருமணத்தின் புனிதத் தன்மை சாதாரண விவசாயியான பெருமாள் அறிந்து கொண்டதற்காக அவனுக்கு எந்த வழியிலும் உதவிசெய்யச் சித்தமானேன். எனக்குப் பட்டவழி ஒன்றுதான்.

''பெருமாள்! இதோ எங்கள் தோட்டத்தில் வேண்டிய இடம் இருக்கிறது. நீயும் உன் மனைவியும் நல்ல வீடு கட்டிக்கொண்டு சுகமாய் வாழுங்கள். உங்களுக்கு வேண்டிய உதவியை நான் செய்கிறேன் என்றேன். உங்களைக் கண்டிக்கவோ, துன்புறுத்தவோ யாராலும் முடியாது. அப்படி ஏதாவது நேர்ந்தால் சட்டம் மூலம் நான் பாதுகாப்பு அளிப்பேன்'' என்று உறுதி அளித்து எங்கள் தோட்டத்தில் இடமும் கொடுத்தேன். சேலாவும் பெருமாளும் குழந்தைகுட்டிகளோடு பெருகி வாழ்ந்து வருகிறார்கள். பூமேட்டு வாசிகளும் அவர்களோடு வந்து உறவாடுகிறார்கள்.''

இவ்வாறு சேலாவின் கதையை முடித்தேன்.

''அப்பாடா! நல்லவிதமாகவே முடிந்தது. தாங்கள் மட்டும் அப்படி உதவி செய்திருக்காவிட்டால் அவர்கள் கஷ்டப்பட்டிருப்பார்கள்'' என்று கூறினாள்.

அதுதான் இல்லை. நான் உதவி செய்திராவிட்டாலும் பெருமாள் சேலாவைக் கைவிட்டிருக்கவே மாட்டான். ஏனெனில் அவள் மண்ணில் பிறந்த மாணிக்கம். சேலா நம் பண்பாட்டின் வழி வந்த தெய்வ மகள். உலகமே ஒன்று சேர்ந்தாலும் அவர்களைப் பிரிக்க முடியாது.

சகுந்தலா மீண்டும் ஒரு பெருமூச்சு விட்டாள். அவள் முகத்தில் முத்தன்ன வேர்வைத் துளிகள் அரும்பியிருந்தன.

''நான் வருகிறேன்'' என்று சொல்லி விட்டு வேகமாய்ப் போய் விட்டாள்.

சரோஜா—கபாலி விஷயமாய் நான் நினைத்திருந்தபடியே ஆயிற்று. கபாலியை நான் அழைத்து அவனுக்கு ஒரு நல்லவேலை பார்த்து வைக்கிறேன் என்று சொன்னவுடனேயே தான் சரோஜாவைப் பிரிவதில்லை என்றும் அவளோடு செட்டாகக் குடித்தனம் செய்வதாயும் என்னிடம் உறுதி கூறினான். அப்படியே சரோஜாவும் விளையாட்டுப் புத்தியோடு இராமல் பொறுப்பு வாய்ந்த மனைவியாக நடப்பதாக உறுதி கூறினாள். கண்ணம்பேட்டைக் கலவரம் இருந்த இடம் தெரியாமல் பறந்து போயிற்று. முன்னேற்ற வேலைகள் சரளமாய் முன்னேற ஆரம்பித்தன.

ஆனால் எதிர்பாராத இன்னொரு விஷயம் எங்கள் எல்லோரையும் திடுக்கிடச் செய்தது. கண்ணம்பேட்டை முன்னேற்ற வேலையைத் தனக்கு உதவியாக இருந்த மற்றொரு மாணவியிடம் ஒப்படைத்து விட்டுச் சங்கத்தில் யாரிடமும் சொல்லாமல் போய்விட்டாள் சகுந்தலா.

எல்லோரும் அவள் செயலை நினைத்து ஆச்சரியம் அடைந்தார்கள். சகுந்தலாவின் அழகிலும், புத்தியிலும், சாதுரியத்திலும் மயங்கி வண்டைப்போல் அவளைச் சுற்றிச் சுற்றி வந்த நடராஜன் அடைந்த ஏமாற்றத்தை வெளிக்குக் காட்டவில்லை. நானும் அவர்களோடு சேர்ந்து ஆச்சரியப்படுவது போல் பாவனை செய்தேன். அப்படி ஆச்சரியப் படாததற்குக் காரணம் தபால் மூலம் அவள் அனுப்பிய கீழ்க்கண்ட கடிதம்தான் :

அன்புள்ள தலைவர் அவர்களுக்கு,

நீங்கள் சொன்ன சேலாவின் கதை உண்மையில் நடந்ததேயில்லை ; நீங்களாகக் கற்பனை செய்து சொன்னதுதான் என்பது என் அபிப்பிராயம். ஆனால் அது நடக்காத கதை என்று எந்த ஆதாரத்தைக் கொண்டு நான் முடிவு செய்வது? உங்கள் கதாநாயகர்களைப் போலவே கபாலியும் சரோஜாவும் மீண்டும் இணைந்து கொண்டார்கள். இந்தக் கதை சரோஜா—கபாலிக்காகவே இல்லை. எனக்காகத்தான் என்பதை நான் கண்டு கொண்டேன். என் மனம் உங்கள் கதையால் மாறுதல் அடைந்து விட்டது.

இங்ஙனம், தங்கள் பேரன்பை மறவாத,
சகுந்தலா

# நாட்டு வைத்தியம்

— ஸ்ரீ ஹரி —

## 122. மற்றுஞ் சில (காது விஷயம்)

வில்வத்தின் வேரிலிருந்து எடுக்கும் கடாத் தைலம் செய்யும் விதத்தைப் பற்றிச் சென்ற வாரத்தில் கூறினேன். இன்னும் சில வகை கடார்த் தைலங்களும் இருக்கின்றன. அவற்றையும் பார்க்கலாம்.

தேவதாரு என்னும் கட்டையிலிருந்தும், சிற்றாமல்லி, பேராமல்லி இவற்றின் வேர்களிலிருந்தும், ஜாதிக் கோஷ்டம் என்னும் கடைச் சரக்கிலிருந்தும் முன்னையின் வேரிலிருந்தும் தனித்தனியாக வில்வ வேருக்குச் சொன்ன விதத்தில் தயாரித்த கடார்த் தைலங்களை உபயோகிக்கலாம்.

முருங்கை மரம் எல்லோருக்கும் தெரிந்ததுதானே! இதன் பிசின்கூட இவ்வகையில் உபயோகமாகும். பேரொழுக்கெடுத்தோடும் சீழில், இப்பிசினை இட்டுக் காய்ச்சிய எண்ணெயில் ஒன்றிரண்டு சொட்டு விட்டாலும் சீழ் ஒழுக்கு நின்றுவிடும்.

“ஆமாமய்யா! சரீரத்தில் வாத பித்த கபம் என்ற தோஷங்களுண்டே, அவைகளின் சமநிலை கெடுவதால்தான் சரீரத்தில் ரோகமே ஏற்படுவது. இப்படியல்லவா நமது சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றன.”

“ஆமாம். அப்படியேதான்.”

அப்படியானால் இதுவரையில் காது விஷயமாகச் சொல்லி வந்த தகவல்களில் இந்த வாத பித்த கபங்களைப் பற்றிப் பிரஸ்தாபமே வரவில்லையே. ஒருகால் சரீரத்தின் தோஷங்களுக்கும் இந்தக் காது விஷயத்துக்கும் ஒரு சம்பந்தமுமில்லையோ என்று எண்ண இடம் இருக்கிறதே. நிர்த்தோஷமான மனுஷ்யராய் இருந்து விடுவது மிகவும் விரும்பத் தக்கதுதான். ஆனாலும், காதில் ஏற்படும் ரோகங்கள் மட்டும் பொது விதிக்கு விலக்கானவை யாகாது. இப்படி ஏற்பட்டால் வாதத்தினால் என்றும், அப்படி ஏற்பட்டால் கபத்தினால் என்றும், வீணாக சாஸ்திரத்தை இழுத்து நேயர்களின் காதைத் துளைத்து, ஒரு தலைவலியை உண்டாக்கி மனத்தில் ஒரு விஷயமும் படியாத ஒரு குழப்பத்தை உண்டுபண்ணுவதால் என்ன லாபம்? வாதமானா லாகட்டும், பித்தமானாலும் ஆகட்டும், இன்ன குறிகள் உள்ள இடத்தில் இன்ன சிகிச்சையைச் செய்தால் போதும் என்ற தகவலை மட்டும் கொடுத்தால் போதுமல்லவா? அப்படியானால் ..

காதில் ஒரு வலி ஏற்படும். அத்துடன் ஓர் எரிச்சலும் இருக்கும். காதின் வழியாக நீராவியோ அல்லது புகை போய்க்கொண்டே இருப்பது போல் ஒருவித உஷ்ணமும் இருக்கும். இது மட்டுமா? காதின் சுற்றுப்புறத்திலெல்லாம் ஓரளவு வீக்கமும் இருக்கும். இந்த வீக்கமுள்ள பிரதேசமும் தொட்டால் சூடுள்ளதாயிருக்கும். நோவும் எரிச்சலும் படாத பாடு படுத்திவிடும். இந்நிலையிலுள்ளவருக்கு தாபஸ்வேதப் செய்ய முடியுமா? முடியாது. செய்யவுங் கூடாது. ரத்த வாதத்தில் சொன்னது போலவேதான் இங்கும் சீதமானதும் நெய்ப்புள்ளதுமான சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். இதற்கு மதுயஷ்டியாதி தைலம் மிகவும் பலன் தரும் ஒரு சிறந்த மருந்தாகும்.

ஐந்து பலம் அதிமதுரத்தை இடித்து இரண்டு படி ஜலத்தில் ஒருநாள் ஊற வைத்திருத்தல் வேண்டும். மறுநாள் இதைக் காய்ச்சிக் கால்பாகமாக [அரைப்படியாக]ச் சுண்டின பிறகு இறக்கி ஆறின பிறகு மருந்தைக் கசக்கிப் பிழிந்து கஷாயத்தை வடிகட்டிக் கொள்ளவும்.

இக்கஷாயத்துடன் 10 பலம் நல்லெண்ணெயும், அரைப்படி பசுவின் பாலும் சேர்த்துக் கொள்ளவும். இதில், அதிமதுரம், அருகம்புல், சந்தனம், வெட்டிவேர், வெள்ளிலோத்திப் பட்டை, தாமரையின் கிஞ்ஜில்கம், மஞ்ஜிட்டி, நன்னாரி வேர் ஆகியவற்றை வகைக்கு அரைத்தோலா வீதம் எடுத்து வெண்ணெய்போல் அரைத்துக் கல்கமாகச் சேர்த்துக் கரைத்துக் கொள்ளவும்.

யாவற்றையும் மேற்சொன்னவிதம் சேர்த்துக்கொண்ட பிறகு அடுப்பிலேற்றித் தைலமாகக் காய்ச்ச வேண்டும். இதில் கல்கமானது மெழுகு பதத்துக்கு [எடுத்துப் பார்த்தால் திரட்டும் விரல்களில் ஒட்டிக் கொள்ளாமல் திரிபோல்] வந்துள்ள நிலையில் இறக்கித் தைலத்தை வடிகட்டிக் கொள்ளவும்.

இதற்குத்தான் மதுயஷ்டியாதி தைலம் என்று பெயர். இதைக் காதில் விடுவது.. வாய் கொப்பளிக்க உபயோகிப்பது. வீக்கமுள்ள இடங்களில் மேலே சொட்

டச் சொட்டப் பூசுவது. தலைக்கும் உச்சியிட்டு ஊறுவது என்ற விதத்தில் உபயோகித்தால் மேலே விளக்கிய இனத்தைச் சேர்ந்த காது நோய் குணமாகும்.

இத்தைலத்தை உண்டாக்க நாலு நாட்களாவது பிடிக்குமே. அதுவரையில் இந் நோயை எப்படிப் பொறுத்துக் கொண்டிருப்பது என்று கேட்கிறீர்களா? அதற்கும் ஓர் உபாயமுண்டு. தாற்காலிகமாகத் தினந்தோறும் காலை மாலை இரண்டு வேளையும் சில துளிகள் நல்ல தேனைக் காதில் விட்டுப் பஞ்சினால் மூடினால் போதும். வலி, எரிச்சல், வீக்கம் ஆகியவை குறையும். அதற்குள் மேலே சொன்ன தைலத்தைக் காய்ச்சிவிடலாம்.

சிலருக்கு முதன்முதலில் தலையின் ஒரு பாகத்தில் குத்து வலியுண்டாகும். இதைத் தொடர்ந்து 'திம்'மென்று காது அடைபட்டது போன்ற உணர்ச்சி ஏற்படும். காதின் சுற்றுப் புறத்தில் ஒரு கனமும் ஏற்படும்.

என்னமோ ஒரு மொத்தைக் களிமண்ணைக் காதுப் புறத்தில் அப்பியது போல் கனமும் அருவருப்பும் தோன்றுகிறது. கையினால் வழித்தெடுத்துக் களைந்துவிடலாமா என்று தோன்றுகிறது என்று சொல்லுவார் இவ்வகைக் காது நோய்க்கு இலக்கானவர். இப்படியாக ஏற்படும் உபாதைகள் நாளொரு வீங்கம் பொழுதொரு கனமுமாகப் பெருகிப் பெருகிக் கடைசியில் காதிலிருந்து ஒரு வகை நீர் கசிய ஆரம்பிக்கும். பிறகு ஒன்றன்பின் ஒன்றாகப் பல உபத்திரவங்கள் ஏற்படும்.

இவ்வகைக் காது நோயின் ஆரம்ப நிலையில் முன்னொரு கட்டுரையில் சொன்ன நாபஸ்வேதம் பயன் தருவதாகும். இதுவல்லாது காதில் விட ஒரு மருந்தை உபயோகிக்கலாம்.

அரச மரத்தின் இலை, வில்வத்தின் இலை, எருக்கின் இலை, ஆமணக்கின் இலை இவற்றைச் சமன் எடையில் எடுத்து அரைத்து ஒரு கிச்சிலிக்காய் அளவுக்கு உருட்டிக் கொள்ளவும். இத்துடன் வறுத்துப் பொடித்த இந்துப்பின் சூர்ணம் ஒரு சிட்டிகையளவும் ஒரு டீஸ்பூனளவு நல்லெண்ணெயும் சேர்த்துக் கொள்ளவும்.

இவ்வுருண்டையை ஓர் ஆமணக்கின் இலையில் வைத்துப் பொதிந்து நூலினால் சுற்றிக் கட்டிக் கொள்ளவும். இப்பொட்டலத்தின்மேல் ஒரு விரல் கனம் களிமண்ணைப் பிசைந்து பூசிச் சிறிது நிழலிலேயே உலர்த்திக் கொள்ளவும். மேல் வாரியாக ஈரம் சிறிது உலர்ந்த பிறகு இக் கோளத்தைப் புகையில்லாத தணல் தீயின் மேலிட்டுச் சூடாக்கவும். மேற்பூச்சான மண் காய்ந்து சிறிது கீறல் விழுந்து வெடிக்கும். உடனே கோளத்தைத் தீயிலிருந்து எடுத்து, மண்ணைத் துரிதமாகக் களைந்து, உள்ளே இருக்கும் அரைப்பு மருந்தை ஒரு சீலையிலிட்டுப் பிழியவும். எடுக்கும் போதும் பிழியும் போதும் சிறிது சூடாகத்தான் இருக்கும். பொறுக்க முடியாத சூடு இராது. ஆறிப் போன பிறகு இது பலன் அளிக்காது. ஆகவே சிறிது சூட்டைப் பொருட்படுத்தாமல் பிழிந்தெடுத்ததைச் சில துளிகள் காதில் விட்டுப் பஞ்சினால் மூடவும். ஒரு சில தினங்களில் குணமாகிவிடும். பிற்காலத்தில் மிகப் பிரமாதமான சிகிச்சைகளைப் பெற வேண்டிய அவசியமும் கடுமையான பத்தியங்களை அனுசரிக்க வேண்டிய தொல்லையும் ஏற்படாது. இந்தத் தயாரிப்பு முறையைப் புடபாகஸ்வரஸம் என்பர்.

சிலருக்குச் சாதாரண ஜலதோஷம்—சளி—இருமல் என்று இப்படி ஓர் உபாதை உண்டாகும். இது என்ன ஜலதோஷந்தானே? என்று உபேக்ஷித்தும் விடலாம். அல்லது செய்யும் சிகிச்சைக்குக் கனிசமான குணமேற்படாமல் உபாதைகள் தொடர்ந்து நீற்கவும் செய்யலாம். இந்த ஜலதோஷத்தின் கீழ்க் கன்றுபோல் காது மந்தம், காது குத்தல், காதில் ஒருவித நமைச்சல் என்று இப்படிச் சில உபாதைகள் ஏற்படலாம். இவற்றையும் பொருட்படுத்தாமல்தான் இருப்பர். சாதாரணமாக எல்லோருமே அவ்விதந்தான். விசேஷமாக இவ்வுபாதைகளைப் பற்றிக் கவனஞ் செலுத்த வேண்டிய அளவுக்கு இவற்றின் உபத்திரவமும் இராது. ஆகவே இவற்றை உபேக்ஷிப்பது சகஜந்தானே! இப்படிச் சில நாட்கள் சென்ற பிறகு காதின் உபாதை ஒரு படி முன்னேற்ற மடையும். அப்போது காதிலிருந்து வெளுத்த சீழ் போன்ற திரவம் கசியத் தொடங்கும். இது மிக்க துர்க்கந்த முள்ளதாயிருக்கும். திரவத்தின் கசிவு ஒழுக்காகி ஒழுக்கு பெருக்காகி, பெருக்கு பெரு வெள்ளமாகும். இப்படித்தான் ஆரம்பத்தில் கவனிக்காத குற்றத்தால் பெரிய விபத்துக்கள் விளைவது.

இதற்கு 1 பூண்டு, இஞ்சி, முருங்கைக் கொழுந்து இவற்றின் ரஸத்தைக் காதில் சில துளிகள்விட்டுப் பஞ்சினால் மூடலாம். மருதாணியின் வேரின் ஸ்வரஸம், முள்ளங்கியின் ஸ்வரஸம் இவையும், வாழைக் கிழங்கின் ஸ்வரஸத்தைச் சூடாக்கிச் சில துளிகளும் அவ்விதமே உபயோகிப்பது நல்லது. (தொடரும்)

# உலகச் சாம்பியன்கள் தேர்ந்தெடுப்பது



# பயர்ஸ்டோன்

## ...நீங்களும் அதையே தேர்ந்தெடுங்கள்

ஏனென்றால்—உலகத்தின் தலைசிறந்த மோட்டாரோட்டப் பந்தயங்களில், ஒரு டயர் கூட பழுதுபடாமல், ஆபத்தான நெளிவு சுளிவுகளுக்கும் அசுர அதிர்ச்சிகளுக்கும் கடுங் கொதிப்புக்கும் ஈடுகொடுத்து பயர்ஸ்டோன் டயர்கள் தமது பாதுகாப்புத் தன்மையை ஆண்டுதோறும் நிரூபித்து வருகின்றன. உங்களுக்கும் அத்தகைய பாதுகாப்பையும் நம்பிக்கையையும் அளிப்பவை பயர்ஸ்டோன் டயர்கள். ஏனெனில், உங்கள் மோட்டாருக்கான டயர்களின் தயாரிப்பிலும் ஓட்டப் பந்தய டயர்களிலுள்ள அதே பாதுகாப்புத் தரும் அம்சங்கள் பொருந்தியிருக்கின்றன. பயர்ஸ்டோன் டயர்கள் அளிக்கும் சிறந்த பாதுகாப்பு செயலில் நிரூபிக்கப்பட்டது.

ஸவுத் கரோலினாவிலுள்ள டார்லிங்டன் என்னுமிடத்தில் நடைபெற்ற ஒன்பதாம் வருடத்திய 500 மைல் மோட்டாரோட்டப் பந்தயத்தில் முதன்மையாக வெற்றி பெற்றவரான க்ளென் ராபர்ட்ஸ், அப் பந்தய ஓட்டத்தில் 121 டிகிரி உஷ்ணத்தை எதிர்த்து நிற்க வேண்டியிருந்த பயர்ஸ்டோன் டயர்களே தமது அற்புத சாதனைக்கு அடிகோலியதென்று கூறுகிறார்.

# Firestone

## பயர்ஸ்டோன்

### நியூ டீலக்ஸ் சாம்பியன்

டியூப் இல்லாதது அல்லது டியூப்புள்ளது






W.



# நடுவில் வந்தவள்

## ரவீந்திரநாத் டாகூர்

நிவாரணனுடைய குடும்ப வாழ்க்கை சாதாரண வகையைச் சேர்ந்ததே. பெயருக்குக்கூட அதில் காவிய மணம் திகழவில்லை. வாழ்வில் இத்தகைய உணர்வுக்கு அவசியம் இருப்பதைப் பற்றி அவன் சிந்திக்கவே இல்லை. பழகிப்போன பழைய செருப்புக்குள் கவலை எதுவுமின்றிக் காலை நுழைப்பது போல், பழைமையான இவ்வுலக விவகாரங்களில் தனக்குரிய இடத்தை நிவாரணன் ஏற்றிருந்தான். இத்தகைய வாழ்வைப் பற்றி மருளோ, சிந்தனையோ, தத்துவப் போக்கான ஆராய்ச்சியோ அவன் கொள்ளவில்லை.

காலையில் எழுந்ததுமே, நிவாரணன் தெரு ஓரமாக, வீட்டு வாசலில் திறந்த உடம்புடன் வீற்று எதிலுமே அக்கறை இராது. உக்காவிலிருந்து புகை இழுத்துக் கொண்டிருப்பான். தெருவில் மனிதர் போவதும் வருவதும் குதிரை வண்டிகள் செல்வதும், வைஷ்ணவப் பிச்சைக்காரி பாடுவதும், பழைய புட்டிகளை வாங்குபவன் உரத்த குரலில் கூவுவதுமாகக் காட்சிகள் விரையும். நிவாரணனுடைய நினைவில் இலை மேலோடுதான் படியும். மாங்காய் அல்லது கெண்டை மீன் விற்பவர் வந்தால் வீட்டில் சற்றுப் பரபரப்பு சூழும்; அன்று பலமான சாப்பாட்டுக்கான ஏற்பாடுகள் நடக்கும். உக்கா பிடிக்கும் படலம் ஆனதும் நிவாரணன் உரிய வேளையில் உடலில் எண்ணெயைத் தடவிக்கொண்டு குளித்தானதும் சாப்பிட உட்காருவான். அதன் பின்னர் கயிற்றுக் கொடியில் தொங்கும் நிஜாரை எடுத்துப் போட்டுக்கொண்டு வெற்றிலையுடன் ஒரு சிட்டிகை வாசனைப் புகையிலையை வாயில் அடக்கிக் குதப்பிய வண்ணம் ஆபீசுக்குக் கிளம்பிப் போவான். மாலைப் பொழுது ஆபீஸிலிருந்து திரும்பியதும், அருகில் உள்ள ராமலோசன கோஷின் வீட்டுக்குச் சென்று பொழுதைப் போக்கியதும் தன் இடத்துக்கு வந்து இரவுச் சாப்பாடு ஆனதும் மனைவி ஹரசுந்தரியைப் பள்ளியறையில் காண்பான்.

அங்கு உலக விஷயங்களைப் பற்றிய பேச்சுக்கள் எத்தனையோ எழும் — மித்திரர்கள் வீட்டு விவாகத்தில் நடந்த சுமங்கலிப் பிரார்த்தனை; புதிதாக வந்திருக்கும் வேலைக்காரியின் அலட்சியம்; காய் வகைகளை வேக வைத்தல் நல்லதா, அப்படியே எண்ணெயில் கொஞ்சம் இட்டு வாட்டுவது நல்லதா-இது போன்ற பிரச்னைகள்தாம். இதுவரையில் எந்தக் கவிஞனும் இவற்றை வைத்து ரசமான செய்யுட்களை ஏன் எழுதவில்லை என்பதைப் பற்றி நிவாரணன் தன் மூளையைக் குழப்பிக் கொள்ளும் ஆளன்று.

இதற்கிடையில் பங்குனி மாதம் வந்தது. ஹரசுந்தரி பெரும் காய்ச்சலில் படுத்தாள். அவளை வாட்டிய ஜுரம் இலேசில் விடவில்லை. டாக்டர் தந்த கொய்னா சூரணத்தினால் சற்று மட்டுப்பட்டாலும், மருந்து நின்றதும் அடைபட்டிருந்த வெள்ளம் போல் காய்ச்சல் மேலுக்கு மேல் ஏறத் தொடங்கும். இருபது நாட்கள், அல்லது நாற்பது நாட்கள் வரை அடித்துத் தீர்த்துவிடும்.

அன்று நிவாரணனுக்கு ஆபீசு இல்லை; விடுமுறை. ராமலோசனனுடைய வீட்டில் நடக்கும் மாலைவேளை சபைக்கு அவன் போய்ப் பல நாட்களாயின. என்ன செய்வதென்று அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. நோயுற்றிருக்கும் மனைவியின் அறைக்குச் சென்று அவள் நிலையைக் கவனித்து விட்டு வருவான் ஒரு முறை. வெளி வராந்தாவில் உட்கார்ந்து உக்காவை வாயில் வைத்துச் சிந்தனையில் ஆழ்ந்திருப்பான் ஒரு முறை. டாக்டர்களை விட்டு, நாட்டு வைத்தியர்களைக் கொண்டு மனைவிக்கு அவன் பரீட்சை செய்யாத மருந்தே இல்லை எனலாம்.

அன்பின் மிகுதியால் இவ்வாறு தாறுமாறான சிகிச்சை செய்ததன் பயனாய் நாற்பதே நாட்கள் ஹரசுந்தரியைப் பிடித்த காய்ச்சல் விலகியது. ஆனால் அவள், உடல் மெலிவுற்றுப் பலவீனமாகிவிட்டாள். யாராவது கூப்பிட்டால், அவள் எங்கோ தொலைவிலிருந்து பேசுவது போல் அவ்வளவு ஈனக் குரலில், 'இதோ இருக்கிறேன்' என்று பதில் தருவாள்.

வசந்த காலம்; தென்றல் மெல்ல வீசிக் கொண்டிருந்தது. இரவுகளில் வெண்மையான நிலவு ஒளிரும் பொழுது மட நல்லாருடைய திறந்த பள்ளியறையினுள் மெல்லக் கால் வைத்து மந்தமாருதம் எட்டிப் பார்க்கும். ஹரசுந்தரியின் அறைக்கு எதிர்ப்புறமாகவே கீழே பக்கத்து வீட்டாரின் தோட்டம். அந்த இடம் அப்படிக் கண்ணுக்கு ரம்மியம் தருவ



தமிழாக்கம்: த. நா. குமாரசுவாமி

தென்று சொல்ல முடியாது. யாரோ எப்பொழுதோ அக்கறை கொண்டு நல்ல வகை குரோடன்ஸ் செடிகளை வைத்து அந்தப் பக்கம் அப்புறம் திரும்பிப் பார்க்கவே இல்லை. உலர்ந்துபோன அவற்றின் கிளைகள்மீது பரங்கிக் கொடி செழுமையாகப் படர்ந்திருந்தது. அதன் பக்கத்திலேயே முள் நிரம்பிக் குறுகலாகப் புதர் போல் படர்ந்திருக்கும் ஒருபழைய இலந்தை மரம். சமையலறைப் பகுதியில் சுவர் பல இடங்களில் காரை உதிர்ந்து செங்கற்கள் வெளியே தெரிந்தன. அதன்மேல் ஒவ்வொரு நாளும் குவிந்து



வரும் அடுப்புச் சாம்பலும், எரிந்த கரித்துகளும்.

ஆனால், தன் சயன அறையின் சாளரத்திலிருந்து தெரியும் இந்தத் தோட்டக் காட்சியில் ஹரசுந்தர் ஒவ்வொரு நிமிடமும் ஓர் இன்பச் சுவையினைக் கண்டு வந்தான். அவனுடைய வாழ்வில் இத்தகையதொரு தென்பை அவன் பெற்றதே இல்லை. கோடையில் நீரோட்டம் சுருங்கிய சிற்றாறு, அதன் மணற் படுகை தெரியத் தெரிய அதன் நீர் தெளிந்து தோன்றும். காலைச் சூரிய ஒளி அதன்

ஆழம் வரை புகுந்து துடிக்கும்; காற்று வீசும் பொழுது மெல்லிய சிலிர்ப்பு அதன்மேல் படியும்; இரவில் தாரகையின் சுடர் அதன் நீர்ப்பளிங்கில் இன்ப நினைவெனத் தோய்ந்து பிரதிபலிக்கும். இதே போல், ஹரசுந்தரியின் மெலிந்த வாழ்க்கையின் நரம்புமீது ஆனந்தமே உருவான இயற்கையின் மெல்லிய விரல்பட்ட போது எழும் ஓர் இசை எத்தகைய தென்பதை விவரிக்க அவளால் முடியவில்லை.

அந்தச் சமயம் அவளுடைய கணவன், அவள் பக்கம் வந்து அமர்ந்து, "எப்படி இருக்கிறது உடம்பு?" என்று விசாரிக்கையில், அவள் கண்களில் நீர் ததும்பியது. நோயால் வற்றிப் போன அவள் முகத்தில் அந்தக் கண்கள்தாம் மிகப் பெரிதாகத் தோன்றின. அன்பும் நன்றியும் கலந்த கண்ணோக்குடன் அவள், கணவன் பக்கம் திரும்பி, அவனுடைய கையை மெல்லப் பற்றி மௌனமாக இருந்தாள். கணவன் உள்ளத்திலும் முன்னால் கண்டிராத ஒரு புதிய இன்பச் சிலிர்ப்பு மெல்லப் பரவியது.

இவ்வாறு சில நாட்கள் சென்றன. ஒரு நாள் இரவு, பிளந்துபோன சுவர்மீது காற்றில் அசைந்தாடும் கிளை மறைவில் முழு வட்டமான மதி தெரிந்தது. மாலை நேர இறுக்கத்தைச் சிதறடித்துக் குளிர் பூந்தென்றல் வீசத் தொடங்கியது. அச்சமயம், நிவாரணனுடைய தலைமயிரைத் தன் மெலிந்த விரல்களால் நீவிக் கொடுத்துக் கொண்டே ஹரசுந்தரி, "நமக்குத்தான் பிள்ளை பாக்கியமில்லை. நீங்கள் வேறு கல்யாணம் செய்து கொள்ளுங்கள்" என்றாள்.

சில நாட்களாகவே ஹரசுந்தரி இதைப் பற்றி யோசித்து வருகிறாள். ஆனந்தம் உள்ளத்தில் பொங்கி வழியும்போது, பெரியதோர் அன்பின் பெருக்கு மடைவிண்டு ஓடும்போது எதையும் பொறுத்துக் கொள்ள முடியுமென்ற உறுதி மனிதனுக்குத் தோன்றுவது இயல்பே. இத்தமாதிரி சமயங்களில்தான் தன் உயிரையும் தியாகம் செய்யக் கூடிய வலிமையுள்ள ஓர் உணர்வு பிறக்கிறது. அலை, கரடுமுரடான பாறைமீது மோதித் தன்னை மாய்த்துக் கொள்ள விரும்புகிறது. அதே போல் காதலின் வேகமும், பொங்கும் இன்பமும் ஒரு மகத்தான தியாகத்தைச் செய்யத் துடிக்கும்; பெரியதொரு துன்பத்துக்குத் தன்னையே பலியாக்கிக் கொள்ளும்.

இத்தகையதொரு மன நிலையில் உள்ளக் குதுகுதுப்புடன் ஹரசுந்தரி ஒரு முடிவுக்கு வந்தாள்: 'என் கணவன் பொருட்டு நான் பெரிய சாதனை ஒன்று புரிய வேண்டும். ஆனால் நான் நினைப்பது போல் என்னால் செய்யக் கூடியது என்ன இருக்கிறது? ஐசுவரியமோ, ஆற்றலோ எதுவும் இல்லை. வெறும் பிராணன் ஒன்றுதான் இருக்கிறது. ஆனால் அதற்குத்தான் என்ன மதிப்பு இருக்கிறது? பால் நுரை போல், கட்டி வெண்ணெய் போல், மன்மத விக்கிரகம் போல், கொழுக்கு மொழுக்கென்ற அன்பின் பொம்மையான ஒரு மகனை அவருக்குக் கொடுக்க வேண்டுமென்ற ஆசைதான். ஆனால் நான் அதற்காக உயிரை விடுவதாயிருப்பினும், அந்தப் பாக்கியம் இல்லையே... என் கணவனுக்கு வேறு ஒரு பெண்ணை விவாகம் செய்து வைத்தால் என்ன? பெண் ஜன்மம் அதைச் சகிக்காது என்பதெல்லாம் பொய். அப்படிக் கடினம் அன்று இது! கணவனிடம் அன்பு கொள்வது போல் சக்களத்தி மீதும் கொள்ள முடியாதா என்ன?'— இவ்வாறு எண்ணங்கள் எழும்பொழுது அவள் உள்ளம் இன்பத்தால் பொங்கும்.

இதைப் பற்றி முதன் முறையாகப் பேச்சு எடுத்த போது, நிவாரணன் சிரித்து, அவளுடைய உறுதியை உதறி விட்டான். இரண்டாம் தடவை, மூன்றாவது தடவை அவள் இதைப் பிரஸ்தாபித்த பொழுதும் அவன் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. கணவன் இதற்கு இணங்க வில்லை, விரும்ப வில்லை என்று தெரிந்ததும் ஹரசுந்தரி கொண்டிருந்த நம்பிக்கையும் ஆர்வமும் வலுவாயின.

பலமுறை உபதேசத்தின் பேரில் ஒரு நாள் நிவாரணனாகவே இதைப் பற்றிப் பேச்சு எடுத்தான்: "நானோ கிழவனாகி வருகிறேன். இளம் பெண் ஒருத்தியை மணந்து அவளை வேறு போஷித்து நான் சம்சாரம் நடத்த வேண்டுமா?"

அதற்கு ஹரசுந்தரி, "அது குறித்து நீங்கள் கவலைப்பட வேண்டாம். அவளைப் போஷிப்பது என் பொறுப்பு" என்றதும், அவள் மனத் திரையில், நாணமே உருவான இளங் கன்னிகையின்—அன்னையின் ஆதரவிலிருந்து பிரிந்து வரும் ஒரு புது மணப்பெண்ணின் அழகு முகம் மெல்ல எழுந்தது. அவள் இதயம் இதனால் இளகி விட்டது.

நிவாரணன், "எனக்கு ஆபீசுத் தொல்லை இருக்கு; நீதான் இருக்கிறாயே. ஒரு பச்சிளம் பாவையுடன் வாழ்க்கை நடத்த எனக்குப் பொழுது இல்லையே!" என்றான்.

ஹரசுந்தரி அடிக்கடி சுட்டிக் காட்டுவாள், வரப் போகும் புதுப் பெண்ணால் அவனுடைய ஆபீசு வேலைக்குக் குந்தகம் எதுவும் நேரிடாதென்று. கடைசியில் வேடிக்கையாகவே அவள், "பார்க்கலாம், அப்புறம் அந்தக் காரியந்தான் எங்கோ, நான்தான் எங்கோ, நீங்கள்தான் எப்படி மாறிப் போவீர்களோ?" என்று கூறினாள்.

இதற்கு மறுமொழி பகர வேண்டிய அவசியம் ஏற்படுவதற்கு முன்பாகவே புல்லாக்கு அணிந்த கண்ணீர் மல்கும் ஒரு பச்சிளம் பாவையை நிவாரணன் மணந்து கொண்டான். அவள் பெயர் சைலபாலா.

காதுக்கு இனிமையான பெயரைப்போலவே முகத்திலும் அவளுக்கு அழகு சொட்டுகிறதென்று நிவாரணன் நினைத்துக் கொண்டான். அவள் நடையழகினையும், தோற்றப் பொலிவையும் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றும்; ஆனால் அந்த மாதிரி இருக்க முடியவில்லை. உடனேயே அவனுக்கு வேறு விதமாகத் தோன்றும். 'சின்னஞ் சிறியவள். இவளுடன் எப்படிப் பழகுவது? அவளை விட்டு என் வயதுக்கு ஏற்ற கடமையில் கவனம் செலுத்தினால் தான் நான் கவலையற்றவனாவேன்.'

நிவாரணன் இப்படிச் சங்கடமான நிலையில் அல்லலுறுவதைக் கண்டு ஹரசுந்தரி தனக்குள் பூரித்துப் போவாள். ஒவ்வொரு நாள் அவனுடைய கையைப் பற்றி, "ஆகா! ஏன் இப்படி ஓடிப் போகிறீர்கள்? சின்னஞ் சிறு பெண் அவள், உங்களை விழுங்கி விடு

"நான் ஆறுமாதங்கள் ஓய்வு நேரங்களில் வேலை செய்து
ஒரு சைக்கிள் வாங்க பணம் சேர்த்தேன்.

**ஆகவே, மிகச் சிறந்த ஹெர்குலிஸ் சைக்கிள்
வாங்கியது நியாயம் தானே!"**

ஆம், ஹெர்குலிஸ் சைக்கிளுக்காக எந்த விதமான தியாகமும் செய்யலாம். ஏனெனில் ஹெர்குலிஸ் வெறும் சைக்கிள் மட்டுமல்ல-வாழ்நாள் முழுவதும் உழைக்கும் ஓர் நற்துணை. உயர்தர அமைப்பும், பிரயாசையின்றி சுலபமாக ஓடும் தன்மையும் கொண்ட ஹெர்குலிஸ், சைக்கிள்களில் மிகச் சிறந்தது என்பதில் சந்தேகமில்லை!



உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த முதலீடு

**ஹெர்குலிஸ்**

உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்

தயாரிப்போர்: டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப்
இந்தியா, மதராஸ்

வாளா என்ன ? அவளோடு சற்று நெருங்கிப் பழகுங்கள்'' என்பாள்.

அப்போது நிவாரணன் ஏதோ முக்கிய வேலை இருப்பது போல், ''இருக்கட்டும், இருக்கட்டும்'' என்று ஓடப் பார்ப்பான்.

ஹரசுந்தரி அவன் காதோடு, ''இதற்காகவா உங்களுக்குக் கல்யாணம் செய்து வைத்தேன் ? பாவம், அவளை இப்படி ஏறிட்டுப் பார்க்காமல் இருப்பது நன்றாக இல்லை'' என்பாள்.

இதைக் கூறியதும் சைலபாலாவை இழுத்து வந்து நிவாரணனின் பக்கத்தில் உட்கார வைத்து, அவள் முகத்திரையைச் சட்டென்று விலக்கி, வெட்கத்தால் தாழ்ந்த அவள் மோவாயைத் தடவி, நிவாரணனைப் பார்த்து, ''ஆகா, இதோ பாருங்களேன்! இந்த முகத்துக்கு எதிரே சந்திரன் என்ன பண்ணும்?' என்பாள்.

ஒவ்வொருநாள் இருவரையும் இணைத்து விட்டு, வீட்டுக் காரியத்தைக் கவனிக்கும் சாக்காக அவர்கள் தனியாக ஒருவருடன் ஒருவர் பழகுவதற்கு வசதியாக அறைக் கதவை வெளிப்புறம் தாழிட்டுக் கொண்டு போவாள். நிவாரணனுக்கு மட்டும் தெரியும், ஏதோ ஒரு துளை வழியாக இரண்டு கண்கள் உள்ளே நடப்பதைக் கூர்ந்து கவனிக்கிறதென்று. படுக்கையில் ஒருபுறமாகத் திரும்பி நிவாரணன் பிடித்தமே இராது தூங்க முற்படுவான்; சைலபாலா ஒரு போர்வைக்குள் தன் உடலை ஒடுக்கி ஒரு மூலையில் சுருட்டிக் கொள்வாள்.

பார்த்துப் பார்த்துக் கடைசியில் ஹரசுந்தரிக்குச் சப்பிட்டு விட்டது. இதனால் அவள் வருத்தமும் கொள்ளவில்லை.

ஹரசுந்தரிக்குச் சப்பிட்டுப் போனதும், நிவாரணனுக்கு இந்தப் புது இல்லறத்தில் ஒரு ருசி பிறந்தது. என்ன விந்தையான தாம்பத்திய வாழ்க்கை இது : என்ன ரகசியம் சூடி கொண்டது இந்த மனிதப் பண்பு! ஒரு வைரக்கல் அகப்பட்டால், அதன் பல கோணங்களைத் திருப்பிப் பார்க்க ஆசை கொள்கிறோம்; ஆனால் ஒரு சின்னஞ்சிறு அழகு நிரம்பிய மனித உள்ளமோ-அதன் போக்கே விந்தையானது. அதை எத்தமாதிரி யெல்லாம் தொட்டுக் கொஞ்சி, வெளிப்புறமாகவும், உட்புறமாகவும், பக்கவாட்டாகவும் கண்டு திகைப்புறலாம்! காதில் அணிந்திருக்கும் லோலாக்கை மெல்ல அசைத்து, பாராது இருக்கும் சமயம், அவள் முகத்திரையைப் பட்டென்று விலக்குவது, பின் வேகத்துடன் அவள் வனப்பில் கண்ணை வீசுவது; வானத்துத் தாரகைபோல் நின்று நெடுநேரம் அந்த அங்க லாவண்யத்தில் கண்ணைப் பதி கொடுப்பது - இவ்வாறான புதுப் புது அநுபவங்கள் ஏற்பட்டன நிவாரணனுக்கு.

மாக்மோரன் கம்பெனியின் தலைமைக் குமாஸ்தா திரு நிவாரண சந்தரின் வாழ்வில் இப்படியொரு நற்பாக்கியம் இதற்கு முன் வந்ததே இல்லை. முதல் விவாகம் ஆன போது, அவன் மீசை கூட அரும்பாத பையன். பின்னர், யௌவன தசை வந்தபோது அவனுடைய மனைவி ஹரசுந்தரியை அவன் அறிந்தான். தாம்பத்திய வாழ்க்கையில் பழக்கப் பட்டுப் போனான். ஹரசுந்தரியிடம் அவ



''என்ன சார் நீங்க திடீர்னு இன்னிக்கு ''பாண்ட்'' போட்டு வந்திட்டீங்க ?''

''இருந்த வெள்ளை வேட்டிகளையெல்லாம் கொலுப்படியிலே விரிக்க வச்சுடுத்துங்க ! வேறே வழி, பேசாமே பழைய 'பாண்ட்' போட வேண்டியதாப் போச்சு !''

---

னுக்கு ஆசைதான். ஆனால் காதலின் மெல்லிய உணர்வு அப்போதெல்லாம் அவன் மனத்துள் படரவே இல்லை.

நன்றாகக் கனிந்த மாங்கனியுள் வாழும் வண்டுக்கு இன்சுவையைத் தேட வேண்டிய அவசியமே இல்லை. இங்குமங்கும் திரிந்து சுவையைப் பருக வேண்டியதே இல்லை. ஆனால் அதை, வசந்த காலத்தில் பூவின் கோலம் பூண்ட கானிடையே விட்டுப் பாருங்கள். முற்றிலும் இதழ் விரியாத ரோஜா மொட்டைச் சுற்றித்தான் ரீங்காரம் பாடும். அதிலிருந்து அது பெறும் மணமே, சுவையே சிறிதுதான். ஆனால் என்ன களிப்பு, வெறி அதற்கு !

நிவாரணன் முதலில் கௌன் போட்ட பொம்மையும், அப்புறம், நல்ல செண்ட்டும், தன் இளம் மனைவிக்குக் கையுறையாக வழங்கினான். பின்னர் நினைத்தபோதெல்லாம் இனிப்புப் பண்டங்களை வாங்கி வந்து, மறைவாகவே தருவான். இப்படி அவளுடன் நெருங்க யுக்திகளை யெல்லாம் கையாண்டான். திடீரென்று ஒருநாள், இவர்கள் என்ன செய்கிறார்கள் உட்புறம் என்று ஆவல் தூண்ட ஹரசுந்தரி வீட்டு வேலையைப் போட்டுவிட்டு, கதவின் துளை வழியாக நோக்கும்போது, நிவாரணனும் சைலாவும் தாயக்கட்டம் ஆடிக் கொண்டிருந்தனர்.

கிழ வயதுக்கு ஏற்ற ஆட்டந்தான் ! நிவாரணன் சாப்பிட்டானதும், ஆபீசுக்குப் புறப்பட்டவன், திடீரென்று ஆபீசை மறந்துவிட்டு அந்தப்புரத்துள் நுழைந்து விட்டான். எதற்

காக இருக்கப் பாசாங்கோ! சட்டென யாரோ காயும் மழுவைப் பாய்ச்சி ஹரசுந்தரியின் கண்ணைத் திறந்தது போலிருந்தது. அந்த உணர்வில் அவள் கண்ணில் ததும்பிய நீர்கூட வறண்டு விட்டது.

ஹரசுந்தரி தனக்குள் நினைத்தாள். 'இவளை நான் அல்லவோ இந்த வீட்டுக்கு அழைத்து வந்தவள்.. நானேதானே இருவரையும் சேர்த்து விட்டேன். என்னிடமா இந்த ஒளிப்பாட்டம்? அவர்களுக்குக் குறுக்கே நான் முள்ளாக நிற்கிறேனா?'

ஹரசுந்தரி சைலபாலாவுக்கு வீட்டுக் காரியமெல்லாம் சொல்லிக் கொடுப்பாள்.

ஒருநாள் அவள் வேலை செய்வதைப் பார்த்து நிவாரணன், ''எதற்காக அவளுக்கு இந்த வேலையெல்லாம் தருகிறாய்? அவள் குழந்தை உடம்பு இதைத் தாளாது'' என்றான்.

இதற்குக் கடுமையான மறுமொழி ஹரசுந்தரியிடமிருந்து எழுந்தது. ஆனால் அவள் வாயை அடக்கிக் கொண்டாள்.

அன்றுதொட்டு, இளையவளிடம் வீட்டுக் காரியம் எதையும் விடுவதில்லை. சமையலோ, மற்ற எந்தக் கடின வேலையோ, அவளே செய்வாளுள். கடைசியில், சைலபாலா, உடம்பை அசைக்காமல் உட்கார்ந்திருப்பதும், ஹரசுந்தரியே பணிப்பெண்ணாக எல்லா வேலைகளையும் செய்வதும், கணவன் விதூஷகனைப் போல் இளையவளுடன் கொஞ்சிக் குலாவுவதுமான நிலைமை மூண்டது. குடும்பத்தைக் கவனிப்பது, பிறர் சுக துக்கத்தை நோக்குவது இவை போன்ற வாழ்க்கையின் கடமைகளில் சைலா துளியேனும் அக்கறை கொள்ளவில்லை.

ஹரசுந்தரி, வாயடைத்து, வேலைக்காரியைப் போல் இருந்தாள். அப்படி இருப்பதில் அவள் பெருமை கொண்டாள். அதில் இழிவோ, குறைவோ இருப்பதாக அவள் உணரவே இல்லை. அவள் மனம் விட்டுக் கூறினாள்: ''நீங்கள் இருவரும் குழந்தைகள் போல் விளையாடுங்கள்; இந்தக் குடும்பப் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்.''

* *

அந்தோ, இன்று அந்த மனத் திண்மை எங்கே போய் விட்டது; தன் கணவன் பொருட்டு உயிருள்ளவரை தன் அன்பின் உரிமையில் பாதியளவு விருப்பத்துடன் விட்டுக்கொடுப்பதென்ற அந்த மனத்திண்மை இடுமென்று எங்கே போய்விட்டது?

நெடுநாட்கள் நோயில் வாதைப்பட்டதால், ரத்தம் செத்து வெளுத்துப்போன ஹரசுந்தரியின் உடல் வளர்பிறையின் கீற்றெனச் சுருங்கிக் கிடந்தது. வாழ்க்கை என்னவோ நடக்கிறதென்ற ஒரு வெறுப்பு இருந்தது. தான் இராது போனால் இந்த உலகம் நடக்காதோ என்று தோன்றிய காலம் வேறு. ஆனால் இப்பொழுது படிப்படியாக அவள் உடலில் வலிமை சுரந்தது; ரத்தம் விருத்தியடைந்தது. எங்கிருந்தோ ஹரசுந்தரியின் உள்ளத்தில் உரிமையை வேண்டும் ஒரு குரல் கூச்சலிடுவது கேட்கும்; 'நீ தானே பத்திரம் எழுதிக் கொடுத்துவிட்டாய். ஆனால் நான் என் உரிமையை விட்டுக் கொடுக்கப் போவதில்லை.'

அன்று நிவாரணனுக்கும் சைலபாலாவுக்கும் தன் பள்ளியறையை ஒழித்துக் கொடுத்துவிட்டு வேறு அறையில் தனியாகப் படுத்துக்கொண்டவள் இன்று தன் நிலையை உணர்ந்தாள்.

நிலவும் குடிகொண்ட அந் நிலவு பொழியும் இரவில் எங்கிருந்தோ வசந்தத்தின் சுவையான பாட்டு பக்கத்து அறைக்குள்ளும் நுழையாமல் இல்லை. தூக்கத்தால் நுவளும் அந்தச் சிறுமி சைலபாலாவின் காதோடு நிவாரணன் காதல் காற்று கொள்ள 'கண்ணே!' என்று மெல்ல அழைத்தான்.

பங்கிம் பாபுவின் 'சந்திர சேகரன்' என்ற நவீனத்தை அன்று ஒரு மூச்சில் படித்து முடித்துவிட்டான் நிவாரணன். புதுமைக் கவிஞர்களின் அகச் சுவையான இரண்டொரு செய்யுட்களையும் சைலபாலாவுக்குப் படித்துக் காட்டினான்.

நிவாரணனுடைய மனத்துள் எங்கோ இத்தனை நாட்கள் பதுங்கியிருந்த இளமையின் நசை இடுமென அன்று எந்த அதிர்ச்சியினாலோ விழிப்புற்றுப் பொங்கத் தொடங்கியது. இப்படி நேரும் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை. இக்காரணம் பற்றி அவனுடைய புத்தியும் வாழ்வின் போக்கும் இடுமென்று தலைகீழாகி விட்டன. இப்படி மனிதன் உள்ளத்தில் உபத்திரவம் செய்யக் கூடிய ஒரு பொருள் இருக்கிறது. எதையும் மீறிக் கிளம்பும் ஒரு சக்தி இருக்கிறது. கணக்கு வழக்கு வைத்துக்கொள்வது போல் அதை ஓர் ஒழுங்குக்கு உட்படுத்தவே முடியாதென்பதை யெல்லாம் அப்பாவியான அவன் தெரிந்துகொள்ளவே இல்லை.

நிவாரணன் மட்டுந்தானா, ஹரசுந்தரிக்கும் இந்த வேதனை ஒரு புது அனுபவமாகவே இருந்தது. எதை நோக்கி இந்த மனவெழுச்சி? எதன் பொருட்டு இத்துயரின் துடிப்பு! மனம் ஒன்றை விரும்புகிறது, ஆனால் அது கிட்டுவதில்லை. முன்பெல்லாம் நிவாரணன் இட்டப்படி ஆபீசுக்குப் போவது வருவது, தூங்கச் செல்லுமுன் சில நேரம் மனைவியுடன் பால்காரனுக்குச் சேர வேண்டிய பாக்கி, உயர்ந்து கொண்டே போகும் விலைவாசி, உலகத்தில் ஆற்ற வேண்டிய மற்றக் கடமைகள் இவை பற்றி யெல்லாம் பேசுவான். அப்போது அவன் உள்ளத்தில் இத்தகைய புரட்சிகள் தோன்றுவதற்கான அறிகுறியே இல்லை. மனைவியிடம் அளவற்ற ஆசை உண்டு; ஆனால் அதில் ஒரு பிரகாசமோ, உணர்வின் வெம்மையோ இல்லை. அந்தக் காதல் சுடர்விடாத விறகுத் தழலாகவே இருந்தது.

வாழ்வின் நிறைவைப் பெறாமல் தன்னை யாரோ வஞ்சித்துவிட்டது போலவும், தன் இதயம் நீடித்த வேட்கையால் வறண்டு விட்டது போலவும், தான் எடுத்த பெண் பிறவி வெறும் வறுமைக்கே பலியாவது போலவும், கடை கண்ணிக்குப் போய்ச் சாமான்கள் வாங்கி வரும் பணிப் பெண்ணுக்கும் கேடாகத்தான் ஆகிவிட்டது போலவும்; இன்று நடுவயதில் வந்து நிற்கும் பொழுது அவளுக்குத் தோன்றியது. அவளுடைய அறைக்குப் பக்கத்திலேயே மறைவில் ஒரு வரியத்தின் கருவூலத்துக் கிடையே ஒரு சிறுக்கி ராணியைப் போல் போகம் அனுபவித்து வருகிறாள். பெண்கள் பணி செய்வதற்கெனப் பிறந்தவர்கள்தாம்; ஆனால்

அவர்கள் புருஷனின் உள்ளத்தைக் கவரும் தெய்வங்களாகவும் திகழ்வர்! இப்படி ஒரு கணவனைப் பகிர்ந்து ஒரு பெண் கடமை ஆற்றப் பணி செய்கிறாள். மற்றவள் அவனை மகிழ்விக்கும் அரசியாக வாழ்கிறாள்! இதனால் பணிப்பெண்ணுக்கும் கௌரவம் போய்விடும்; ராணியாக உள்ளவளுக்கும் சுகம் இல்லை. காரணம், சைலபாலாவும், இளம் பெண்கள் வாழ்வில் நுகரும் இன்பத்தைப் பெறவில்லை. இடையறாத காதலைப் பாய்ச்சினாலும், அந்தக் காதலில் சிறிதாவது அவள் ஓய்வு காண வில்லை. கடலை நோக்கிச் செல்லவும் அதனுடன் ஐக்கியமாவதுமே நதிக்குரிய தர்மமாகும்; ஆனால் கடலின் ஓதம் பொங்கி எழுந்தால், நதி பின்னுக்கடைந்து தனக்குள்ளேயே பெருகிப் பொங்கும். வாழ்வு இரவு பகலும் அதன் கொஞ்சல் குலாவலுடன் சைல பாலாவை நோக்கி முன் வருகையில், அவளுடைய அகம்பாவம் விரைவாக மேலெழத் தொடங்கியது. குடும்பத்தைப் பற்றி அவள் அக்கறை கொள்ளவே இல்லை. 'எல்லாம் எனக்காகத்தான், நான் யாருக்கும் கடமைப் பட்டவளன்று' என்று உணரும் அளவுக்கு அவள் வந்துவிட்டாள். இதில் அகந்தை அமோகமாக இருப்பினும், உள்ளத்தில் மட்டும் திருப்தியே ஏற்படவில்லை.

* * *

ஒரு நாள் மழை மேகம் இருண்டு வந்தது. வீட்டில் வேலை செய்வது கூட முடியாத வாறு அவ்வளவு இருள். வெளியே 'சோ'வென்று கொட்டும் மழை. இலந்தைப் புதரைச் சுற்றிலும் ஒரே வெள்ளக் காடு. சுவர் ஓரமாக உள்ள ஜலதாரையில் குழம்பிய நீர்த் திரள் சலசல வென்று விரையும் ஓசை. ஹரசுந்தரி தன் அறையில் இருளில் ஜன்னல் அருகில் உட்கார்ந்திருந்தாள்.

அந்தச் சமயம் நிவாரணன் திருடனைப் போல் சந்தடி பண்ணாமல் உள்ளே வந்தான். போவதா திரும்பி விடுவதா என்று அவன் தயங்கும் பொழுது ஹரசுந்தரி அவனைப் பார்த்து விட்டாள். ஆனால் அவள் எதுவுமே பேசவில்லை.

அப்பொழுது சட்டென்று அம்பெனப் பாய்ந்து ஹரசுந்தரியின் பக்கமாக வந்து பொருமிச் சொரிந்தான்—"வேறொன்றுமில்லை சில நகைகள் தேவை. கடன் தொல்லைதான். அதை அடைக்காது போனால் பெருந்த அவமானம் நேரிடும் போலிருக்கு. நகைகளை அடகு வைத்து அதை தீர்த்து விடலாமென் றிருக்கிறேன்."

இதற்கு ஹரசுந்தரி மறுமொழியே பேச வில்லை; நிவாரணன் திருதிருவென்று விழித்த படி நின்றிருந்தான். "உன்னால் தர முடியாதா?" என்றான் மீண்டும்.

"முடியாது" என்றாள் ஹரசுந்தரி.

அறையினுள் நுழைவது எவ்வளவு சங்கடமாக இருந்ததோ, அவ்வளவு அதை விட்டு வரும் பொழுதும் இருந்தது நிவாரணனுக்கு. இப்படியும் அப்படியும் பார்த்துவிட்டு, "சரி, நான் வேறு எங்கேயாவது முயன்று பார்க்கிறேன்" என்று கூறிவிட்டு அவன் வேகமாய்ப் போய் விட்டான்.




அவன் பட்ட கடன் என்ன, அந்த நகைகளை யாரிடம் அடகு வைக்கப் பார்க்கிறான், என்பதெல்லாம் ஹரசுந்தரிக்குத் தெரியாமல் போகவில்லை. முன்னால் இரவு இளையவள், மோகத்தால் புத்தியை இழந்த கணவனைப் பார்த்துக் கடிந்திருக்கிறாள்— 'அக்காவின் இரும்புப் பேழையில் அவ்வளவு நகை இருக்கிறதே...அவற்றுள் சிலவற்றை நான் அணிந்து பார்க்க வேண்டுமென்ற ஆசையை உங்களால் பூர்த்தி செய்ய முடிய வில்லையே.'

நிவாரணன் சென்றதுமே மெல்ல இரும்புப் பேழையைத் திறந்து நகைகளை ஒவ்வொன்றாக எடுத்தாள் ஹரசுந்தரி. சைலபாலாவை அழைத்தாள். முதலில் அவளுக்கு விவாகத்தின் போது தந்த காசிப்பட்டுப் புடவையை அணிவித்தாள். அப்புறம், உச்சந்தலையே பிடித்து உள்ளங்கால்வரை இழைகளைப் பூட்டினாள். குத்து விளக்கை ஏற்றி அந்த ஒளியில் இளையவளின் எழிலைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள். புன் சிரிப்பான முகமும், மாம்பழக் கனிவாயும் அங்க மெல்லாம் திரண்டு செவ்வி பூத்து விளங்கும் அந்த அழகு, கால்களில் பட்டை கொலுசில் உள்ள சிறு சதங்கைகள் ஒலிக்க நடந்து போகும் ஒயிலை நோக்கிய போது ஹரசுந்தரியின் உடலில் ரத்த ஓட்டம் துள்ளியது. 'இன்று உன்னையும் என்னையும் ஒப்பிட்டுப் பார்க்கமுடியாது. நீதான் அழகி! ஆனால் ஒரு சமயம், இதே வயதில் இப்படித்தான் [illegible] எல்லவரைக்கும் இருந்தேன். அப்போது என்னை இப்படி யாரும் புகழ்ந்து பரிந்து பேசவில்லை. அந்த நாட்கள் எப்பொழுதோ மறைந்தன!, வந்து போனது தெரியாமல். ஆனால் சைலபாலா! நீ இன்று என்ன செருக்குடன், இன்ப அலையை எழுப்பி நடந்து செல்கிறாய்!'

வெறும் வீட்டு வேலையே தன் கடமையென உணர்ந்த போது ஹரசுந்தரிக்கு இந்த நகைகள் மதிப்புடையனவாகத் தோன்றின. அப்போது ஒரே நிமிடத்தில் அசட்டுத்தனமாக இவற்றைக் கொடுக்க முன்வந்திருப்பாளா? இன்று வீட்டு வேலையைத் தவிர இன்னுமொரு பெரிய அநுபவம் ஏற்பட்டிருந்தது அவளுக்கு. அந்த நகைக்குரிய மதிப்பு, வருங் காலத்துக்கு அது பயன் தரக்கூடிய வாய்ப் பெல்லாம் மிகத் துச்சமாகின.

இந்தப் பக்கம், சைலபாலா, முத்தும் மாணிக்கமும், பொன்னும் பூண்டு பள்ளியறைக்குள் சென்றாள். தனக்காக எத்தகைய தியாகம் ஹரசுந்தரி செய்தாள் என்பதை அவள் சிறிதும் நினைத்துப் பார்க்கவே இல்லை. தன்னைச் சூழ்ந்தும் நிலவும் செல்வம், சௌபாக்கியம், சேவை யாவும் இயல்பாகவே தன்னை நோக்கி வருவன என்பதை மட்டும் அறிவாள். ஆமாம், அவள் சைலபாலா அல்லவா, கணவனின் 'ஆசைக் கனி' அல்லவா?

சிலர் சொப்பன நிலையில் ஆபத்து விளைவிக்கக் கூடிய வழியே நடந்து செல்வர்; அந்த ஆபத்தைப் பற்றிச் சற்றும் சிந்திக்கவே மாட்டார்கள். நனவுள்ளவர்களில் பலர் இதே போல் ஒரு சொப்பன நிலையில் எப்போதும் இருக்கின்றனர்; சங்கடம் நிரம்பிய குறுகிய வழியில் முன்னேறுகின்றனர்; கடைசியில் அழிவின் எல்லையில் வந்து விழப்போகையில் தான் விழித்துக் கொள்வர்.

நம் மாக்மோரன் கம்பெனியின் தலைமைக் குமாஸ்தாவுக்கு இந்தக் கதி நேரிட்டது. சைலபாலா தன் வாழ்விடையே பெரும் சுழலை எழுப்பினாள். அந்தச் சுழலில் வெகு தொலைவிலுள்ள அரு பொருள்கள் வந்து சிக்கத் தலைப்பட்டன. நிவாரணனுடைய மனிதத் தன்மையோ, அவன் வாங்கும் மாதச் சம்பளமோ, ஹரசுந்தரியின் மன அமைதியோ, நகை நட்டோ இவற்றுடன் நிற்கவில்லை. மாக்மோரன் கம்பெனியின் பணத்தையும் இழுக்கத் தொடங்கியது. திடும் திடுமென கம்பெனி 'காஷி'லிருந்து கணிசமான தொகைகள் மறைந்து வந்தன. அடுத்த மாதம் சம்பளம் வந்ததும் அதைச் சரிக்கட்டி விடலாமென்று நிவாரணன் நினைத்து வந்தான். ஆனால் சம்பளம் வந்ததும் அதையும் அந்தச் சுழற்சி தன்னுள் அடக்கிக் கொள்ளும்; மிச்சம் நின்ற சிறு வெள்ளி இரண்டணாக் காசுகூட நிற்காது.

எத்தனை நாள் இப்படி நடக்கும்; கடைசியில் நிவாரணன் அகப்பட்டுக் கொண்டான். பரம்பரையாக வரும் நல்ல வேலைக்கு ஊறு ஏற்பட்டது. துரை நல்ல மனிதரானதால் இரண்டே நாட்களில் அதைச் சரிக்கட்டி விடுமாறு சொன்னார்.

எப்படித்தான் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாயைக் கையாண்டோமோ என்று நிவாரணனுக்கே புரியவில்லை. அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பைத்தியக்காரனைப் போல் ஹரசுந்தரியிடம் ஓடி, "ஐயோ! குடி முழுகிப் போயிற்றே" என்று புலம்பினான்.

இதைக் கேட்டதும் ஹரசுந்தரியின் முகம் வெளுத்துப் போய்விட்டது.




**அர்ச்சகர்:** பிள்ளையாருக்கு ஒரு வஸ்திரம் எடுங்கோ!

**கடைக்காரர்** (எங்கோ ஞாபகமாக): என்ன வயதிருக்கும்?

---

"சீக்கிரம் நகைகளைத் தா" என்றான் நிவாரணன்.

"என்னிடமே துளிப் பொன்கூட இல்லை. எல்லாவற்றையும் சின்னவளிடமே கொடுத்து விட்டேனே!" என்றாள்.

ஒரு குழந்தையைப் போல் பதற்றம் கொண்டு "ஏன் அவளுக்குக் கொடுத்தாய்... ஏனோ கொடுத்தாய்...யார் கொடுக்கச் சொன்னது?" என்றான்.

அதற்கு நேரான மறுமொழி தராமல், "அதனால் என்ன நஷ்டம்? வீணாகிவிடவில்லையே!" என்றாள்.

இடிவிழுந்து போய் நிவாரணன், "அதை எப்படியாவது அவளிடமிருந்து வாங்குவதைப் பார்! ஆனால் நான் அதைக் கேட்பதாக மட்டும் அவளிடம் சொல்லிவிடாதே" என்று கூறினான்.

ஹரசுந்தரி வெறுப்பும், அழுகையும் கொண்டு, "உங்களுடைய சாக்குப் போக்குக் கெல்லாம் நான் கூடவே உடந்தையாக ஆட வேண்டுமா என்ன?" என்றதும், இளையாளின் அறைக்குள் சென்றாள்.

இளையவள் எதையும் புரிந்து கொள்வதாக இல்லை. கேட்டதற் கெல்லாம் "எனக்கு என்ன தெரியும்!" என்று கூறினாள்.

இதுவரையில் குடும்ப விஷயம் எதிலும் துளி வேனும் அக்கறையோ ஆர்வமோ காட்டாதவளுக்கு இப்படி ஒரு விபரீத நிலைமை மூண்டு இருப்பதைக் குறித்துச் சொல்வது மிகவும் அநியாய மன்றோ!

கடைசியில் நிவாரணனே அவள் காலைப் பிடித்து அழுது வேண்டிக் கொண்டான். சைலபாலா சற்றும் சிணுங்காமல் "எனக்கு என்ன தெரியும்.... எனக்குத் தந்ததை நான் ஏன் கொடுக்க வேண்டும்?" என்றாள்.

பார்த்தான் திவாரணன். அழகே உருவெடுத்த இந்தச் சிறுக்கியின் மனம் இரும்புப் பெட்டியை விடக் கடினமாக இருப்பதை, சங்கடம் ஏற்பட்டபோது தன் கணவன் இப்படி மிகவும் தாழ்ந்து கெஞ்சுவது ஹரசுந்தரிக்குக் கோபத்தையே மூட்டியது. இளையவளிடமிருந்து சாவியைப் பிடுங்கிக் கொண்டாள். தன் பிடியை விடாமல் சைலபாலா சாவிக்கொத்தை வெளியேயுள்ள சிறு குட்டையில் வீசி எறிந்தாள்.

ஹரசுந்தரி திகைப்புற்றுப் போன தன் கணவனைப் பார்த்து, "உடையுங்கள் பெட்டியை" என்றாள்.

சைலபாலா உடனேயே, "அந்தமாதிரி செய்தால் நான் சுருக்குப் போட்டுக்கொண்டு சாவேன்" என்றாள்.

"சரி, வேறு ஏதாவது வழி பார்க்கிறேன்" என்றதும் வெளியே அலங்கோலமாக ஓடினான். இரண்டே மணி காலத்துக்குள் பிதுரார்ஜிதமான தன் வீட்டை இரண்டாயிரத்து ஐந்நூறுக்கு விற்று விட்டுத் திரும்பினான்.

கையில் விலங்கு விழாமல் தப்பியது. ஆனால் வேலை போய் விட்டது. ஸ்தாவர ஜங்கம சொத்தில் எஞ்சி நின்றவை அவனுடைய இரண்டு ஸ்த்ரீ ரத்தினங்களே. இவர்களில் இளையவள் கருப்பிணியானதால், அசையாத பொருளாகவே இருந்தாள். அதே தெரு முனையில், ஜரம் கசியும் ஒரு சிறு வீட்டில் இச் சிறு குடும்பம் புகலிடம் தேடிக் கொண்டது.

* * *

இளையவளுக்கு மூண்ட அதிருப்திக்கும், தலைக்குனிவுக்கும் ஒரு முடிவில்லை. தன் கணவனுக்கு எந்தவிதமான யோக்கியதையுமில்லை என்ற வேதனை அவளுக்கு. ஏன் தன்னை அவன் மணந்துகொண்டான் என்று எரிச்சலே.

மாடியில் இரண்டே அறைகள். ஒன்று திவாரணனும் சைலாவும் படுக்கும் அறை. மற்றொன்றில் ஹரசுந்தரி இருந்தாள். சைலபாலா அடிக்கடி குறை கூறுவாள். "இப்படி ஒரே அறையில் என்னுடன் படுப்பதும் உலாவுவதும் எனக்குச் சகிக்கவில்லை."

திவாரணன் அவளுக்குப் பொய்யான நம்பிக்கையூட்டி "நல்ல வீடு சீக்கிரமே பார்த்துக் கொண்டு போய் விடலாம்" என்பான்.

"என் பக்கத்திலே அறை இருக்கிறதே" என்றாள் சைலா.

அக்கம்பக்கத்திலுள்ளவர்களே ஒரு நாளும் சைலபாலா சென்று பார்த்ததில்லை. திவாரணனுக்கு ஏற்பட்ட நிலையைக் கண்டு அநுதாபம் கொண்ட சிலர் ஒருநாள் பார்க்க வந்தனர். அப்போது சைலபாலா தன் அறைக்குள் தாழிட்டுக் கொண்டு, வெளியிலே வரவில்லை. வந்தவர்கள் போனவுடன் ஒரேயடியாக அழுது ஆர்ப்பாட்டம் செய்து, ஹிஸ்டீரியா, (மூர்ச்சை)வுக்கு ஆளாகித் தெருவையே ஒன்று கூட்டிவிட்டாள். இப்படி அடிக்கடி நிகழ்ந்து கொண்டு வந்தது.

கடைசியில் சைலபாலா நோய்க்காளாகிப் படுக்கையாகப் படுத்து விட்டாள். அதனால் வயிற்றுப் பிள்ளையும் கரைந்து போய்விட்டது.

திவாரணன் ஹரசுந்தரியின் கையைப் பிடித்து, "சைலாவை எப்படியாவது காப்பாற்றேன்" என்று வேண்டிக் கொண்டான்.

இரவில்லை, பகலில்லை; சைலபாலாவுக்கு அவள் சேவை செய்தாள். துளிபோதும் முகம் சுளித்துக் கொள்ளாமல் இந்தப் பணியைச் செய்து வந்தாள்.

சைலா பிடிவாதம் பிடிப்பாள். கஞ்சி குடிக்க முடியாதென்று, பாத்திரத்தை விட்டுக் கடாசுவாள். 'சாதம்தான் சாப்பிடுவேன்' என்று அனர்த்தம் செய்வாள். ஹரசுந்தரி சற்றும் வெறுப்பின்றி, 'அடியம்மா! என் கண்ணே! குழந்தாய்' என்று செல்லமாகச் சொல்லிச் சமாதானப் படுத்துவாள்.

இவ்வளவு பரிவு காட்டியும் சைலபாலா பிழைக்கவில்லை. வாழ்வில் எத்தனையோ சுகத்தையும் போகத்தையும் அநுபவித்து விட்டு, கடைசியில் அவற்றைப் பறி கொடுத்து அதிருப்தியடைந்த உள்ளத்துடனேயே உயிரை நீத்தாள்.

* * *

திவாரணனுக்குச் சைலாவின் மறைவு பெரும் அதிர்ச்சியைத் தந்தது. தன்னைப் பிணைத்த ஒரு கட்டு விலகியதென்பதைப் பின்னர் உணர்ந்தான். இந்தச் சோகத்திடையேயும் அவன் உள்ளம் விடுதலை பெற்றதன் ஆறுதலை அடைந்தது. இதுவரை துர்ச்சொப்பனம் போல் சைலாவின் நினைவு அவன் இதயத்தை அழுத்தி வந்தது; தெளிவு வந்தது. தெளிவு ஏற்பட்டதும் மறுகணமே அந்த வேதனையாவும் இலேசாகிக் குறைந்து வந்தது. தன் வாழ்வைச் சுற்றிப் படர்ந்த அந்த மெல்லிய பூங்கொடி அறுந்து விட்டதே. அவன் காதலித்த அந்தப் பொற்கொடி சைலபாலா என்று அவன் எப்போதாவது இரு சொட்டுக் கண்ணீர் உகுத்தாலும், சட்டென்று உள்ளம் தெளிவடைந்து தன்னை இறுக்கிய பாசம் அவள் என்று நினைத்துக் கொள்வான்.

என்றும் அவன் வாழ்வில் பங்குகொண்டவள், கஷ்ட நிஷ்டூரங்களில் துணையாக நின்றவள் அந்த ஹரசுந்தரி இருக்கிறாள்! இருப்பினும் ஒரு பிரிவாற்றாமை அவனை உறுத்தி வந்தது. சின்னஞ்சிறு அழகிய கத்தி ஒன்று அவன் இதய பீடத்தை இருபுறமும் குத்தி வாட்டுவது போன்ற ஒரு வேதனை அவனை விட்டு அகலவே இல்லை.

ஒரு நள்ளிரவு: ஊரே ஓசை அடங்கித் தூங்கும் சமயம். திவாரணன் மெல்ல ஹரசுந்தரியின் அறைக்குள் நுழைந்தான். பழைய வழக்கம்போல் அவள் படுக்கையில் ஒருபுறமாகப் படுத்தான். ஆனால் உரிமையுடன் வராமல், திருடனைப்போல் இடம் கொண்டான். ஹரசுந்தரி எதுவுமே பேசவில்லை. திவாரணனும் வாயைத் திறக்கவில்லை. முன்னர் இருவரும் படுத்திருந்தது போல் அன்று இருந்தனர். ஆனால் இவர்களிடையே இறந்துபோன இளையவள் படுத்திருப்பது போல் ஒரு மருள் மூண்டது; அதை மீற அவர்களால் முடியவில்லை.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras 10
Managing Editor, T Sadasivam

## ஆரோக்கியத்தை விரும்புவோர் எப்பொழுதும் லைப்பாய் உபயோகித்தே நீராடுவார்

விளையாடும்போதும் சரி, வேலை செய்யும் போதும் சரி, நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும் அழுக்கிலிருந்து தப்பமுடியாது — அழுக்குதான் நோய்க்கிருமிகளின் பிறப்பிடம். அழுக்குடன் கிருமிகளைக் கழுவிக் களைந்து உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பது லைப்பாய் சோப். அன்றாடம் லைப்பாய் சோப்பினால் குளித்து அழுக்கிலுள்ள கிருமிகளினின்று உங்கள் ஆரோக்கியத்தைக் காத்துக் கொள்ளுங்கள். புதுமலர்ச்சியூட்டும் அனுபவமும் அதுவே




தயாரிப்பாளர்கள்: இந்துஸ்தான் லீவர் லிமிடெட், பம்பாய்.

L/P. 3-X29 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon